# கல்கி பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

# முற்றிலும் இது ஒரு உண்மை



நல்ல பாத்திரத்தில் தண்ணீர்...... தங்குவதுபோல் உடைந்த பாத்திரத்தில் தண்ணீர் தங்காது. அது போல், வேறு எந்த கேசத்தை கருமையாக்கும் மையும் "லோமாவைப்" போல் கேசத்தை கருமையுடன் விளங்க வைக்காது.

TAM

"லோமா" வோ மற்றவைகளைப் போல் கேசத்தை தற்காலிகமாகவும், மேலாகவும் கருப்பாக்காமல் இயற்கையாக நிரந்தரமாக கேசத்தை கருமையுடன் விளங்கச் செய்கிறது.




கருமையையும் வனப்பையும் தருபவை

ஸோல் ஏஜெண்டுகள் : எம். எம். கம்பாட்வாலா அஹமதாபாத் 1
ஏஜெண்டுகள் : வி. நரோத்தம் அண்டு கோ பம்பாய் 2 Tel 30575

சென்னை ஏஜெண்டுகள் : ஜே. பாலபாய் & கம்பெனி
260, எஸ்பிளனேட், மதராஸ் -1

ஸ்டாக்கிஸ்டுகள் :

திருவனந்தபுரம் : ராஜன் மெடிகல் ஸ்டோர்ஸ்
ஹைலெவர் வியூ, திருவனந்தபுரம்

கோயமுத்தூர் : எஸ். ஒட்டாஜி பிரான்ச்
தபால் பெட்டி, நெ. 7, கோயமுத்தூர்

சேலம் : விஜய் ஸ்டோர்ஸ், மார்க்கெட், சேலம்



மலர் 16
இதழ் 44

தமிழ்த்திரு நாடு தன்னைப் – பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

ஹேவிளம்பி
வைகாசி 20

# காங்கிரஸும் பட்ஜெட்டும்

காங்கிரஸ் ஏழைகளின் கட்சி என்று புகழ் பெற்றது. காங்கிரஸ் வளர்த்த தலைவர்கள் ஏழைகளோடு ஏழைகளாக வாழ்ந்தார்கள். அவர்கள் ஏழைகளின் உணர்ச்சிகளைப் புரிந்து கொண்டு காரியங்கள் செய்து வந்தார்கள். மகாத்மா காந்தியடிகள் பாரத நாட்டின் ஏழைமையின் சின்னமாக இடுப்பில் மட்டும் கதர் வேஷ்டியுடன் விளங்கினார். ஏழைகளின் வறுமையைப் போக்கவே அல்லும் பகலும் உழைத்து வந்தார்!

ஆனால் பாரதம் சுதந்திரம் பெற்றபின் காங்கிரஸ்காரர்களின் போக்கு வர வர மாறி வந்தது! காங்கிரஸுக்கும் ஏழை மக்களுக்கும் தொடர்பு வர வரக் குறைந்து வரத் தொடங்கியது! எனினும் மக்கள் காங்கிரஸின் பழம் சேவையை நினைத்து இன்றும் மதித்து வருகின்றார்கள்; போற்றி வருகின்றார்கள்.

ஆனால் பழைய மூலதனத்திலிருந்து எத்தனை நாட்களுக்குக் காலட்சேபம் செய்ய முடியும்? இதை இன்றையக் காங்கிரஸ் மேலிடத்தார் உணராமலில்லை! சமீபத்தில் கூடிய காங்கிரஸ் செயற் குழுவினர் காங்கிரஸில் புது உற்சாக வேகம் வேண்டும், புது இளைஞர்கள் சேர வேண்டும் என்று பேசியிருக்கின்றார்கள். காங்கிரஸுக்குப் புது உணர்ச்சியும் புது மெருகும் கொடுக்க வேண்டும் என்று வற்புறுத்தியிருக்கின்றார்கள். அதற்கு ஒரு கமிட்டியும் நியமித்திருக்கின்றார்கள்.

"படிப்பது திருவாய் மொழி; இடிப்பது பெருமான் கோயில்" என்று ஒரு பழமொழி தமிழில் உண்டு. அந்தப் பழமொழிக்கு ஏற்பவே நாட்டில் காரியங்கள் நடைபெற்று வருகின்றன.

காங்கிரஸ் மந்திரி சபை செய்யும் காரியங்களோ, காங்கிரஸ் தொண்டனை மக்களிடம் காங்கிரஸைப் பற்றி ஒரு நல்ல வார்த்தைகூடச் சொல்லவொட்டாமல் தடுக்கின்றன!

இன்றையச் சூழ்நிலையில் எந்தக் காங்கிரஸ்காரருக்காகிலும் டி. டி. கே. யின் பட்ஜெட்டைப் பற்றி நல்ல வார்த்தையாகச் சொல்லி மக்களிடமிருந்து எவ்வித ஊறும் இல்லாமல் தப்பித்து வர முடியுமா?

காங்கிரஸ் சட்ட சபை அங்கத்தினர்களிடையே, மக்கள் சபை அங்கத்தினர்களிடையே, காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினர்களிடையே இந்தப் பட்ஜெட்டைப் பற்றிப் பெரும் அதிருப்தி நிலவி வருகிறது.

உள்ளத்தில் உண்மையும், நெஞ்சில் தைரியமும் உள்ள காங்கிரஸ் தலைவர்கள் பகிரங்கமாக இந்தப் பட்ஜெட்டைத் தாக்கிப் பேசுகின்றார்கள். காங்கிரஸ் பொதுக் காரியதரிசியாக இருக்கும் ஸ்ரீமன் நாராயண் நமது பொருளாதாரத் தத்துவங்களை நன்கு அறிந்தவர். நீண்ட நாட்களாகக் காந்திய வழியில் காங்கிரஸில் தொண்டு புரிந்து வருபவர். காங்கிரஸ் கட்சியின் சார்பில் நடைபெறும் "பொருளாதாரப் பரிசீலனை" (எகனாமிக் ரெவியூ) என்னும் பத்திரிகையின் ஆசிரியராக இருந்து வருகின்றார். உலகப் பொருளாதார நிபுணர்கள் இந்தப் பத்திரிகையின் கருத்துக்களை மிகவும் மதிப்பு அளித்துப் படித்து வருகின்றார்கள்.

அந்தப் பத்திரிகையில் திரு டி. டி. கே.யின் பட்ஜெட்டைப் பற்றி ஸ்ரீமன் நாராயண் கடுமையாகத் தாக்கி எழுதியிருக்கின்றார்.

"அத்தியாவசியப் பண்டங்களின் விலைகள் ஏறுமுகமாக இருந்து வரும் இத்தருணத்தில் அதிகப்படி வரிச்சுமையை மத்தியதர வகுப்பினர்களால் தாங்க முடியாது."

# பாரம் குறையுமா ?




"சர்க்காரிலேயே அதன் சொந்தச் செலவுகள் நியாயமானதாகக் கருத முடியாதிருக்கும்போது அதிகப்படி வரிக்கு மக்களிடையே உற்சாகத்தை உண்டு பண்ண இந்திய சர்க்கார் எதிர்பார்க்க முடியாது."

இப்படிக் காங்கிரஸின் பொதுக் காரியதரிசியே கூறுகிறார். இந்த நிலையில் காங்கிரஸின் செல்வாக்கை வளர்க்க வேண்டும் என்று சொன்னால் எப்படிச் சாத்தியம் ?

ஒருவரின் செல்வாக்கு அவர்களின் செயல்களினால்தான் உயர்கிறது. செயல் ஒரு மாதிரியும் சொல் வேறு ஒரு மாதிரியும் இருப்பவர்களின் செல்வாக்கு நாட்டில் உயர்வது கஷ்டம் ! முன்பு காங்கிரஸின் செயலும் சொல்லும் ஒன்றாக இருந்தன. நாட்டில் செல்வாக்கு வளர்ந்தது. இப்பொழுது செயலும் சொல்லும் மாறுபட்டு விளங்குவதால் நிலைமை மாறி வருகிறது.

மொத்தத்தில் இந்த பட்ஜெட்டைத் தேசத்தில் காங்கிரஸ் கட்சியில் சிந்திக்கும் திறம் படைத்தவர்கள், பொருளாதார சாஸ்திரத்தை அறிந்தவர்கள், நாட்டு மக்களுக்குத் தமது உடல் பொருள் யாவும் அர்ப்பணித்த பெரியோர்கள் யாவரும் கண்டித்து வருகிறார்கள். எதற்காக? காங்கிரஸின் செல்வாக்கு தேய்ந்துவிடக் கூடாது என்பதற்குத்தான்.

ஆனால் சர்க்காரிலுள்ள காங்கிரஸ்காரர்களோ இந்தப் பட்ஜெட்டை எப்படியும் நிறைவேற்றியே தீருவது என்று பிடிவாதமாக இருக்கிறார்கள். இது எதிர்க் கட்சிக்காரர்களுக்கு நல்ல வாய்ப்பளித்து வருகிறது. கம்யூனிஸ்டுகள், சோஷலிஸ்டுகள், தி. மு. க. வினர் ஆகிய அத்தனை கட்சிகளும் இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு வருகின்றன ! உண்மையில் மக்கள் வரிப் பளுவினால் அழுந்தும்போது, அநுதாப வார்த்தை சொல்லும் கட்சிகளிடம் மக்கள் சாய்வார்கள். இதுதான் பொதுஜன இயல்பு.

இவ்வாறு திரு டி. டி. கே.யின் பட்ஜெட் எதிர்க் கட்சிகளின் பலம் பெருகுவதற்கு நல்ல சூழ்நிலையை உண்டாக்கி யிருக்கிறது !

சென்ற வாரம் தபால் இலாக்கா குமாஸ்தாக்கள் சென்னையின் பல பகுதிகளில் கூடி விவாதித்தார்கள். அவர்கள் கூட்டத்தில் என்ன பேசிக் கொண்டார்கள் தெரியுமா ?

"விலைவாசிகள் ஏறுமுகமாக இருக்கின்றன! நாங்கள் பெற்று வரும் ஊதியம் போதவில்லை. எங்கள் சம்பளங்களை உயர்த்த வேண்டும். அதனால் எங்கள் குறைகளைக் கேட்க ஒரு சம்பளக் கமிஷன் வேண்டும். இல்லையேல் வேலை நிறுத்தம் செய்வோம்!" என்று மிரட்டி யிருக்கின்றனர்.

அவர்கள் இன்னும் என்ன சொல்லுகிறார்கள் தெரியுமா? "நாங்கள் எங்கள் குறைகளை இரண்டு மாதங்களுக்கு முன்பே சர்க்காருக்குத் தெரிவித்தோம். தேர்தல் குறுக்கிட்டதால் ஒன்றும் செய்யவில்லை. இனியும் எங்கள் குறைகளைக் கேட்கவில்லை எனில் நிச்சயம் வேலை நிறுத்தம்தான்!" என்கிறார்கள்.

இந்தக் கூட்டத்துக்கு வந்த சென்னை தொழிலாளர் மந்திரி திரு ஆர். வெங்கடராமன் அவர்கள், "நீங்களும் ரயில்வே ஊழியர்களும் சேர்ந்து வேலை நிறுத்தம்

செய்து விட்டால் நாட்டில் எத்தகைய குழப்பம் ஏற்பட்டுவிடும். என்றால் அந்த பயங்கர உற்பாத நிலையைக் கற்பனை செய்து கூடப் பார்க்க முடியவில்லை!'' என்றார்.

இந்தக் கூட்டத்தில் பேசிவிட்டு, அடுத்தாற் போல் வேறொரு கூட்டத்துக்குச் சென்ற இதே மந்திரி திரு வேங்கடராமன், டி. டி. கே. அவர்களின் பட்ஜெட்டை வரவேற்றுப் பேசியிருக்கிறார்! இதன்பொருள் என்ன?

டி. டி. கே. பட்ஜெட்டுக்கு அளிக்கும் வரவேற்பு நாட்டின் விலைவாசிகளின் உயர்வுக்கு அளிக்கும் வரவேற்பு என்பது அவருக்குத் தெரியாதா?

விலைவாசிகளின் உயர்வுடன் தபால் ஊழியர்களின் வேலை நிறுத்தம், ரயில்வே ஊழியர்களின் கிளர்ச்சி, என். ஜி. ஓ. சிப்பந்திகளின் கிளர்ச்சி — பாங்க் ஊழியர்களின் கிளர்ச்சி இப்படி மீண்டும் பழைய கிளர்ச்சிகள் எல்லாம் தொடர்ந்து நடைபெறுவதற்கு வெற்றிலை பாக்கு வைத்து அழைப்பது போல் அல்லவா இருக்கிறது!

இதற்காகவா ஒரு பட்ஜெட்?

இல்லை; இந்த பட்ஜெட் நமது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்துக்கு நிதி திரட்டுவதற்காகத் தயாரித்த பட்ஜெட் என்று டி. டி. கே. கூறுகிறார்.

ஆனால் திட்டம் எப்படிப் போட வேண்டுமோ, அப்படிப் போடாமல் தவறான கொள்கையின் அடிப்படையில் போட்டதாலேயே இவ்வளவு கடும் வரி விதிப்புகளெல்லாம் தேவைப்படுகின்றன.

நமது நாட்டிலுள்ள பெரும் மூலதனம் உடலுழைத்து வேலை செய்யக்கூடிய பெரும் மக்கள் கூட்டமே. அவர்களே நம் செல்வம். அவர்கள் பணம் கொடுக்க இயலாத ஏழைகள். அவர்களிடமிருந்தும் மறைமுகமாக இந்தத் திட்டத்துக்குப் பணம் வாங்க முற்பட்டிருக்கிறார் டி. டி. கே. அதனால்தான் இந்தக் கடும் வரிகள்!

நாட்டின் மூலதனமாகிய மக்கள் உடல் உழைப்பைக் கொண்டு ஒரு திட்டம் தயாரிப்பதற்குப் பதில், நிதி திரட்டிக் கூலி கொடுத்து வேலைகள் சாதித்துக் கொள்ளத் திட்டமிட்டிருக்கிறார்கள்.

ருஷ்யாவிலும் சீனாவிலும் மக்களைப் பலாத்காரமாக வேலை வாங்கியதாலேயே பல திட்டங்கள் நிறைவேறியுள்ளன. நம் நாட்டில் நமது சர்க்கார் அத்தகைய பலாத்கார முறைகளைக் கைக்கொள்ளத் தயாராயில்லை. ஐந்தாண்டுத் திட்டத்திலுள்ள திட்டங்களை நல்ல சூழ்நிலையில், வேலைசெய்யும் ஊழியர்களுக்கு வயிறாரக் கூலி கொடுத்து நிறைவேற்ற நாம் திட்டமிட்டிருக்கும்போது, அந்த ஐந்தாண்டுத் திட்டத்தைத் தளர்த்துவதிலும், வரிகள் சிலவற்றை வாபஸ் பெறுவதிலும் நமக்குக் கண்ணியக் குறைவில்லை. அதற்கு மாறாக நமது பெருமையும் மதிப்பும் பெருகும்; காங்கிரஸின் செல்வாக்கும் வளரும்!

ஆனால் இந்த பட்ஜெட்டுக்கு ஆதரவு அளிப்பவர்களும் இல்லாமற் போகவில்லை. திரு ஈ. வெ. ரா. அவர்கள் தமது மகத்தான ஆதரவை நல்கி வருகிறார்.

# அநுராதபுரியில் வழிபாடு

சுமார் இரண்டாயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னால் ஈழநாட்டில் உள்ள அநுராதபுரத்துக்கு புத்த பிரானின் அன்பு மதத்தைக் கொண்டு ஒரு மகா புருஷர் சென்றார். வஞ்சகம், பொய், சூது, வாது, கொலை, களவு முதலான தீய செயல்களை விட்டு அன்புப் பாதையில், அஹிம்சை வழியில் மக்களை அணைத்துக்கொண்டு செல்லும் ஒரு புதிய சித்தாந்தத்தைப் பாரத புண்ணிய பூமியிலிருந்து கொண்டு வந்து இலங்கையில் நிலை நிறுத்தினார். இருபத்து மூன்று நூற்றாண்டுகளுக்குப் பின்னால் பாரதத்திலிருந்து இன்னொரு மகா புருஷர் சென்ற மாதம் இலங்கைக்குச் சென்றார். புத்தர் பிரானின் அன்புத் தொண்டை அகில உலகமும் பரப்புவதற்கு இன்றையதினம் அரும்பாடு பட்டுவரும் சமாதான தூதர், பாரதத்தின் பிரதமர் பண்டித ஜவாஹர்லால் நேரு பழைய அநுராதபுரத்துக்குச் சென்றார். அங்கிருந்து அணுகுண்டை ஒழித்து உலகில் அன்பைப் பரப்புவதற்கு வேண்டுகோள் விட்டார்.

தமிழ் மக்களும் சிங்கள மக்களும் சகோதரர்கள்போல் வாழ்ந்து வந்த பழம்பெரும் பண்புக்கும், சைவமும் பௌத்தமும் ஒன்றுக்கு ஒன்று துணையாக ஓங்கி நின்ற உன்னதத்துக்கும் இன்றும் மௌனமாகச் சாட்சி கூறி நிற்கிறது அநுராதபுரம். இந்த நகரத்துக்கு ஜவாஹர்லால் நேரு விஜயம் செய்ததன் காரணமாக மீண்டும் தமிழ் மக்களும் சிங்கள மக்களும் சகோதரர்களைப்போல சம அந்தஸ்துடன் வாழ்வதற்கு இலங்கை சர்க்கார் வழி வகுக்கும் என்று எதிர்பார்க்கிறோம்.

சர்வமத கோட்பாடுகளுக்கும், மக்கள் குல ஒருமைப்பாட்டுக்கும், அன்பு வழிக்கும், அஹிம்ஸை சித்தாந்தத்துக்கும் சிகரமாக விளங்கிய அநுராதபுரியில் சமாதி புத்தர் கோயில் கொண்டிருக்கிறார். தாம் உயிருடன் வாழ்ந்த காலத்தில் அல்லும் பகலும் அனவரதமும் எந்த இலட்சியத்துக்காகத் தொண்டாற்றினாரோ அதே தொண்டை இன்று சிலை உருவில் இருந்து செய்து வருகிறார். அன்புத் தெய்வமான அந்தப் போதிக் கடவுளின் சந்நிதியில் மக்கள் மலர் தூவி வழிபடும் முறை பார்த்துப் பார்த்து அநுபவிக்க வேண்டிய அற்புதக் காட்சியாகும். இந்த இதழ் அட்டையில் ஒரு சிங்களப் பெண்மணி புத்தர் சந்நிதியில் தாமரை மலருடன் நிற்கும் காட்சியையும் கீழே புகழ்பெற்ற அநுராதபுரி தகோபா சிகரத்தையும் வண்ணச் சித்திரமாக வழங்கியிருக்கிறார் நமது ஓவியக் கலைஞர் விஜய. இந்தப் புனித நகரத்துக்குள் பாரதத்தின் பிரதமர் ஜவாஹர்லால் நேரு சென்று 'ஜெயந்தி மாவத்தை' அதாவது ஜெயந்தித் தெரு என்ற ஒரு புதிய சாலையைத் திறந்து வைத்துப் பழைய காலத்து அநுராதபுர நகரத்தைப் பார்வையிட்ட சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த வைபவங்களை அடுத்து வரும் ஈழ நாட்டுப் பிரயாணக் கட்டுரையில் காணலாம்.

# ஆந்திரர்களின் அன்புத் தலைவர்

ராஜாஜி

வாழ்க்கையில் ஏற்படும் கஷ்டங்கள் எல்லாம் பொதுமக்கள் காட்டும் பேரன்பில் கரைந்து போகும் என்றால், ஸ்ரீ பிரகாசம் பெற்றது போன்ற மக்களின் பேர் அன்பு வேறு யாரும் பெறவில்லை! பொதுமக்களின் பேரன்பிலே அவர் தமது சொந்த கஷ்ட நஷ்டங்களைப் பொருட்படுத்தாமல் வேலை செய்தார். ஸ்ரீ பிரகாசம் தமது வாழ்வின் இறுதி நாள் வரை வாழ்க்கையில் எவ்வளவு இன்னல்களுக்கு ஆளானார் என்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம்.

தெய்வ பக்தி மிக்க அவரது மனைவி வெகு காலத்துக்கு முன்பே இரண்டு புதல்வர்களை அவரிடம் விட்டு விட்டு இறைவனடி சேர்ந்தார். அந்தப் புதல்வர்களால் ஸ்ரீ



பிரகாசம் அனுபவித்த தொல்லைகள் பல. அவர் நல்ல குணமும் அஞ்சா நெஞ்சமும் படைத்தவராதலால், அந்த வேதனையையெல்லாம் சகித்துக் கொண்டார்.

இதை இப்போது நான் குறிப்பிடும்போது, என் மனம் பல ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்த ஒரு சம்பவத்தை நாடிச் செல்லுகிறது. அப்போது ஒரு நாள் திரு எஸ். ராமநாதன் ஒரு நற்செய்தியைக் கொண்டு வந்தார்.

அதாவது 1920-ம் வருஷம். நாங்கள் ஒத்துழையாமை இயக்கத்தைத் தொடங்கி, நீதி மன்றங்கள், சட்ட சபைகள், கலாசாலைகள் முதலியவற்றைப் பகிஷ்காரம் செய்தோம். ஒத்துழையாமை இயக்கத்தில் ஸ்ரீ பிரகாசமும் சேர்ந்து கொள்ளப் போகிறார் என்பதே அந்தச் செய்தியாகும். அப்போது ஸ்ரீ பிரகாசம் வக்கீல் தொழிலில் மிகுந்த புகழ் பெற்று ஏராளமான பொருள் ஈட்டி வந்தார். அவர் வக்கீல் தொழிலை விட்டு விட்டு, ஒத்துழையாமை இயக்கத்தில் சேரப்போகிறார் என்ற செய்தியை நம்பவே முடியவில்லை.

ஆனால், அந்தச் செய்தி உண்மைதான். காந்திஜி சிறையில் இருந்தபோது, நாங்கள் பகிஷ்கார இயக்கத்தைத் தொடர்ந்து நடத்த வேண்டியிருந்தது. அப்போது நடைபெற்ற எல்லாப் போராட்டங்களிலும் ஸ்ரீ பிரகாசம் எனக்குப் பக்கபலமாக இருந்து பூரண ஆதரவு அளித்து வந்தார். அவை எல்லாம் எளிதான போராட்டங்கள் அல்ல. ஏனெனில், எதிர்க் கட்சியில் செல்வாக்கும் சக்தியும் வாய்ந்த சி. ஆர். தாஸ், மோதிலால் நேரு, வித்தல் பாய் பட்டேல், எஸ். சீனிவாச ஐயங்கார் போன்றவர்கள் இருந்தார்கள். எங்கள் பக்கத்தில் வல்லபாய் பட்டேலும், பெரும்பாலான காங்கிரஸ்வாதிகளும் இருந்தனர்.

பல வருஷங்கள் அவ்விதம் அஞ்சாது போராடியபின் மோதிலால்நேருவின் மயக்கம் தெளிந்தது. அவர் நோய்வாய்ப் பட்டு விட்டார். அவர் மரணம் அடைவதற்குச் சில தினங்களுக்கு முன், தாங்கள் கைக்கொண்டுள்ள முறையில் தமக்கு நம்பிக்கையில்லை என்றும் சட்ட சபைகளைப் பகிஷ்கரிக்க வேண்டும் என்றும் என்னிடம் கூறினார்.

ஆனால், அதை யெல்லாம் இச் சந்தர்ப்பத்தில் கூறுவது உசிதமல்ல. அவை எல்லாம் இறுதியாக வெற்றியில் முடிந்த சுதந்திரப் போராட்டத்தின் பல்வேறு கட்டங்களாகும்.

நாங்கள் பல தடவைகள் சிறை சென்றபின், 1937-ல் சர்க்கார் நிர்வாகத்தைக் கைக்கொண்டோம். பிரகாசமும் என்னுடன் சேர்ந்து கொண்டார். முதல் மந்திரி பதவியை ஏற்றுக் கொள்ளும்படி அவர் என்னை மிகப் பெருந்தன்மையுடன் கேட்டுக் கொண்டார். மந்திரி சபையில் என்னுடைய சகாவாகத் தொண்டு புரியவும் முன் வந்தார்.

சர்க்கார் நிர்வாகம் சம்பந்தப்பட்ட வரையில் அவரது கருத்துகளும் என் கருத்துகளும் முற்றிலும் வேறானவை. எனினும் அந்தக் கருத்து வேற்றுமையானது, எங்கள் நட்புக்கோ அல்லது ஒத்துழைப்புக்கோ குந்தகமாக இருக்கவில்லை. இரண்டாவது உலக யுத்தம் மூண்டதும் நாங்கள் பதவிகளை ராஜிநாமா செய்து விட்டோம்.

ஸ்ரீ பிரகாசம் தலைவர் பதவிக்கு உள்ள பல குணவிசயங்களும் வாய்க்கப் பெற்றிருந்தார். இது அவரது நீண்டகால வாழ்க்கையில் நன்கு வெளியாயிற்று. நல்ல காலத்திலும் சரி, கெட்டகாலத்திலும் சரி, மக்கள் அவரை மிகவும் மரியாதையுடனும் மேன்மையாகவும் நடத்தினார்கள். இன்று ஆந்திர ராஜ்யத்தில் அந்த மாபெரும் தலைவரின் மறைவைக் குறித்துத் துக்கப்படாதவர் ஒருவர்கூட இல்லை.

எதிர்காலத்தில் ஆந்திர ராஜ்யம் எவ்வளவோ முன்னேற்றமடைய வேண்டும். பல ஆக்க வேலைகளை நிறைவேற்ற வேண்டும். ஆந்திர மக்களுக்கு நல்ல தலைவர்கள் கிடைக்க ஆண்டவன் அருள் புரிவானாக!

# வம்புச் சாவடி

வெங்கு

ஸ்ரீமதி ராஜகுமாரி அம்ருத கௌரி அவர்கள் சென்ற வாரம் டி. டி. கே.யின் பட்ஜெட்டைப் பற்றி ரொம்பக் காரசாரமாகப் பேசினார். இதைப் படித்த நேயர்கள் விஷயத்தை விட்டுவிட்டு அம்ருதகௌரி அவர்களைப் பார்த்து ஆச்சரியப்படத் தொடங்கி விட்டனர்! நேற்றுவரை சர்க்காரில் மந்திரியாக இருந்து, சர்க்கார் செய்து வந்த முட்டாள்தனமான பல காரியங்களுக்கெல்லாம் ததாஸ்து பாடி வந்த அந்த அம்மாளுக்குத் திடீரென்று என்ன வந்து விட்டது என்ற வியப்புத்தான் அவர்களுக்கு ஏற்பட்டது. ஆம், அம்ருத கௌரி சுகாதார மந்திரியாக இருந்தபோது பி. ஸி. ஜி விஷயத்தில் காண்பித்த பிடிவாதத்தையும் அசட்டுத்தனத்தையும் யாரால் மறக்க முடியும்! அந்த மாதரசி இவ்வளவு வேகத்தோடு பட்ஜெட்டை, சர்க்காரைத் தாக்கி யிருக்கிறார் என்றால் வியப்பு ஏற்படுவது இயல்புதானே?

பட்ஜெட்டைத் தாக்க வந்த அம்மையார் இன்னொரு அனாவசியமான விஷயத்தையும் குறிப்பிட்டுக் குட்டையைக் குழப்பியிருக்கிறார்! மதுவிலக்கை வெற்றிகரமாக அமுல் நடத்த முடியவில்லை என்றால் மது விலக்கையே ரத்து செய்யலாம் என்று சொல்லி யிருக்கிறார். இவ் விஷயம் இத்துடன் நின்றிருந்தால்கூடத் தேவலை. ஆனால் மகாத்மா காந்தியின் பெயரைக்கூட இழுத்திருக்கிறார். மது விலக்கை வெற்றிகரமாக அமுல் நடத்த முடியாத இந்தச் சர்க்காரின் கையாலாகாத் தனத்தைப் பார்த்து, ''முதலில் மது விலக்கை ரத்து செய்யுங்கள்!'' என்று காந்தி மகான் சொல்லி யிருப்பாராம்!

இவரை விட மகாத்மாவின் உள்ளத்தை நன்கு அறிந்த ஒருவர், ''மகாத்மா காந்தி ஒரு நாளும் மதுவிலக்கை ரத்து செய்யுங்கள் என்று சொல்லி யிருக்க மாட்டார். மது விலக்கு வெற்றியடைய வில்லையா? அப்படியானால் நான் உண்ணாவிரதம் இருக்கிறேன் என்று சொல்லியிருப்பார்!'' என்கிறார். காந்தி மகானின் உண்ணாவிரதம், சர்க்காரையும் சுறுசுறுப்பாக வேலை செய்யத் தூண்டியிருக்கும். குற்றம் செய்யும் மக்களின் உள்ளத்தையும் தொட்டு அவர்கள் தவறு இழைக்காமல் தடுத்து நிறுத்தி யிருக்கும்! அவர்கள் உய்ந்திருப்பார்கள்.

மதுவிலக்கு விஷயத்தில் சென்னை சர்க்காரைப் பாராட்ட வேண்டும். சமீபத்தில் நமது போலீஸ் மந்திரி திரு பக்தவத்ஸலம் அவர்கள் மது விலக்கை நல்ல முறையில் அமுல் நடத்தத்தீர்மானித்துச் சில நடவடிக்கைகளும் எடுத்துக் கொண்டார். அதன் விளைவாகச் செங்கல்பட்டு, சென்னை முதலிய பல இடங்களில் நல்ல பயன் கிடைத்திருக்கிறது! இதே வேகமும் சுறுசுறுப்பும் இன்னும் சில மாதங்கள் தொடர்ந்து நமது ராஜ்யத்தின் மற்ற ஜில்லா போலீஸ் அதிகாரிகளும் காண்பித்தார்களானால் மதுவிலக்கு நிச்சயம் வெற்றி பெற்று விடும்!

* * *

சென்ற வாரம் குறளாசிரியருக்கு 'ஏகக் கிராக்கி' ஏற்பட்டு விட்டது இதற்குக் காரணம் டி. டி. கே. சமர்ப்பித்த பட்ஜெட்தான்!

சென்னையில் பட்ஜெட்டைப் பற்றி நடைபெற்ற விவாத அரங்கில் ராஜாஜி கலந்து கொள்வதாக அறிவிக்கப்பட்டது. அன்று ராஜாஜியின் பேச்சைக் கேட்கத் திரண்ட கூட்டம் இவ்வளவு அவ்வளவல்ல! தெருவெல்லாம் மக்கள் நின்று கேட்டனர்.

ராஜாஜி தமது நண்பர் அல்ல என்று டி. டி. கே. கூறியதற்கு, ராஜாஜி என்ன பதில் சொல்லப் போகிறார்? இந்த விடையைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவலில் மக்கள் அவ்வளவு பெரும் கூட்டமாக வந்திருந்தனர். அதற்கு ராஜாஜி வெகு சுலபமாகப் பதில் அளித்து விட்டார்.

''டி. டி. கே. என்னுடைய நண்பர். அதனால் தான் அவர் பட்ஜெட் திட்டத்திலுள்ள குறைகளை எல்லாருக்கும் முந்தி எடுத்துச் சொன்னேன். குறளாசிரியர் 'நட்பு என்பது சும்மா சிரித்துக் களிப்பதற்கு மட்டும் ஏற்பட்ட

## பிரார்த்தனைக் கூட்டம்

— கிண்டி ராஜபவனம் —

## காந்தி மண்டபத்தில்

மே 31-ந் தேதி வெள்ளிக்கிழமை மாலை 5-30 மணிக்கு

ஸ்ரீமான் டி. எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரிகள்

''அங்குலியப் பிரதானம்'' கதாகாலட்சேபம் செய்வார்கள்

நாகஸ்வர இன்னிசை - தக்கர் பாபா வித்தியாலய மாணவர்கள், சாரதா வித்தியாலய போதனா முறைப் பயிற்சிப் பள்ளி மாணவியரின் நூற்பு யக்ஞம், கீதை பாராயணம், ராமநாம பஜனை

தல்ல. நண்பன் தவறான வழியில் செல்லும் போது விரைந்து மேல் சென்று அவன் செய்யும் தவற்றை மனத்தில் படும்படி இடித்துச் சொல்லுவதே நண்பனின் கடமை'' என்று வன்மையாகக் கூறியிருக்கிறார்.

**நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்**
**மேற்சென்(று) இடித்தல் பொருட்டு**

குறளாசிரியர் சொன்னபடிதான் நான் நடந்து கொண்டிருக்கிறேன்!'' என்றார்.

இதைக் கேட்ட சபையோர்கள் உள்ளம் எப்படி நெகிழ்ந்திருக்கும் என்பதைச் சொல்லத் தேவையில்லை!

* * *

இந்தப் பட்ஜெட்டைப் பற்றி லட்சுமிபுரம் இளைஞர் சங்கத்தில் பேசிய திரு ஆர். வி. கிருஷ்ணய்யர் அவர்களும் ஒரு திருக்குறளை மேற்கோள் எடுத்துக் காட்டிப் பேசியிருக்கிறார்! சொத்து வரியைப் பற்றிக் குறிப்பிட்ட போது குறளைக் கூறினார்.

''சர்க்காரிடம் சகல சக்தியும் இருக்கிறது. வரி செலுத்தாவிட்டால் கடும் தண்டனை விதிப்பார்கள் அல்லவா? வழிப்பறிக் கொள்ளைக்காரனிடத்தும் வேல், வாள் முதலிய பயங்கர ஆயுதங்கள் உண்டல்லவா? அவன் அந்த வேலைக் காட்டி வழிப் போக்கர்களை வழி மறித்து, 'உன்னிடமுள்ள பொருளைக் கீழே வை' என்று மிரட்டுகிறான். அதைப் போன்றதுதான்...சர்க்காரின் இந்தச் சொத்துவரி விதிப்புத் திட்டம்'' என்றார்.



**வேலொடு நின்றான் இடுவென்றது போலும்**
**கோலொடு நின்றான் இரவு!**

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தெய்வப் புலமை திருவள்ளுவர் எழுதி வைத்த இரண்டு குறள் பாக்களுக்குள் எவ்வளவு பொருள் அழுந்திக் கிடக்கின்றன என்பது டி. டி. கே.யின் பட்ஜெட்டினால் நமக்குத் தெரிய வந்தது! அந்த அளவுக்கு டி. டி. கே. நமது பாராட்டுக்குரியவராகிறார்!

* * *

சென்றவாரம் தென்னிந்திய ரயில்வே ஜெனரல் மானேஜர் பத்திரிகை நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் சென்ற வருஷம் வரவு செலவுக் கணக்குகளையும் நிறைவேற்றியுள்ள காரியங்களையும் பற்றி விளக்கினார். அப்பொழுது அவர் கூறிய ரஸமான சம்பவம்:

ஒரு நாள் ஜெனரல் மானேஜருக்கு ஒரு கடிதம் வந்ததாம். அதில் செங்கல்பட்டிலிருந்து ஒருவர் தினம் சென்னைக்கு டிக்கெட்டில்லாமலே வருஷக் கணக்கில் பிரயாணம் செய்து வருகிறார் என்றும், அவரை இதுவரை எந்த டிக்கெட் பரிசோதகரும் பிடிக்கவில்லை என்றும் எழுதியிருந்தாராம். அதில் அந்த நபருடைய அங்க அடையாளங்கள் எல்லாம் கொடுத்து, வேண்டுமானால் தான் சொல்வது உண்மையா இல்லையா என்று சோதனை செய்து பார்த்துக் கொள்ளலாம் என்றும் எழுதியிருந்தாராம். இன்னொரு விஷயம், அந்த டிக்கெட்டில்லாப் பிரயாணி தினம் செங்கல்பட்டிலிருந்து சென்னை வரும் 'ஸ்பெஷல் ரயிலில்'தான் வருவாராம். ஒரு நாளாவது அந்த வண்டியை மாற்றியது கிடையாது என்றும் எழுதியிருந்தாராம்!

இந்தக் கடிதம் கிடைத்ததும் அந்த நபரைப் பிடிக்க ஏற்பாடு செய்யப்பட்டது! அப்படியே ஒரு நபரும் பிடிபட்டார். அவருக்குக் கடுமையாக அபராதம் ரூ. 50 தீட்டப்பட்டதாம்! பிறகு அந்த நபரின் அங்க அடையாளங்களையும், கடிதத்தில் காணப்பட்ட அங்க அடையாளங்களையும் ஒப்பிட்டுப் பார்த்தபோது இவர் வேறொருவர் என்பது தெரிந்தது! ஏதோ எதேச்சையாக டிக்கெட்டில்லாமல் பிரயாணம் செய்தவர் என்பதும் தெரிந்தது. பாவம், அநாவசியமாகக் கடும் தண்டனைக்கு அவர் ஆளானார்!

பரம்பரையாக டிக்கெட்டில்லாமல் பிரயாணம் செய்யும் அந்த நபரைப் பிடிக்க மீண்டும் முயற்சி எடுக்கப்பட்டது. இந்தத் தடவை அவர் பிடிபட்டார். கடிதத்தில் கண்ட வர்ணனைக்கு ஏற்றபடி யிருந்தார். இந்தத் தடவை அவருக்குக் கடும் தண்டனை விதிக்கப்பட்டது.

இப்படி வருஷக் கணக்கில் டிக்கெட்டில்லாமல் பிரயாணம் செய்த அந்த நபர் ஒரு படித்த 'குமாஸ்தா' என்று தெரிந்ததாம்!

படித்தவர்களே துணிந்து டிக்கெட்டில்லாமல் பிரயாணம் செய்தால் மற்றவர்களைப் பற்றி என்ன சொல்வது என்கிறார் ரயில்வே மானேஜர் திரு ஜோஸப். படிக்காதவர்கள் நிச்சயம் டிக்கெட் வாங்கிக் கொண்டு பிரயாணம் செய்வார்கள் என்று நம்பலாம் என்கிறார் ஒரு நண்பர்.




ஆமாம், இந்த இளங்கோ அடிகள் எந்த மதத்தைச் சார்ந்தவர்?

'சமண மதந்தான். அவர் ஒரு ஜைன சந்நியாசி. இதில் என்ன சந்தேகம்?' என்று பலர் சொல்லி வந்தார்கள்.

'அதெப்படிச்சொல்லலாம்? இளங்கோ அடிகள் சமண மதத்து உறுதிப் பொருளான அருகனைப்பற்றி மட்டுந்தானா பேசியிருக்கிறார்? பல சமயங்களைப் பற்றியும் அந்த அந்தச் சமயத்தில் வழிபடப் பெறும் கடவுளரைப் பற்றியும், தமது காவியத்தில் பாடியிருக்கிறாரே? அவர் எந்தச் சமயத்தைச் சார்ந்தவர் என்று திட்டமாகச் சொல்ல முடியாது. அவருடையநோக்கு பொதுநோக்கு.' இந்தக் கருத்தை, (சொற்கள் என்னுடையவை) சில நாட்களுக்கு முன், ஒரு பத்திரிகையில் வெளியான கட்டுரை ஒன்றில் கண்டேன். எனக்கு ஒரே உற்சாகம். ஆனால் கட்டுரையின் முடிவு என்னைத் தூக்கி வாரிப் போட்டது.

'இளங்கோ அடிகள் ஒரு வைணவர் என்ற கட்சி தலைதூக்கவில்லை. சமணர் என்ற கட்சியோ தவறு. ஆகவே இப்போது உள்ளது போலவே, அவர் சைவராகவே இருந்து விட்டுப் போகட்டும்' என்ற கருத்தோடு (சொற்கள் என்னுடையவை) அந்தக் கட்டுரை முடிந்தது. இளங்கோ அடிகள் சைவரோ என்னவோ, கட்டுரை எழுதியவர் சைவர் என்பது உள்ளங்கை உருத்திராக்க மணி போல் 'தெற்றென விளங்கியது'.

ஆனால் இந்த இளங்கோ அடிகளுக்கு இதுவும் வேண்டும், இன்னமும் வேண்டும். பின் எதற்காக ஐயா, இவர் சிவபெருமானைப் பற்றி,

'**பிறவா யாக்கைப் பெரியோன்**'

என்றும்,

'**ஆதியில் தோற்றத்து அறிவன்**'

என்றும், பழுத்த சைவரைப் போலப் பேச வேண்டும்?

அது மட்டுமா செய்கிறார்?

"**பெரியவனை, மாயவனை, பேர் உலகம்**
**எல்லாம்**
**விரிகமல உந்தி உடை விண்ணவனை,**
**கண்ணும்**
**திருவடியும், கையும், திருவாயும் செய்ய**
**கரியவனை, காணாத கண் என்ன கண்ணே!**
**கண் இமைத்துக் காண்பார்-தம் கண்**
**என்ன கண்ணே!**

[உந்தி உடை-வயிற்றை உடைய; விண்ணவனை-பரம பதத்தில் உள்ளவனை; செய்ய-சிவந்த; கண் இமைத்து-கண்ணைக் கொட்டி]

இது ஏதோ ஆழ்வார் ஒருவர் பாடிய பாட்டாகத் தோன்றுகிறதே தவிர, ஜைனத் துறவி பாடியதாகவா தோன்றுகிறது? இல்லை. திருமாலின் பெருமையையும், அன்புடையவர்க்கு அவன் காட்டும் எளிமையையும் (இதை வைணவர்கள் ஸௌலப்யம் என்று பேசுவார்கள்) எவ்வளவு உணர்ச்சியோடு பாடுகிறார் துறவி:

'**வடவரையை மத்து ஆக்கி, வாசுகியை**
**நாண் ஆக்கி**
**கடல் வண்ணா! பண்டு ஒரு நாள் கடல்**
**வயிறு கலக்கினையே;**
**கலக்கிய கை அசோதையார் கடைகயிற்றால்**
**கட்டுண்கை;**
**மலர்க் கமல உந்தியாய்! மாயமோ?**
**மருட்கைத்தே!**

[வரையை-மலையை; நாண்-கயிறு; பண்டு-முன்பு; மருட்கைத்தே-ஒன்றும் புரியவில்லையே. ஒரே புதிராக அல்லவா இருக்கிறது. என்ன வியப்பு இது?]

'மந்தர மலையை மத்தாகவும் வாசுகி என்ற பாம்பைக் கயிறாகவும் கொண்டு, பாற்கடலைக் கடைந்த அந்த தெய்வக் கை அல்லவா, கிருஷ்ண அவ

பேராசிரியர்: அ. சீநிவாசராகவன்



தாரத்தில், யசோதையின் கடை கயிற்றால் கட்டுண்டு நின்றது. இறைவனுடைய எளிமைக்குத்தான் எல்லை உண்டா? யாரால் அதன் பொருளை உணர முடியும்?' இப்படியாகப் பாடி வியக்கிறார் இளங்கோ அடிகள். இவர் என்ன, வைணவரா?

முருகனைப் பற்றியும் பாடுகிறார்:

**அணி முகங்கள் ஓர் ஆறும், ஈர்-ஆறு கையும்**
**இணை இன்றித் தான் உடையான் ஏந்திய**
**வேல்-அன்றே-**
**பிணி முகம் மேற்கொண்டு, அவுணர் பீடு**
**அழியும் வண்ணம்**
**மணி விசும்பின் கோன் ஏத்த, மாறு அட்ட**
**வெள் வேலே.**

*[பிணிமுகம்-மயில்; மேற்கொண்டு-ஏறி; அவுணர்-அசுரர்; பீடு-பெருமை, வலிமை; மணி விசும்பின் கோன்-நீலமான வானத்தின் தலைவன், இந்திரன்; ஏத்த-தொழ; மாறு-பகைவர்; அட்ட-அழித்த.]*

வேடுவரின் காளியைப் புகழ்கிறார்:

**ஆனைத்தோல் போர்த்து, புலியின் உரி உடுத்து,**
**கானத்து எருமைக் கருந்தலைமேல் நின்றாயால்-**
**வானோர் வணங்க மறைமேல் மறை ஆகி,**
**ஞானக் கொழுந்து ஆய், நடுக்கு**
**இன்றியே நிற்பாய்.**

*[உரி-தோல்; மறை-வேதம்; ஆய்-ஆகி; நடுக்கு இன்றியே-அசைவு இல்லாத சத்தியப் பொருளாய்.]*

சமணக் கடவுளான ஜினதேவன் அல்லது அருகனைப் பற்றியும் நீண்ட புகழ் பாடப் பெறுகிறது:

**குறைவு இல் புகழோன், குணப் பெருங்**
**கோமான்**

**சங்கரன், ஈசன், சயம்பு, சதுமுகன்,**
**அங்கம் பயந்தோன், அருகன், அருள்முனி,**
**பண்ணவன், எண்குணன், பாத்து இல் பழம்**
**பொருள்**

**விண்ணவன், வேதமுதல்வன்.....**

***[இல்-இல்லாத; சயம்பு-தானாகவே தோன்றியவன்; சதுமுகன் — நான்முகன்; அங்கம் பயந்தோன்-அங்கம் என்ற ஆகமத்தை அருளியவன்; அருகன்-போற்றத் தகுந்தவன்; பண்ணவன்-கடவுள்; பாத்து இல்-பகுத்து உணர முடியாத.]***

ஒன்று தெரிகிறது. இளங்கோ அடிகள் எந்தச் சமயத்தைச் சேர்ந்தவராயினும், எல்லாச் சமயங்களையும் ஒன்றாகக் காணும் சமநோக்கு அவருக்கு இருந்தது என்பது நன்றாகத் தெரிகிறது.

நீங்கள் கேட்கலாம்: 'இந்தப் பாடல்கள் கதையிலே வரும் பாத்திரங்களின் மூலமாகப் பேசப் பட்டவை அல்லவா? அந்த அந்தப் பாத்திரத்தோடு ஒட்டி நின்று இளங்கோ பேசுகிறார், அவ்வளவு தானே? எல்லாச் சமயங்களையும் சம நோக்கோடு **அவர்** பார்க்கிறார் என்று எப்படிச் சொல்ல முடியும்?'

மற்றவர்கள் என்ன உணர்கிறார்களோ அதில் பங்கு கொள்வது அவ்வளவு எளிதான காரியம் என்றா நினைக்கிறீர்கள்? பொதுவாக, நம்முடைய இன்ப துன்பங்களில் அழுந்தி, பிறரைப் பற்றி எண்ணக் கூட முடியாமல், நம்முடைய சிறுமைக் கூட்டுக்குள்ளே முடங்கிக் கிடக்கிறோம். ஏதோ அருமையாக, நம்மோடு மிக நெருங்கிய ஓரிருவருடைய துயரத்திலோ களிப்பிலோ ஓரளவு ஈடுபடுகிறோம். மிகுந்த அளவுக்கு, பிறருடையவாழ்க்கையைத் தம்முடைய வாழ்க்கையாகவே கருதி, அவர்களுடைய துயரத்தைத் துடைப்பதில் காலம் முழுவதையும் செலவிடும் பெரியவர்கள் கூட, பிறருடைய கடவுளரைத் தம் கடவுளராக எண்ணி வழிபட முடிவதில்லை. அது அவ்வளவு கடினமான சாதனை. அந்த அளவுக்குத் தம்மைமறக்கவோ, உண்மையின் அலகிலாத் தன்மையில் ஊன்றவோ பெரும்பாலோருக்கு முடிவதில்லை.

ஆனால், கவிஞனுக்கு முடிகிறது; பிறருடைய வாழ்க்கையை முழுவதும் தன்னுடையதாக எண்ணி, அவர்களோடு மகிழ்ந்து, துயருற்று,—இது பெரிய காரியமில்லை, இதற்கும் அப்பால், அவர்களோடு கடவுளை மறுத்து, கடவுளை வெறுத்து, கடவுளைத் தொழுது, கடவுளைப் பலபடியாக வடிவாக்கி, தான் வேறு, அவர்கள் வேறு என்று வேற்றுமை சிறிதும் இல்லாமல் இருப்பதற்குக் கவிஞன் ஒருவனாலேயே நன்றாக முடிகிறது. அளவற்ற பரிவோடு எல்லோருடைய மனத்தோடும் தம் மனத்தை இணைத்துக் கொள்ளும் சக்தி, இளங்கோ அடிகள் என்ற கவிஞருக்கு இருந்தது. இப்படி யாவரோடும், உயிரினம் அனைத்தோடும், ஒன்றிக் கரைந்து விடும் ஒருவனுக்குத் தனி விருப்பு ஏது, தனி வெறுப்பு ஏது? அவன் உண்மையான துறவு நிலையை அடைந்து விடுகிறான். அதற்கு ஒரு குடம் பாலைக் கடலிலே கொட்டி விட்டால், பால் என்ற தனிப் பொருள் மறைந்துவிடவில்லையா, அது போல.

இளங்கோ அடிகளுடைய அழகுணர்ச்சியும் அவருடைய துறவுக்கு இடையூறாக அமையவில்லை. ஒரு பொருளை அழகுடையது என்று பார்த்து வியப்பதில் தவறு ஒன்றும் இல்லை. அதற்கு மாறாக நம்முடைய ஆன்ம சக்தி இதனால் வளர்கிறது. ஒரு பொருள் நம்முடைய புலன் இன்பத்துக்காக மட்டுமே படைக்கப்பட்டது என்று எண்ணி, அதன் பேரில் ஆதிக்கம் செலுத்த முற்படுவது தான் தவறாக முடிகிறது. ஒரு பொருளை மாத்திரம் அல்ல, எல்லாப் பொருள்களிலும் ஊடுருவி நிற்கும் அழகு என்னும் தத்துவத்தைத் தேடிச் செல்லும் ஒருவன் - கவிஞன் இதைச் செய்கிறான் - அது காரணமாகவே, ஒரு சில பொருள்களோடு மட்டும் தன்னைப் பிணைத்துக் கொண்டு தடுமாறும் உடல் உணர்ச்சியிலிருந்தும், காமத்திலிருந்தும் தன்னை விடுவித்துக் கொள்ளுகிறான். அலகிலாத அந்த அழகுத் தத்துவத்தைக் கண்டு விட்டான் என்றால், இறைவனுடைய எண்ணிறந்த தன்மைகளில் ஒன்றைக் கண்ட ஞானியாகிவிடுகிறான். இந்த வகையிலே இளங்கோ அடிகளும், கவிதையின் மூலமாக — அதற்கே உரிய பரிவு, அழகுணர்ச்சி இவற்றின் மூலமாக—துறவின் பயனான பற்றற்ற நிலையை, சம பாவத்தை அடைந்தார் என்று சொல்லலாம்.

இந்தக் கருத்தை 'ஆசார்ய ஹ்ருதயம்' என்ற வைணவ நூல் பேசுகிறது:

'கவி யென்னும்போதே ரிஷி என்னும் முனி என்னும்' ஒருவனைக் கவிஞன் என்று சொன்னால் போதும். அவன் உண்மையான கவிஞன் என்றால், அவனிடம் மகரிஷி ஒருவருடையஞானத்தை, முனிவர் ஒருவருடைய பற்றற்ற சம பாவத்தைக் கண்டுவிடலாம். இதுவே ஆசார்ய ஹ்ருதயம் கூறுவது. இளங்கோ அடிகள் கவிஞர் என்பதற்குச் 'சிலப்பதிகாரம்' என்ற நெஞ்சை அள்ளும் காவியமே சாட்சி. அவர் துறவி என்பதற்கோ அவர் உண்மையான கவிஞர் என்பதே அத்தாட்சி.

இணையற்ற
எழிலுக்கு...




ஸ்னோ • பவுடர்

இலங்கையில் கிடைக்குமிடம்: **AVRA Ltd., Colombo.**

# தொடரும் பாசம்

**கிருஷ்ணா**

ஒரு ஜமுக்காளத்தை எடுத்துக் கீழே விரித்தாள் மரகதம். அதற்கு மேலே ஒரு தலையணையையும் எடுத்து வெறுப்புடன் எறிந்தாள். பிறகு படுத்து விட்டாள் அலுப்புடன். உடலைப் பொறுத்த வரையிலும் அவளுக்குச் சோர்வு ஏற்படவே வழியில்லை. சீரும் செல்வமும் நிறைந்த குடும்பத்தின் தலைவி அவள். ஏவிய வேலையைச் செய்யப் பணியாட்கள் காத்துக் கொண்டிருந்தனர். ஆகவே சோர்வெல்லாம் உள்ளத்தைப் பொறுத்ததுதான்.

கடுமையான சூறாவளியில் அடிபட்டுச் சாய்ந்த பெருமரம் போல அவள் படுத்துக் கிடந்தாள். விரைவில் தூங்கி விடும் நோக்கத்துடன்தான் படுத்தாள் அவள். ஆயினும் தூக்கம் ஏனோ வரவில்லை.

அவள் பயப்பட்டாள்—தனது கொடிய சிந்தனைக்குத்தான். பாழாய்ப் போன அது முந்திக் கொண்டு விட்டால்—அவ்வளவுதான். அன்று சிவராத்திரியாகி விடும். எனவே அந்தச் சிந்தனை வந்து கொத்திக் கொள்ளும் முன்பே தப்பித்துக் கொள்ளும் நிமித்தம் அவள் புத்தகம் படிக்க விரும்பினாள். அவள் விரும்பிப் படிக்கும் கோதார்த்த ஸங்கிரகம் என்னும் புத்தகம் எதிர் அறையில் உள்ள அலமாரியில் இருந்தது. அதை எடுப்பதற்காக எழுந்து எதிர் அறைக்குள் சென்றவள் அப்படியே திகைத்துப் போய் நின்று விட்டாள்.

அங்கே ஜெயா, அவளைப் போலவே ஒரு ஜமுக்காளத்தை மட்டும் விரித்துப் படுத்திருந்தாள். அரைத் தூக்க நிலையில் இருந்த ஜெயாவை அவசரமாக எழுப்பினாள் மரகதம்.

"என்னமா, ஜெயா? இங்கே படுத்துக் கொண்டிருக்கிறாய்?" என்று வினவினாள்.

"சும்மாத்தான், அம்மா!" என்றாள் ஜெயா தன் மாமியை நோக்கி, பணிவுடன்.

"ராஜா எங்கே?"

"அவர் மாடியில் படுத்திருக்கிறார்!"

"உங்களுக்குள் ஏதாவது சண்டையா என்ன, இப்படிப் பிரிந்திருப்பதற்கு?"

'இல்லை' என்பதற்கு அடையாளமாகத் தலையை அசைத்தாள் ஜெயா. தொடர்ந்து சொன்னாள்: "நான்கு மாதங்களாகவே அவர் என்னை ஏறெடுத்துப் பார்ப்பதில்லை. முகம் கொடுத்துப் பேசுவதில்லை" என்றாள் மிகுந்த வேதனையுடன்.

அந்த வேதனையை மரகதம் நன்கு புரிந்து கொண்டாள்.

"நன்றாயிருக்கிறது! பின்னென்ன சிறுசுகள் இப்படியா இருப்பது? நான் போய்க் கேட்கிறேன் அவனை!" என்று எழுந்த மரகதம், மருமகளின் கையைப் பிடித்துக் கரகரவென்று இழுத்துக் கொண்டே மாடிப் படிகளில் வேகமாக ஏறலானாள்.

விஸ்தாரமான அந்த மாடி ஹாலில் நுழைந்தவுடன் அவளது கால்கள் தள்ளாடின. சுவரைப் பிடித்தபடியே இரண்டொரு விநாடிகள் அவள் நின்று விட்டாள். ஹாலில் வடபுறம் இருக்கும் பெரிய அறைதான் 'அவரு'டையது. அதைப் பார்க்கும்போதே மரகதத்தின் இதயம் பொங்கியது. அவள் மாடிப் பக்கம் வந்தே நான்கு மாதங்களுக்கு மேலாகி விட்டனவே! இப்பொழுது அந்தப் பக்கம் அறைக்குள் அவர் உட்கார்ந்து கொண்டு ஏதோ எழுதிக் கொண்டிருப்பது போலவே பிரமை தட்டியது அவளுக்கு.

அந்த ஒரு விநாடிக்குள், பீறிட்டெழுந்த தனது உணர்ச்சிகளை அடக்கிக் கொண்ட மரகதம், மருமகளும் கையுமாக மகனுடைய அறைக்குள் நுழைந்தாள்.

சோபா ஒன்றில் உட்கார்ந்து கொண்டு சுவாரஸ்யமாகத் தமிழ் நாவல் ஒன்றைப் படித்துக்கொண்டிருந்த ராஜா, காலடிச் சத்தம் கேட்டு நிமிர்ந்து பார்த்தான். அர்த்தம் நிறைந்த புன்னகையொன்று அவன் அதரங்களைச் சுழித்தது. புத்தகத்தை அருகிலிருந்த மேஜை மேல் வைத்துவிட்டு, "வா, அம்மா! நீ இப்படி ஒரு நாள் வருவாய் என்பது எனக்குத் தெரியும்!" என்றபடியே தாயை வரவேற்றான். ஜெயாவை அவன் கவனித்ததாகவே காட்டிக் கொள்ளவில்லை.

"என்னடா ராஜா, இது? நீ செய்து வரும் இந்தக் காரியம் சரிதானா?" என்று கேட்டாள்.

"ஏன்? ஜெயா ஏதாவது சொன்னாளா?"

"ஜெயா ஒன்றும் சொல்லவில்லை. நானாகத்தான் கேட்கிறேன்! சிறுசுகள் இப்படியா இருப்பது? நானும் நான்கு மாதங்களாகக் கவனித்துக் கொண்டுதான் வருகிறேன். நீ இவ்வளவு தூரம் நிராகரிக்கும்படி அவள் அப்படி என்ன பிழை செய்து விட்டாள்?"

வேகமாகவும் ஆத்திரமாகவும் பேசியதால் அவளுக்கு மூச்சு வாங்கியது. தாயைச் சில



விநாடிகள் உற்றுப் பார்த்தான் ராஜா. அவளது உள்ளம் நெகிழ்ந்தது. ஆனால் உடனே அந்த உணர்ச்சியை மறைத்துக் கொண்டு விட்டான்.

"அம்மா! அவள் பிறந்ததே ஒரு பெரும் பிழை. அதுமட்டு மல்ல, அவள் இந்த வீட்டில் காலடி யெடுத்து வைத்த வேளை—அதுவும் தவறான வேளைதான் அம்மா!" என்றான் அவன் மிக உறுதியான குரலில்.

"என்னது? என்ன உளறுகிறாய் நீ?"—மரகதத்தின் குரலில் கோபம் மிகுந்திருந்தது. ஜெயாவோ தன் உணர்ச்சிகளை யெல்லாம் வெகு பாடுபட்டு அடக்கிக் கொண்டாள்.

"பின் என்னவாம்? மருமகள் வந்த வேளை அவள் அடியெடுத்து வைத்த வேளை, என் அப்பாவையே அடித்து விட்டதே! அப்பேர்ப் பட்ட துக்கிரிப் பெண்ணுடன் எனக்கென்ன வாழ்வு வேண்டிக் கிடக்கிறது?..." காய்ந்த சட்டியில் விழுந்த நெல்லுப்போலப் பொரிந்து தள்ளினான் ராஜா.

ஜெயா இதைக் கேட்டதும் "ஆ!" வென்று தன்னை மறந்து அலறி விட்டாள். மரகதத் துக்கு ஒரு முழம் தூக்கிப்போட்டது, மகனின் எண்ணத்தை அவன் வாய் மூலமாகவே கேட்டதும். "என் வாழ்வு போனது என் தலை விதிப்படி. அதற்கு இந்தப் பச்சைக் குழந்தையா பிணை?" என்றாள் மரகதம்.

"ஆம்! அப்படித்தான் ஊரார் யாவரும் சொல்கிறார்கள்! என் அபிப்பிராயமும் அது தான்—" என்றான் ராஜா உறுதியுடன்.

"அபிப்பிராயம் என்பது சந்தர்ப்பத்தைப் பொறுத்து எழும் நிமிஷ வேக உணர்ச்சியல்ல, ராஜா! பார்க்கப் போனால் இது அபிப்பிரா யமே யல்ல. அசட்டுத்தனமான பிடிவாதம் என்றுதான் சொல்ல வேண்டும். சிலர் விளக் கைப் பிடித்துக் கொண்டு கிணற்றில் விழுகிறார் கள் அல்லவா! அதேபோல ஒரு அறியாமை."

"அதே அறியாமைக்குத்தானே புத்தி தெரிந்த பெரியவர்கள்கூட மதிப்பு கொடுக்கிறார்கள்? அவர்கள் காட்டியுள்ள வழியில்தான் நானும் போகி றேன்!" என்றான் ராஜா.

"அப்படி யார் உனக்குப் புத்தி சொன்னார் களோ?" என்றாள் மரகதம்.

"நீதான்!—வேறு யார்?"

"நானா?...நானா அப்படிச் சொன்னேன்?" பதறினாள் அவள்.

"வாய் விட்டுச் சொல்லவில்லை; செய்கை யில் காட்டி விட்டாய், அம்மா! விதியின் மீது உனக்கு நம்பிக்கையில்லை. அந்த விதியைச் சிருஷ்டித்த ஆண்டவன் மீதும் நம்பிக்கை யில்லை. இருந்திருந்தால் அப்பாவின் மரணத் துக்கு நீதான் காரணம் என்று பிடிவாதம் பிடித்திருப்பாயா?" என்றான் ராஜா.

"நிறுத்தடா! நான் பட்ட மரம்! இனி எனக்கு எதுவும் வேண்டாம். என் விரக்தி யின் போக்குப்படி நான் எப்படி இருந்தால் உனக்கு என்ன? அதற்காக அந்தப் பகுத் தறிவைக் கருகச் செய்கிறாயா? அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?" என்றாள் மரகதம் ஆவேசத்துடன்.

"சம்பந்தம் இருக்கக் கொண்டுதான் சொல்கிறேன். அவள் என் மனைவி. நீ என் தாய். உயிர் உடலில் தங்கத் தேவையான சொற்ப உணவுகூட உட்கொள்ளாமல், ஒரு நாள் ஒரு வேளை கஞ்சியை மட்டும் குடித்துக் கொண்டு கிடக்கும் தாயின் மகத்தான துய ரைக் காணும் துர்ப்பாக்கியம் நேர்ந்துள்ள மக னுக்கு எதற்கு அம்மா சந்தோஷம் வேண்டும்! இப்பொழுதாவது சொல், அம்மா, வழக்கம் போல உண்டு உடுத்துக் கொண்டாவது இருக்கிறேன் என்று! நானும் என் பிடி வாதத்தை விட்டு



விடுகிறேன். என் தந்தையைத்தான் இழந்து விட்டேன், தாயையும் உயிருடன் இழப்பதற்கு ஒரு போதும் சம்மதிக்கமாட்டேன், அம்மா!" என்று கதறி விட்டான் ராஜா.

மரகதத்துக்கு ஒன்றுமே சொல்லத் தோன்ற வில்லை. வாய் அடைத்து விட்டது. துக்க நெகிழ்ச்சியினால் அன்றையச் சம்பவம் அவள் மனக் கண்முன் விரிந்தது.



"நன்றாக இருக்கிறது நீங்கள் சொல்வது! தமது ஒரே பெண்ணுக்குக் கல்யாணம் செய்கிறார் உங்கள் அண்ணா! நீங்கள் போகாமல் இருந்தால் நன்றாக இருக்குமா? 'இளையாள் பிள்ளைதானே அலட்சியமாக இருந்து விட்டான்!' என்று உலகம் ஏசாதா?"

"நான் என்ன செய்வேன் மரகதம்! வேலை தலைக்குமேல் கிடக்கிறதே!"

"இருந்தால்?...மற்ற டாக்டர்கள் கவனித்துக் கொள்வார்கள். நான் கூடப் போவதற்கில்லை. நீங்களாவது எப்படியும் போகத்தான் வேண்டும்! இல்லையென்றால் அப்புறம் நான் எப்படி மன்னியின் முகத்தில் விழிப்பேன்? நீங்களும்தான் எப்படி உங்கள் அண்ணாவை ஏறிட்டுப் பார்க்க முடியும்?"

"நீ சொல்வதும் வாஸ்தவம்தான். ஆனாலும் எனக்கென்னவோ இஷ்டமேயில்லை. ஏதாவது நல்ல பொருளாக வாங்கி வெகுமதி அனுப்பி விட்டால் போதும் என்றே தோன்றுகிறது. பரவாயில்லை. உன் ஆசையைத்தான் கெடுப்பானேன்! உன் இஷ்டப்படியே புறப்படுகிறேன்!" என்றார் டாக்டர் கிருஷ்ணமூர்த்தி.

சொன்னபடி அன்றிரவு வண்டியிலேயே புறப்படவும் செய்தார்.

இந்தச் சம்பாஷணை நிகழும்போது சர்வ சாதாரணமாகத்தான் இருந்தது மரகதத்துக்கு. ஆனால்.... ஆனால்.....மறு நாள் பகலில் ரேடியோ அலறிய பொழுது...

"நேற்றிரவு சென்னை எழும்பூரிலிருந்து புறப்பட்ட தூத்துக்குடி எக்ஸ்பிரஸ் அதிகாலை நாலரை மணிக்கு அரியலூர் அருகில் மருதையாற்றுப் பாலத்திலிருந்து பிரவாகத்தில் விழுந்து விபத்துக்குள்ளாகியது...."

அரியலூரில் காத்துக்கொண்டிருந்த யமன் ஒரேயடியாக வாரிக் கொண்டு போய்விட்டான்! அது விதியின் செயல்தான். சந்தேகமில்லை. ஆனால் அந்த விதியின் கையில் கிருஷ்ணமூர்த்தியை மனதார வாரிக் கொடுத்தது யார்?

"நீங்கள் போகத்தான் வேண்டும்!"

"சரி! புறப்பட்டு விட்டேன்."

இந்த வார்த்தைகள் போதாதா இதயத்தைத் துளைப்பதற்கு? 'மகாபாவி! மனதாரப் போகச் சொன்னேனே!' என்று மருகினாள் அவள். அறிந்தோ அறியாமலோ சொன்ன அந்த விதியின் சொல்லுக்குத் தன் நாக்கு பாத்திரமாகி விட்டதை உணர்ந்த மரகதம் தன் உள்ளத்தை ஒடுக்கினாள். உடலை பட்டினி போட்டு வருத்தினாள்! அதுதான் பிராயச்சித்தமாகும் என்று கருதினாள் அவள். ஆனால் அது இவ்வளவு தூரத்துக்கு வளர்ந்து போய் விடும் என்று அவள் எதிர்பார்க்கவில்லை.

'உலகில் மனிதர்கள் பிறப்பதும் இறப்பதும் சகஜம். யார் யாருக்கு எப்படி எப்படியோ, அந்தந்த விதமே உரிய காலத்தில் மரணம் நிகழ்ந்து விடுகிறது. ஆனால் பாசம் மட்டும் என்றுமே சாவதில்லை.

'கணவன் இறந்தால் மகன்மேல் பாசம் அதிகரிக்கிறது. தந்தை மறைந்தால் தாய்மேல் குழந்தைகளுக்கு அன்பு அதிகமாகிறது. இதுதான் உலக நியதி போலும்!' என்று சிந்தித்தாள் மரகதம்.

"சரி, அப்பா! இனிமேல் உன் இஷ்டப்படியே நடந்து கொள்கிறேன். எனக்கு இனி நீதான் சகலமும்!" என்றாள் மரகதம் தழுதழுத்த குரலில்.

"அம்மா! அம்மா!" என்று நெகிழ்ந்து உருகினான் ராஜா.

அந்த அறையை விட்டு வெளியே வரும் சமயம் மரகதத்துக்குத் தன் உடல் காற்றில் பறப்பது போலத் தோன்றியது. மனத்தில் ஏதோ ஒரு பெரும் பாரம் இறங்கி விட்டது போல இருந்தது.

உள்ளே ராஜா சொல்லிக் கொண்டிருந்தான் ஜெயாவிடம்:

"ஜெயா! என்னை நீ அவசியம் மன்னித்துத்தான் ஆக வேண்டும். என்னைப் பெற்றவளின் துன்பத்தின் கொடுமையில் இப்படி நடக்க—நடிக்கவும் வேண்டியிருந்தது. என் அன்னையின் பொருட்டு உன்னை இந்த நான்கு மாதங்களாகக் கொடுமைப்படுத்தி விட்டேன்! இனி என் அன்பை நீ வட்டி சேர்த்து....."

அவள் புன்சிரிப்புடன் அவன் வாயைத் தன் தளிர்க் கரங்களினால் பொத்தினாள்.



# காளையைப் பிடியுங்கள்!

எலியோப்ளக்ஸ் 2
காமிராவினால்

போகஸ் விரைவாக
கம்போஸ் எளிதாக
எக்ஸ்போஸ் இலகு
வாக "முடியும்"

விலை ரூ. 99.50 தான்
(காமிரா கேஸுடன்)

இலவசக் காமிரா புத்தகத்
திற்கு உடனே எழுதவும்



AMA
PRIVATE LTD

Bombay 1: Canada Bldg., Hornby Rd.
Calcutta: 11, Government Place East
N. Delhi: Plaza Bldg., Connaught Place
Madras: 159, Mount Road.

பெர்ரானியாவின்  சிநேகிதராகுங்கள்

A.E/3

பாரத நாட்டுப் பழம் பெரும் இதிகாசங்களிலும், உலக மகா இலக்கியங்களிலும் முப்பத்திரண்டு இலட்சணங்களை யுடைய இலட்சிய புருஷர்களைப் பற்றிச் சொல்லப் படுகிறது. அத்தகையவர்களைக் கதாநாயகர்களாகக் கொண்டு இதிகாச இலக்கியங்கள் புனையப்படுகின்றன. அப்படிப்பட்ட மகா புருஷர்களுடைய வீரதீர சாகசங்களைப் பற்றி உலகத்துச் சரித்திரங்கள் எல்லாம் கூறுகின்றன. அந்த இலட்சிய மகா புருஷர்களால் அவர்கள் பிறந்த நாடுகளுக்குப் பெயரும் புகழும் மதிப்பும் மரியாதையும் ஏற்படுகின்றன.

புண்ணியம் செய்த நாடுகளிலே, பாக்கியம் செய்த தேசங்களிலே அத்தகைய முப்பத்திரண்டு இலட்சணங்களும் பொருந்திய வீர புருஷர் தோன்றுகிறார். பல நூற்றாண்டுகளுக்கு ஒருமுறைதான் அத்தகைய மகா புருஷர் ஒருவர் பிறக்கிறார். அவருடைய முகத்தின் காந்தி மக்களைக் கவர்கிறது. அவருடைய உள்ளத்தின் ஒளி, வாக்கிலே சுடர் விட்டுப் பிரகாசிக்கிறது. அவருடைய வீரமும் தீரமும் ஒழுக்கமும் நடத்தையும் சுயநலத் தியாகமும் பொதுநலத் தொண்டும் மக்களின் இதய சிம்மாசனத்தில் அவரை ஏற்றி வைக்கின்றன. அதனால் ராஜாதி ராஜனாக அவரைப் போற்றிப் புகழ்ந்து வணங்குகிறார்கள் உலகத்து மக்கள்.

அப்படிப்பட்ட அபூர்வ இலட்சிய மனிதரைப் பார்த்து மகிழ மக்கள் ஓடோடியும் வருகிறார்கள். மணிக் கணக்கிலும் நாள் கணக்கிலும் மழையிலும் வெய்யிலிலும் அலுக்காமல் சலிக்காமல் உற்சாகத்துடன் அவருக்காகக் காத்திருக்கிறார்கள். அந்தத் தெய்வ மனிதரின் திருமுகத்தைப் பார்த்தவுடன் பரவசமடைந்து விடுகிறார்கள். அவர் தேனினும் இனிய தீங்குரலை, அமுது பொங்கும் அன்புக் குரலைக் கேட்டதும் மெய்மறந்து புளகாங்கிதம் அடைந்து விடுகிறார்கள்.

இப்படிப்பட்ட உலகத்து இலட்சிய மகா புருஷர்களின் பரம்பரையில் வந்து உதித்த ஒரு மனிதர் நம்முடைய காலத்தில் நம்முடைய நாட்டில் இருக்கிறார். அவர்தான் பண்டித ஜவாஹர்லால் நேரு. சென்ற மாதம் அவர் ஈழ நாட்டுக்கு விஜயம் செய்தார். ஈழ நாட்டு மக்கள் அவருக்கு அளித்த கோலாகலமான வரவேற்பைப் பார்த்தபோது, அவர் "உலகத்து இலட்சிய மகா புருஷர்தான்!" என்பது ஐயமற நிரூபணமாயிற்று.

*** *** ***

மே மாதம் பதினேழாம் தேதி வெள்ளிக்கிழமை பிற்பகல்; வான வீதியில் பவனி வந்து கொண்டிருந்த சூரியன் தன் பிரயாணத்தை நிறுத்தி விட்டு இலங்கை இரத்மலானை விமான நிலையத்தில் உள்ள கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். பின்னால் இதைப் பற்றி விசாரித்தபோது ஒரு உண்மை தெரிந்தது. வானத்துச் சூரியன் பாரதத்திலிருந்து வரும் மற்றொரு சூரியனை எதிர்பார்த்துக் கொண்டு நின்று கொண்டிருப்பதாகவும் அந்தச் சூரியனிடம் ஈழ நாட்டை ஒப்படைத்து விட்டுப் போகப் போவதாகவும் கேள்விப்பட்டேன்.

# கடல் மறைந்தது!



இன்னும் ஒரு அதிசயமும் நடைபெற்றது. கொழும்பு நகரில் உள்ள காலிமுகக் கடற்கரைப் பக்கம் சென்றவர்கள் அலை மோதும் கடலை அங்கு காணாமல் திடுக்குற்றார்கள். இவ்வாறு திடீர் என்று மறைந்து போன கடல் புரண்டு கொழும்பு நகருக்குள் புகுந்து இரத்மலானை விமான நிலையம் வரை பொங்கி நின்றது. சமுத்திர ராஜனும் அவன் பரிவாரங்களும் மனித உருவம் பெற்று இரத்மலானை விமான நிலையக் கட்டடங்களையும் அதன் சுற்றுப்புறங்களையும் மானிட அலைகளால் மூழ்கடித்திருந்த காட்சியை ஈழநாட்டின் இரண்டாயிரத்து ஐந்நூறாவது புத்த ஜயந்தி வைபவத்தைப் பற்றி எழுதும் சரித்திர ஆசிரியர்கள் பொன் எழுத்துக்களில் எழுதுவார்கள் என்பதில் ஐயமில்லை.

பகீரதன்

# கதிரவன் மறையவில்லை!

சமுத்திர ராஜனும், சூரிய பகவானும் பாரதத்தின் பிரதமர் பண்டித ஜவாஹர்லால் நேருவை வரவேற்க இப்படி யுக்தி செய்தால் புகழ் பெற்ற இலங்கை பண்டாரநாயகா சர்க்காரும் அவருடைய சர்க்கார் அதிகாரிகளும் சும்மாவா இருப்பார்கள்!

இராஜ உபசாரத்துடன் பாரதத்தின் பிரதமரை வரவேற்கப் பிரமாதமான ஏற்பாடுகள் செய்திருந்தனர். ''பொதுமக்களே! மனித குலத்தின் மாணிக்கத்தை வரவேற்கப் பிற்பகல் இரண்டு மணிக்கே இரத்மலானை விமான நிலையத்துக்கு வாருங்கள்'' என்ற சர்க்கார் அறிக்கைகள் இலங்கைப் பத்திரிகைகளில் வெளியாகி இருந்தன. இலங்கை வானொலி இந்த அறிக்கையை விடாமல் ஒலி பரப்பிக் கொண்டிருந்தது.

''அன்பார்ந்த மக்களே! பிற்பகல் ஒன்றரை மணிக்கே வந்து விடுங்கள், சமாதான மூர்த்தியான ஜவாஹர்லால் நேருவை வரவேற்க!'' என்று ஈழநாட்டுத் தமிழ்த் தலைவர்களும் சிங்களத் தலைவர்களும் உத்தரவிட்டிருந்தார்கள்.

இவ்வாறு ஈழநாட்டு சர்க்காரும், அதன் தலைவர்களும் நம்மை வற்புறுத்தி அழைக்கையில் நாம் போகாமல் இருக்கக்கூடாது என்று பிற்பகல் இரண்டு மணிக்கே இரத்மலானை விமான நிலையத்துக்குச் சென்று விட்டேன்.

அதாவது கொழும்பு நகரிலிருந்தே ஜனப் பிரளயத்தில் மிதந்து சென்ற நான் இரத்மலானை விமான நிலையத்துக்கு முன்னால் ஜனப் பிரளயத்தில் குதித்து எதிர் நீச்சல் போட்டு, விமான நிலையத்துக்கு உள்ளே சென்று விட்டேன். என்னைப் போலவே எண்ணற்ற பலசாலிகளும், பலசாலிகளின் தயவில் உள்ளவர்களும், இலங்கை சர்க்கார் மந்திரிகளும், அதிகாரிகளும், ஈழநாட்டுப் பிரமுகர்களும், தலைவர்களும் வந்து சேர்ந்திருந்தார்கள்.

வானத்தில் ஏதாவது சத்தம் கேட்க வேண்டியதுதான் தாமதம், ''ஜவாஹர்லால் நேருவுக்கு ஜே!'' என்ற கோஷம் இடி முழக்கம் போல் எழும். அதைத் தொடர்ந்து உற்சாகமான கரகோஷம் அலை அலையாக எழும்பி ஆகாயத்தை; நோக்கிச் செல்லும். பாரதத்தின் பிரதமர் பண்டித ஜவாஹர்லால் நேருவை ஏற்றி வந்த ராஜஹம்ஸம் விமானம் சரியாக மூன்றரை மணிக்கு இரத்மலானை விமான நிலையத்தை வந்து அடைந்தது. வருவதற்கு முன்னால் இலங்கைத் தீவைஒரு வட்டமிட்டு ''அது எப்பொழுதும் போல்தான் இருக்கிறதா?'' என்று நோட்டம் பார்த்துக் கொண்டு வந்தது. ராஜஹம்ஸம் விமானம் தன்னுடைய ஒரு காதில் பாரதத்தின் அசோகச் சக்கரம் பொறித்த மூவர்ணக் கொடியையும், மற்றொரு காதில் ஈழத்தின் சிம்மக் கொடியையும் மாட்டிக் கொண்டு கம்பீரமாக வந்தது.

இரத்மலானை விமான நிலையக் கட்டடங்கள் எல்லாம் கல்லால் கட்டினவை போலல்லாமல் மனிதர்களின் தலைகளால் கட்டப்பட்டது போலவே காணப்பட்டன. இங்கிருந்த மக்கள் பிரளயம் இரத்மலானை விமான நிலையக் கட்டடங்களைப் பதின்மூன்று மைல்களுக்கப்பால் உள்ள கொழும்பு நகருக்கே புரட்டிக் கொண்டு சென்றிருக்கும். யார் செய்த புண்ணியமோ கட்டடங்கள் அந்த இடத்தை விட்டுச் சற்றும் நகரவில்லை.

ராஜஹம்ஸம் விமானம் வந்து இறங்கியதுதான் தாமதம், மக்களின் உற்சாகம் பீறிட்டுக்

---

1. கொழும்பு சுதந்திரச் சதுக்கத்தில் கூடியிருந்த மாபெரும் கூட்டத்தில் நேருஜி. 2. முப்படை அணிவகுப்பை ஏற்றுக் கொள்கிறார் ஜவாஹர். 3. இலங்கைப் பிரதமர் பாரதப் பிரதமர் நேருஜியை அழைத்து வருகிறார்.



கொண்டு விட்டது. ஜெய கோஷங்கள் வானைப் பிளந்தன. பாரதத்தின் சூரியனைப் பார்த்தவுடன் ஈழத்தை அவரிடம் ஒப் படைத்து விட்ட மகிழ்ச்சியில் திடீர் என்று மறைந்து விட்டான் வானத்துச் சூரியன். அது வரையில் மேகமற்றிருந்த ஆகாயத்தில் மேகம் வந்து சூழ்ந்து கொண்டது. இலங்கை உள்நாட்டு மந்திரி திரு ஏ. பி. ஜயசூரியா, சுகாதார மந்திரி திரு ஜயவீரகுருப்பு, போக்கு வரத்து மந்திரி திரு மைத்திரிபால சேன நாயகா ஆகியோர் ராஜஹம்ஸம் விமானத் துக்குள் சென்று நேருஜியையும் அவர் புதல்வி இந்திராகாந்தியையும் குழுவினரையும் சந் தித்து இலங்கை சர்க்கார் சார்பில் நன்றி தெரிவித்து வரவேற்றார்கள். விமானத்துக் குள் நடைபெற்ற இந்த ராஜாங்க வரவேற் புக்குப் பின்னர் பாரதத்தின் பிரதமர் பண்டித நேரு கூப்பிய கரங்களுடனும் மலர்ந்த முகத் துடனும் விமானக் கதவின் முன்னால் வந்து காட்சி அளித்தார். ஜவாஹர் தூய வெள்ளை உடை தரித்திருந்தார். அவருடைய ஷர்வானியில் சிவப்பு ரோஜா மலர் சிரித்துக் கொண் டிருந்தது. தேவலோகத்திலிருந்து இறங்கி வரும் தெய்வ புருஷர் போல மெதுவாகப் படியிலிருந்து இறங்கினர்.

இலங்கை மண்ணில் நேருஜியின் திருப் பாதங்கள் பட்டவுடன் ஈழநாட்டுப் பிரதமர் பண்டார நாயகா நேருஜியின் கைகளைப் பற்றிக் குலுக்கிப் பின்னர் கரம் குவித்து வர வேற்றார். நேருஜிக்குப் பின்னால் பாரதத்தின் தவப்புதல்வி இந்திரா காந்தி இலட்சுமி தேவி போல் இறங்கி வந்தார். திரு பண்டார நாயகாவின் புதல்வர் பண்டித நேருவுக்கு மலர் மாலை அணிவித்தார். திரு பண்டார நாயகாவின் புதல்வி இருமதி இந்திரா காந்திக்கு மலர்ச் செண்டைக் கொடுத்தார்.

ராஜஹம்ஸ விமானப் படியிலிருந்து ராணுவ மரியாதையை ஏற்றுக் கொள்ள வேண்டிய மேடை வரையில் செந்நிறப் பட்டுக்கம்பளம் விரிக்கப்பட்டிருந்தது. அந்தப் பட்டுக்கம்பளப் பாதை வழியே பண்டித நேரு நடந்து வந்து முப்படைகளும் அளித்த ராணுவ மரியாதை களை ஏற்றுக் கொண்டார். பின்னர் புத்த குருமார்கள் கூடி யிருந்த விசேஷ மண்ட பத்துக்குச் சென்றார். அங்கு இருபத்தைந்து புத்த குருமார்கள் 'பிரித்' ஓதினர். அப் பொழுது நேருஜி ஆடாமல் அசையாமல் தலைகுனிந்து நின்றார். அவருக்குப் பக்கத்தில் திரு பண்டார நாயகாவும் கரம் குவித்தபடி பக்தி சிரத்தையுடன் நின்றார். அவர் அப் பொழுது என்ன நினைத்துக் கொண்டு நின் றாரோ! திரு பண்டார நாயகா புத்த பிக்கு களின் முன்னால் கரம் குவித்து நிற்பதைப் பார்த்தால் தம்மையே இந்த ஆட்சியில் நிலைத்து வைத்திருக்க வேண்டும் என்று அவர் களிடம் கேட்பது போலிருந்தது. "இப்பொ ழுது இலங்கையில் நடப்பது பண்டாரநாயகா ஆட்சி என்று கூறுவதை விடப் புத்த பிக்கு களின் ஆட்சிதான் நடக்கிறது என்று சொல்ல வேண்டும்" என்று ஈழ நாட்டில் பலர் சொல்லிக் கொள்வது நினைவுக்கு வந்தது. அதனால்தான் எனக்கு அவ்வாறெல்லாம் எண்ணத் தோன்றியது. புத்த பிக்குகள் ஆணையின்படி பண்டாரநாயகா சர்க்கார் ஆட்சி செய்தால் ஈழத்தில் அன்பு ஆட்சி தானே மலரும்!! அது நாட்டுக்கு நல்லது தானே என்று எண்ணிக் கொண்டேன்.

புத்த குருமார்களின் மண்டபத்திலிருந்து நேருஜியை திரு பண்டார நாயகா அழைத்துச் சென்று தம்முடைய மந்திரிகள், ராஜதந் திரிகள், பிரமுகர்கள் எல்லாருக்கும் அறி முகம் செய்து வைத்தார். ஈழநாட்டுத் தமிழ் மக்களின் தனிப் பெரும் தலைவராகத் திகழும் திரு எஸ். ஜே. வி. செல்வ நாயகம் அவர்களின் கைகளைப் பற்றி நேருஜி குலுக்கும் போது மக்கள் மத்தியில் ஏற் பட்ட கரகோஷம் தமிழ் மக்களின் இதயக் குரலாக ஓங்கி ஒலித்தது. இதற்குப் பின்னர் திறந்த வண்டியில் நின்று கொண்டு கூப்பிய கரங்களுடன் சிரித்த முகத்துடன் விமான நிலையத்தில் சூழ்ந்து நின்ற மக்களுக்கு அரு கில் சென்றார். ஜவாஹர்லாலை ஜனங்கள் பார்த்து மகிழ்ந்தார்கள்! ஜெயகோஷம் செய்தார்கள்! அதே சமயத்தில் பாரதத்தின் சூரியனை வரவேற்க வருணனும் வந்து விட்டான். கொட்டுக் கொட்டென்று மழை கொட்ட ஆரம்பித்து விட்டது.

மழையினால் கலைக்கப்பட்ட மக்கள் மத்தியில் சென்று நேருஜி காரில் ஏறுவதற்குள் தெய் வப் பிரயத்தனமாய் விட்டது. போலீஸ் படைகள் எல்லாம் இந்தக் குதூகலமான கூட் டத்தின் மத்தியில் இருந்த இடம் தெரியாமல் போனார்கள். சில போலீஸ் கான்ஸ்டேபிள் களும், உத்தியோகஸ்தர்களும் பட்டபாட்டில் அப்படியே சுருண்டு கீழே விழுந்து விடுவார் கள் போலிருந்தது. ஜவாஹர்லால் நேரு அவர்களின் நிலைமையே இப்படி யென்றால் என்னைப் பற்றி என்னத்தைச் சொல்வது?

கூட்டத்திலிருந்து எப்படியோ தப்பி வெளியே வந்ததும் என் அங்கங்களை எண் ணிப் பார்த்துக் கொள்ள வேண்டியிருந்தது. அன்று இரவு என்னைப் பார்த்த நண்பர் என்னை வெகுநேரம் அடையாளம் தெரியா மல் தவித்தார். பிறகு "மத்தியானம் பார்த் ததற்குள் இப்போது ஆறு அங்குலம் உயர்ந்து விட்டீர்களே!" என்று வியந்து போனர். "ஈழநாட்டில் வைத்து நேருஜியைப் பார்த்த மகிழ்ச்சியில் இப்படி உயர்ந்து விட்டேன். கூட்டத்தில் மாட்டிக் கொண்டு இடிபட்ட தில் இவ்வாறு நெகிழ்ந்து விட்டேன்" என்று சொல்லிப் பெருமையடித்துக் கொண்டேன்.

இரத்மலானை விமான நிலையத்திலிருந்து கொழும்பு நகரில் இருக்கும் கவர்னர் ஜென ரல் மாளிகையான "ராணி பவனம்" வரை அரசாங்க மரியாதையுடன் நேருஜியை அழைத்துச் சென்றனர். இப்பொழுது மழை சற்று விட்டிருந்ததால் திறந்த மோட்டார் வண்டியில் நின்று கொண்டே நேருஜி சென் றார். நேருஜியைப் பார்த்த மக்கள் இதயத்தி லிருந்தே அன்புக்குரல் எடுத்து ஜெயகோஷம் செய்தனர். ஈழநாட்டுச் சாலைகளில் எல்லாம் பாரதத்தின் தேசீயக் கொடி பட்டொளி வீசிப் பறந்தது! விமான நிலையத்திலிருந்து கொழும்பு நகரம் வரையில் உள்ள பதின் மூன்று மைல் தூரத்திலும் பலவித வரவேற்பு வளைவுகள் கட்டியிருந்தனர். சில வளைவு கள் மனத்தை விட்டு இன்னும் மறையவில்லை. மூங்கிலைக் கொண்டு கோபுரம் போல்

# கார் லைட்
# அதிக வெளிச்சம்
# அதிக ஆபத்து




- எதிர் நோக்கிப் போகும் போது லைட் அணைத்து, வேக்ம் குறைத்து விபத்தை விலக்கலாம்
- நிறுத்தும் விசை வழுவாமல் கவனிக்கவும்
- கூர்ந்து கவனித்து ஓட்டவும்

**தி மதருஸ் மோட்டார் இன்ஷ்யூரன்ஸ் கோ., லிட்.**

(டி. வி. எஸ். ஸ்தாபனம்)

**சென்னை**

பண்பாட்டால் விபத்தை விலக்கி பயனடையலாம்

MMI/107

அமைத்து அதில் இளநீர்களையும் பலாமோஸ்களையும் கட்டித் தொங்கவிட்டிருந்தனர். மரகதமும் தங்கமும் இளநீர்க்காய்களாகவும் பலாமோஸ்களாகவும் தொங்க அதன் மத்தியில் தென்னங் குருத்தோலைகளால் ஆன தோரணங்கள் அழகுக்கு அழகு செய்து கொண்டிருந்தன. இந்த அலங்காரங்களுக்கு இடையில் ''சமாதான தூதரே வருக!'' என்ற வரவேற்பு வாசகங்கள் சிங்களத்திலும் ஆங்கிலத்திலும் பொறிக்கப்பட்டிருந்தன.

பதின்மூன்று மைல் தூரமும் சாலையின் இருபுறமும் நெருக்கியடித்துக் கொண்டு நின்ற மக்கள் தங்கள் கையில் பாரதத்தின்தேசியக் கொடியை வைத்து ஆட்டி நேருஜியை வரவேற்றுக் கொண்டிருந்தனர். இவை தவிர சாலையின் இரு புறங்களிலும் புத்த ஜயந்திக் காட்சிகள் வேறு அலங்காரமாகஇருந்தன. இரண்டடி புத்தரிலிருந்து இருபது அடி முப்பது அடி ஐம்பது அடி அறுபது அடி வரையில் வானளாவி நிற்கும் புத்த சித்திரங்கள். புத்தர் ஜாதகக் கதைகளைச் சித்திரிக்கும் சித்திர அற்புதங்கள் என்று திரும்பிய பக்கமெல்லாம் புத்தரை நினைவூட்டும் சித்திரங்கள்தான். பகலில் பளபள வென்று கண்ணைப் பறிக்கின்றன புத்தர் பிரானின் இந்த வர்ணச் சித்திரங்கள். இரவிலோ இந்த புத்த சித்திரங்களைச் சுற்றி ஜகஜ்ஜோதியாக மின்னும் மின்மினி விளக்குகள்! தமிழ்நாட்டில் ஏன் இந்தியாவிலேயே எந்தவிழாவும் இவ்வளவு உற்சாகமாகக் கொண்டாடப்பட மாட்டாது என்றுதான் சொல்ல வேண்டும். அத்துடன்



1. ஈழநாட்டுத் தமிழ் மக்களின் தனிப் பெருந் தலைவரான திரு எஸ். ஜே. வி. செல்வநாயகம் அவர்களை ஜவாஹர்லால் நேருஜிக்கு அறிமுகம் செய்து வைக்கப்படுகிறது.

2. கொழும்பு காலிமுக ஹோட்டலில் பல்வேறு இந்திய சங்கங்களின் சார்பில் அளிக்கப்பட்ட கோலாகலமான வரவேற்பில் நேருஜி பேசுகிறார்.

3. இலங்கை இந்திய ஹை கமிஷன் காரியாலயத்தில் நேருஜியிடம் குமாரி கே. வி. எஸ். சாந்தி கையெழுத்துபெறுகிறார்.

4. இந்திய ஹை கமிஷனர் காரியாலய விருந்துக்கு வரும் விருந்தினர்களை நேருஜியும் இந்திய ஹைகமிஷனர் திரு கண்டேலியா அவர்களும் திருமதி கண்டேலியா அவர்களும் வரவேற்கின்றனர்.

**அருள் வாக்கு**

நான் ஒருநாள் ஒரு கனவு கண்டேன். ஒரு உயரமான கட்டடம் இருந்தது. அதன் மாடி மேல் ஏற ஒரு ஏணி வைத்திருந்தது. அது வழியாக ஏறி விட்டேன். ஆனால் ஒரு சாண் அகலமுள்ள இடமே அங்கிருந்தது. பயப்பட்டேன். அப்பொழுது ஒருவன் ஏணியை எடுத்துக் கொண்டு போய் விட்டான். கீழே விழுந்து விடுவேனோ என்று பயமாக இருக்கையில் விழித்துக் கொண்டு விட்டேன். அப்பொழுது எனக்கு உண்டான ஆனந்தத்துக்கு அளவே இல்லை. இந்த வாழ்வும் அப்படிப்பட்ட ஒரு கனவு. இதிலிருந்து விழித்துக் கொண்டு விட்டால் நிரம்ப சந்தோஷம் உண்டாகும்.

**ஸ்ரீ சங்கராச்சாரியார், காமகோடிபீடம்**

புத்தர் பிறந்த பாரத நாட்டிலிருந்து இந்தக் காலத்துப் புத்தராக விளங்கி உலகில் அன்பையும் சமாதானத்தையும் நிலைநாட்டப் பாடு பட்டு வரும் ஜவாஹர்லால் நேரு வருகிறார் என்று கேள்விப் பட்டதும் ஈழநாட்டு மக்களின் உற்சாகம் எல்லையை மீறி விட்டது. சாலையின் இருமருங்கிலும் உள்ள புத்தபிரானின் அற்புதச் சித்திரங்களுடன் புத்த ஜயந்திக் கொடிகள் வேறு பறந்துகொண்டிருந்தன. காரிலே புத்த ஜயந்திக் கொடி! வீட்டிலே புத்த ஜயந்திக் கொடி! மக்களின் கைகளிலே புத்த ஜயந்திக் கொடி! பனைமரத்திலே கொடி! தென்னை மரத்திலே கொடி! திரும்பிய பக்கமெல்லாம் புத்த ஜெயந்திக் கொடிதான்! இந்தப் புத்த ஜயந்திக் கொடிக் காட்சியே கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. நேருஜீ இந்த அருமையான காட்சியையெல்லாம் கண்டு மகிழ்ந்தார்.

ஈழநாட்டு மக்களோ ஒரு கையில் புத்த ஜெயந்திக் கொடியையும், மறு கையில் பாரத நாட்டின் தேசியக் கொடியையும் வைத்துக் கொண்டு நேருஜீயை வரவேற்றனர். நேருஜீயின் கார் அந்தக் கூட்டத்துக்கு மத்தியில் சென்றது. கூட்டத்தினர் "பாரத மாதாவுக்கு ஜே!" "இலங்கை மாதாவுக்கு ஜே!" என்ற கோஷமிட்டார்கள்! இதைத் தொடர்ந்து இளம் பிள்ளைகள் மெய் மறந்து குதித்தார்கள்; கூச்சலிட்டார்கள்; வாழ்த்தினார்கள். ஆண்களும், பெண்களும், பெரியோர்களும், புத்தபிக்குகளும் கூடி நின்று நேருஜீயை வரவேற்று மகிழ்ந்தார்கள்.

இத்துடன் மக்களின் ஆர்வம் நின்று விட்டதா? இல்லை; இல்லவே இல்லை. ஈழநாட்டில் நேருஜீ தங்கியிருந்த மூன்று தினங்களும் அவர் எங்கே போனாலும் அங்கே எல்லாம் ஜனங்கள் திரண்டு போய்ப் பார்த்தார்கள். பார்த்தவர்கள் மீண்டும் மீண்டும் ஆர்வத்துடன் பார்த்து மகிழ்ந்தார்கள்.

கொழும்பு நகர சபை மண்டபத்தைச் சுற்றிலும் பதினாயிரக்கணக்கில் மக்கள் நின்றார்கள்! பாராளுமன்றக் கட்டடத்துக்கு வெளியில் பல்லாயிரக் கணக்கில் நின்றார்கள். காலிமுக ஹோட்டலைச் சுற்றிக் கடல் அலைகளுடன் போட்டியிட்டுக் கொண்டு கணக்கின்றி நின்றார்கள். ராமகிருஷ்ண மடத்துக்கு எதிரில் இருந்த திறந்த வெளியில் ஏராளமாகக் கூட்டம். கொழும்பு நகரிலிருந்து நூற்று மூன்று மைல்களுக்கு அப்பால் இருக்கும் அநுராதபுரி வரையிலும் மக்கள் கூட்டம்தான். அநுராதபுரத்திலோ கூட்டம் எல்லை மீறி விட்டது.

ஈழ நாட்டு மக்களின் இதயதாபத்தை, அவர்கள் பாரதத்தின் பிரதமர் பண்டித நேருவிடம் கொண்டிருக்கும் பக்தியைத் தெரிந்து கொள்வதற்கு மே மாதம் பத்தொன்பதாம் தேதி ஞாயிற்றுக்கிழமை மாலை கொழும்பு நகரில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் கூடியிருந்த கூட்டத்தையும், அன்றைய இரவு திரு பண்டார நாயகாவின் "அலரி அசோகம்" என்ற அரசியல் மாளிகையில் ஜவாஹருக்கு அளித்த அரசாங்க விருந்துக்கு வந்திருந்த ஆயிரக்கணக்கான பிரமுகர்களின் கூட்டத்தையும் பார்த்திருக்க வேண்டும்.

ஈழநாட்டு மக்கள் பாரதத்தின் பிரதமரிடம் தங்களுக்கு உள்ள அன்பைக் காண்பிப்பதற்குத் தவித்துக் கொண்டிருந்திருக்கிறார்கள் போலும். இந்தச் சந்தர்ப்பம் கிடைத்ததும் அவர்கள் அன்பைப் பொழிந்து தள்ளி விட்டார்கள். மூன்று நாட்களும் ஈழநாட்டு மக்களின் இதயக் கடல் பொங்கிப் பெருகி, கொழும்பு நகரிலிருந்து அநுராதபுரம் வரையில் பரவிக்கொண்டிருந்ததால் இலங்கையில் இருந்த கடல் மறைந்து போய்விட்டது! இரவென்றும் பகல் என்றும் பாராமல் பாரதத்தின் பிரதமர் பவனி வந்து கொண்டிருந்ததால் எல்லா நேரமும் ஜகஜ்ஜோதியாக இருந்தது கொழும்பு நகரம். இதனால் வானத்தில் கதிரவன் மறைய வில்லையோ என்று வியக்கவேண்டியிருந்தது.

*** *** ***

இவ்வளவு மக்களின் அன்புக்கும் பாரதத்தின் பிரதமர் சரியான பாத்திரம்தான் என்பதை, பண்டித நேரு நிரூபித்து விட்டார். இரத்மலானை விமான நிலையத்தில் மே மாதம் பதினேழாம் தேதி மாலை இறங்கியதிலிருந்து இருபதாம் தேதி காலை விமானம் ஏறும் வரையில் ஒரு நிமிஷம் கூட ஓய்ச்சல் ஒழிவென்பதே இல்லை. ஒவ்வொரு நாளும் பத்துப் பன்னிரண்டு நிகழ்ச்சிகளில் உற்சாகத்துடன் கலந்து கொண்டார். உணர்ச்சியுடன் பேசினார். குறிப்பிட்ட காலம் தவறாமல் அந்தந்த இடத்துக்குச் சென்றார். தம்முடைய ஒளி பெற்ற கண்களால் ஈழநாட்டு மக்களின் திருமுகங்களைக் கருணையோடு பார்த்தார்.

ஒவ்வொரு இடத்திலும் அந்தந்த இடத்துக்குத் தகுந்தபடியெல்லாம் அழுத்தம் திருத்தமாகப் பேசினார். உள்ளத்தில் தோன்றியதை ஒளிக்காமல் பேசினார். அதனால் அவர் பேசிய ஒவ்வொரு வார்த்தையும் சக்தி நிறைந்த வார்த்தையாக இருந்தது. அவருக்கு அளித்த வரவேற்பும் அற்பசொற்பமானதல்ல. கொழும்பு நகர மண்டபத்தில் நடைபெற்ற வரவேற்பைப் பாருங்கள். இதோ 'பயவட்' கார் வந்து விட்டது. ஜவாஹர்லால் நேரு வரப்போகிறார். அவரவர்கள் இடத்தில் அமைதியாக இருங்கள். (தொடரும்)

# பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்

உபயோகிக்கும் பெண்மணியுடன் தோற்றமளிக்க

# அவன் பெருமை கொள்ளுகிருன்




எண்ணெய்ப் பசையற்றதான பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உங்கள் சருமத்தைப் பாது காக்கவும், மரு, தழும்பு இவைகளைத் தெரியாமல் மறைக்கவும் செய்யும். இந்த அற்புதமான க்ரீமைத் தடவியபின் பவுடர் போட்டுக் கொண்டால், பவுடர் மணிக்கணக்கில் படிந்து நிற்கும்!

**இலவச புஸ்தகம்**

அழகுபற்றிய குறிப்புகள் கொண்ட Lovelier with Pond's என்ற எமது புத்தகத்தை வரவழையுங்கள். பி. ஓ. பாக்ஸ் நம்பர் 1612, பம்பாய் 1 என்ற விலாசத்திற்கு எழுதவும்

P. 4438



# பிரகாசமுள்ள வெண்ணிறப் பற்கள் மட்டுமல்ல அத்துடன் ஆரோக்கியமான ஈறுகளும்!



ஈறுகளை கெட்டியாகவும், ஆரோக்கியமாகவும் வைக்கவும் மற்றும் பற்களுக்கு ஸ்படிகத்தைப் போன்ற வெண்மையை அளிக்க வேண்டும் என்றே போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் விசேஷமாய்த் தயாரிக்கப்படுகிறது. உங்களை ஈறுகள் சம்பந்தமான நோய்கள் தொற்றிக்கொண்டு அவதி கொடுக்காதிருக்கவே யாவரும் அறிந்த இப்பத்பசையில் டாக்டர் ஆர். ஜே. போர்ஹான் டி. டி. எஸ் அவர்கள் பக்குவப்படுத்திய முறையில் விசேஷ காரப் பொருள் கலக்கப் படுகிறது. ரத்தக் கசிவு வீங்கிய ஈறு புண்ணானதும் மற்றும் கூசும் ஈறுகளை லேசாக போர்ஹான்ஸ் கொண்டு தேய்க்க வேண்டும். அவை உடனே கெட்டியான ஆரோக்கிய நிலைக்குத் திரும்பிவிடும் ஆனபடியால் இந்த இரட்டைக் காரியமுள்ள பற்பசையை நீங்கள் உபயோகித்து பளிச்சென இருக்கும் வெண் பற்களையும் நல்ல ஆரோக்கியமான ஈறுகளையும் உடையவரெனப் பெருமைப் படலாம்.

தந்த வைத்தியரால்
செய்யப்பட்ட டூத்பேஸ்ட்

**போர்ஹான்ஸ்**

**ஈறுகளுக்குகந்தது**




H-11

# மாதர்குல திலகங்கள்



உலகமெல்லாம் போற்றும் நேருஜியைப் புதல்வராகப் பெற்ற மோதிலால் நேருவின் பாக்கியவசத்தை என்னென்று புகழ்வது? இதே வியப்புத் தடுமாற்றம்தான் இந்திராவை இலட்சியப் புதல்வியாக அடைந்த நேருஜியின் பாக்கியவசத்தை நினைக்கும் போது நமக்கு ஏற்படுகிறது.

பிரதமர் நேருஜியின் அன்றாட அலுவல்கள் முதல் நீண்ட சுற்றுப்பிரயாண அலுவல்கள் வரை எல்லாம் இந்திரா அவர்கள்தான் திட்டங்கள் வகுக்க வேண்டியிருக்கிறது. தந்தையின் அருகிலிருந்து அவருடைய கடமைகளுக்கு உதவி புரியும் அபிமான காரியதரிசியாக அவர் விளங்கி வருகிறார்.

இந்திராவின் முழுப் பெயர் பிரியதர்சினி இந்திரா என்பதாகும். 1917-ம் ஆண்டு நவம்பர் மாதம் பிறந்தார். உடல்நல மின்மையால் அடிக்கடி அவதிப்பட்டு வந்த இந்திராவின் தாயாருக்குக் குழந்தை இந்திராவைச் சீராட்டுவது பெரிதும் ஆறுதலாயிருந்து வந்ததில் ஆச்சரியமில்லை. பாட்டனார் மோதிலால் நேருஜிக்கோ இந்திராவைக் காணாமல் ஒரு விநாடிகூட இருக்க முடியாது. தொழில் காரியமாகவோ அல்லது காங்கிரஸ் மகாசபை காரியமாகவோ எங்கேயாவது செல்ல நேர்ந்து விட்டால், எல்லா அலுவல்களையும் பாதியில் போட்டு விட்டுக் குழந்தையைப் பார்க்கத் திடீரென்று கிளம்பி விடுவாராம். குழந்தை மீது நேரு குடும்பத்தினர் இவ்வளவு பாசம் கொண்டிருந்ததால்தானோ என்னவோ, குழந்தையை விட்டுப் பெற்றோர்களையும் மற்றோர்களையும் பிரித்து வைப்பதில் அக்காலத்து பிரிட்டிஷ் அதிகாரவர்க்கம் துடியாயிருந்து வந்தது.

நேருஜி குழந்தையோடு சீராடிக் கொண்டேயிருப்பார். மாளிகை வாசலில் போலீஸ் வண்டி வந்து நிற்கும். குமிழ் நகை புரியும் குழந்தை இந்திராவுக்கு "பை பை! டாடா!" என்று கூறி விடை கொடுத்துவிட்டுக் கைது செய்யவந்த போலீஸ்அதிகாரிகளுடன் சென்று விடுவார் நேருஜி. இம்மாதிரி உருக்கமான சம்பவங்கள் இந்திராவின் குழந்தைப் பிராயத்தில் அடிக்கடி நிகழ்ந்து கொண்டிருக்கும்.

ஒரு சமயம், 1920-ம் ஆண்டு தமது குடும்பத்தினருடன் நேருஜி ஓய்வுபெற முஸ்ஸூரி நகருக்குச் சென்றிருந்தார். அங்கு ஒரு பிரபல ஹோட்டலில் தங்குவதற்கு ஏற்பாடுகள் செய்திருந்தார். அந்த ஹோட்டலுக்கு, நேருஜி குடும்பத்தினர் வருவதற்கு முன்னதாகவே ஆப்கானிஸ்தானத்திலிருந்து சில தேசியவாதிகள் அங்கு வந்திருந்தனர். ஆப்கானிஸ்தானத்தில் அன்னிய ஆட்சிக்கு எதிராகக் கிளர்ச்சி புரிந்து வந்த அரசியல் வாதிகள் அவர்கள். நேருஜி அவர்களோடு ஏதாவது இரகசியம் பேசிவிடலாம் என்று நினைத்து, அதிகாரிகள் நேருஜி அந் நகரில் நுழையக் கூடாதென்று உத்தரவு போட்டார்கள். அப்போது நகருக்கு வெளியே சென்றிருந்த நேருஜி, இந்தத் தடை உத்தரவைப் பெற்றுக்கொண்ட போதிலும், தாம் அதை எதிர்த்து நகரினுள் பிரவேசிக்கப் போவதாகக் கூறிவிட்டார். அவ்வாறே தடையை மீறி நகரில் பிரவேசித்தார். தெருக்களில் இரு மருங்கிலும் பொதுமக்கள் நின்று தடையை மீறி நகரில் பிரவேசிக்கும் நேருஜியை ஆரவார கோஷத்துடன் வரவேற்றனர். குறிப்பிட்ட ஹோட்டலை நேருஜி அடைந்ததும் அங்கு தங்கியிருந்த ஆப்கன் அரசியல்வாதி ஒருவர் தமது கைகளில் மூன்று வயதுக் குழந்தையை ஏந்தியவாறு வரவேற்றார். கையிலிருந்த குழந்தையும் மழலை மொழியில் நேருவை நோக்கி ஏதோ கூறி, தாவித்தாவி மகிழ்ந்தது. அந்தக் குழந்தை வேறு யாருமில்லை. இந்திரா நேருவேதான்!

கவி தாகூரின் சாந்தி நிகேதனத்திலும், ஐரோப்பாவில் பல கல்வி ஸ்தாபனங்களிலும் படித்துத் தேர்ந்த இந்திரா, நேருவை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்து கொண்டிருந்த "நாஷனல் ஹெரால்ட்" பத்திரிகை வெளியீட்டு ஸ்தாபனங்களின் முக்கியமான நிர்வாகிகளில் ஒருவரும், லோகசபை அங்கத்தினருமாகிய திரு பெரோஸ் காந்தி அவர்களை 1942-ம் ஆண்டு மணம் புரிந்து கொண்டார். திருமதி இந்திரா காந்தி இந்திய மாதர் குலத்தின் மேம்பாடுகளுக்காகப் பல துறைகளிலும் ஓயாது பாடுபட்டு வருகிறார்.

தேவியின் கடிதம்

# சீர்வரிசை

வசுமதி ராமசாமி

அன்புக்குரிய சுஜாதா,

உன் கடிதத்தில் டில்லியில் நடைபெற்ற ஒரு கல்யாணத்தில் ஏராளமான சீர் வரிசைகள் செய்திருப்பதாகவும், பார்க்க மிகவும் நன்றாக இருந்ததாகவும் எழுதியிருக்கிறாய்.

இங்கே சாதாரணமாக நடைபெற்ற ஒரு கல்யாணத்தின் சீர்வரிசைகள் வெகு அழகாக இருந்தன. புது தம்பதிகள் குடும்பம் நடத்தக் கூடிய உபயோகமான சாமான்கள் நிறைய வாங்கியிருந்தார்கள். குடும்பத்திலுள்ள மற்றவர்களும், ஒருவர் வாங்கினதை இன்னொருவர் வாங்காமல் ஒத்துப் பேசிக்கொண்டு மின்சார விசிறி முதல் சாதாரணச் சோப்புப் பெட்டி வரையில், இரும்பு பீரோவிலிருந்து சின்னக் கரண்டி மாட்டும் ஸ்டாண்டு வரையில் கச்சிதமாக வாங்கியிருந்தார்கள். அப்படியே குடும்பம் நடத்த வசதியாகப் பொருள்கள் அழகாக அமைந்திருந்தன.

பெண் பிறந்துவிட்டால் செலவுதான் என்று பெற்றோர்களும், உற்றார்களும் நினைக்கிறார்கள். அது உண்மைதான். முன்னெல்லாம் பெண்கள் கல்யாணத்தின் காரணமாகச் சில குடும்பங்களில் சொத்து குறைந்து நொடித்துப் போவதுண்டு. இப்பொழுது அந்தக் கவலை இல்லை. சொத்து என்று யாராலும் சேர்க்க முடியாது. சேர்த்திருந்தாலும் வைத்துக் கொள்ள முடியாதல்லவா? அதுவரையில் சற்று நிம்மதிதானே.

மத்தியதர பிராகிருதார் குடும்பங்களில் சிலர் பெண் கல்யாணத்துக்காகச் சக்திக்கு மேல் கடன் வாங்கி வரதக்ஷிணை கொடுப்பது மிகக் கொடுமை. வரதக்ஷிணையைக் கண்டனம் செய்து மேடைமேல் பேசுவார்கள். கல்லூரி மாணவர்கள் வரதக்ஷிணையின்றிக் கல்யாணம் செய்து கொள்ளப் போவதாகப் பிரதிக்ஞை எடுத்துக் கொள்வார்கள். ஆனால் நடப்பது வேறு விதம்.

ஒருபெண்ணின் தந்தையை விடத் தாயாருக்குத் தன் பெண்ணுக்கு நிறையச் சீர்வரிசைகள் செய்ய வேண்டுமென்ற ஆசை இயற்கையில் அதிகமாக இருக்கிறது. அளவுக்கு மீறிச் செய்யத்தான் முயற்சி செய்வாள். தன்னுடைய பெண் முகமலர்ச்சியுடன் சந்தோஷமாக இருக்க வேண்டும் என்பதில் அவளுக்கு இல்லாத அக்கறை வேறு யாருக்கு உண்டு? எனவே பிள்ளையின் பெற்றோர்கள் 'சீர் வரிசைகளையெல்லாம் கொண்டு வந்து வைத்தால்தான் ஆயிற்று' என்று பிடிவாதமாகக் கேட்டு வற்புறுத்தி வாங்க வேண்டாமென்பது தான் என் தாழ்மையான அபிப்பிராயம்.

தற்காலத்தில் மிகக் குறைந்த சீர் வரிசைகளுடன் கண்டிப்பின்றிக் கல்யாணங்கள் நடைபெறுகின்றன. ஆனால் சம்பந்திகள் ஒத்துப் போய் விடுகிறார்கள். இதரர்கள்தான் "பெண்வீட்டார் செய்தது போதவில்லை. இது பிள்ளை வீட்டார்களுக்கு மிகுந்த அவமானம். வெளியில் சொல்லிக் கொள்ளமுடியாமல் திண்டாடுகிறார்கள்" என்றெல்லாம் சொல்லிக்கொண்டு போகிறார்கள்.

இன்று கல்யாணங்களுக்கு இவ்வளவுக்கு மேல் செலவு செய்யக் கூடாதென்றும், செலவு செய்பவர்களுக்கு வரி என்றும் சட்டம் வந்துவிட்டது. இதன் பயனாகச் சில செலவுகள் குறையலாம். ஆனால் சம்பந்திகளுக்குச் செய்வது ஒருவருக்கும் தெரியாமல் செய்ய வேண்டிய நிலைமை வரும். சட்டத்துக்காகப் பிள்ளை வீட்டார் தமக்குச் செய்ய வேண்டாமென்று சொல்லிவிட மாட்டார்கள்.

'கல்யாணத்துக்குச் செலவே செய்யக் கூடாது. மோதிரம் மாற்றிக் கொண்டால் போதுமானது. மற்றவை வீண்' என்று சொல்வதைச் சரியென ஒத்துக் கொள்ள முடியாது. நாம் உண்டு, உடுத்திக் களிக்கத்தான் பாடுபட்டுச் சம்பாதிக்கிறோம். குருவி மாதிரி சேர்க்கிறோம். எல்லாப் பெற்றோர்களும் தங்கள் குழந்தைகள் கல்யாண தினத்தைப் பெரிய நன்னாளாக நினைக்கிறார்கள். அதைக் கொண்டாட அவர்கள் வசதிக்கு ஏற்பச் செலவு செய்து சந்தோஷப் பட வேண்டியது தானே. அந்த விசேஷத்தை ஒட்டிக் கடைக்காரர்களும், தொழிலாளிகளும் பயன் பெறுகிறார்கள். ஆனால் கல்யாணத்தில் பண்டங்களைப் பாழாக்கிக் குப்பையில் கொட்டுவது பெருந் தவறாகும். வசதி இல்லாதவர்கள் மற்றவர்களுக்குக் குறையக் கூடாதென்று சிரமப்பட்டு நிறைவேற்றுவது துன்பமாக முடியும். தவறு அங்கே தான் இருக்கிறது. வசதி உள்ளவர்கள் செலவு செய்வது பங்கீடு செய்யும் முறைதான்.

கல்யாணங்களுக்குச் செலவு செய்வதைக் கண்டிக்கிறோம். ஆனால் வருஷா வருஷம் ஆண்டுவிழா, மகாநாடுகள் என்றெல்லாம் பந்தல் போடுகிறோம்; விருந்து வைக்கிறோம்; மேளம் கொட்டுகிறோம். அவைகளில் நாம் சந்தோஷம் இல்லையெனச் சொல்ல முடியாது.

அதனால், உண்மையாக ஆனந்தம் ஏற்படும் வகையில் சக்திக்கு ஏற்பச் செலவு செய்வது தான் சிறந்தது.

இப்படிக்கு,

பூமாதேவி



# கிறிஸ்துவத் துறவி லாரென்ஸ்



ராஜாஜி

## 4. துறவி லாரேன்ஸின் வசனங்கள்

**தா**யைக் குழந்தை பற்றி நிற்பது போல் பகவானைப் பற்றிக் கொண்டு நிற்பதுதான் சரியான வழிபாட்டு முறை. பெரியார்கள் நமக்கு வகுத்திருக்கும் பிரார்த்தனை முறையும் இதுவே. பகவானை நம்பி வாழாதவன் தன்னையும் அறியான், கடவுளையும் அறியான். மூடனுவான்.

நம்முடைய உள்ளத்தை அடைய ஆண்டவன் மிகவும் விரும்புகிறான். அவனுக்கு நாம் அர்ப்பணம் செய்யும் பொருளாகிய நம்முடைய உள்ளம், சுத்தமாக இருக்க வேண்டும். மனத்தைப் பாப எண்ணங்கள் நெருங்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அந்த எண்ணங்களே நமக்குப் பெரும் சத்துருக்கள். பாப சிந்தனைகளுக்கு இடம் கொடுத்தால் அவை சீக்கிரமே பாபச் செயல்களையும் தூண்டும். அது இல்லையாயினும் அந்த எண்ணங்களினுலேயே உள்ளத் தூய்மை கெட்டுப் போகும்.

உள்ளத் துப்புரவை நாம் உண்மையில் விரும்பி ஆண்டவனை இறைஞ்சினுேமானுல் அவன் கட்டாயம் உதவி செய்வான். பாப சிந்தனைகளை விலக்கலாம். அவன் வந்து நம் உள்ளத்தில் கோயில் கொள்ள வேண்டும் என்று நாம் தீவிர உணர்ச்சியுடன் விரும்பினுல் நிச்சயமாக அவன் அருள்வான்.

**நா**ன் என் அனுபவத்தில் கண்டதைச் சொல்லுகிறேன். நம்முடைய எல்லாச் செய்கைகளையும் ஆண்டவனுடைய பிரீதிக்காகச் செய்து வருவதுதான் வாழ்க்கையில் சுகத்துக்கு வழி, அதுவே நன்னெறியும் ஆகும். 'பகவத் பிரீத்யர்த்தம்' அதாவது ஆண்டவனுடைய சந்தோஷத்துக்காக அனைத்தையும், சிறியதையும் பெரியதையும், செய்து கொண்டு போக வேண்டும். கீழே கிடக்கும் ஒரு துரும்பை எடுத்துப் போடுவதும் அவனுக்காக என்று செய்தால் அதில் ஒரு தனி மகிழ்ச்சி யுண்டாகும். அவனை நாம் ஒன்றும் கேட்க வேண்டாம். இது வேண்டும், அது வேண்டும் என்று கோராமல் அவனைக் காதலித்து அவனுடைய திருப்திக்காக எல்லாம் செய்து கொண்டு போக வேண்டும்.

ஆண்டவனிடம் யோசனை கேட்டும், அவனைத் தோழனுக்கிக் கொண்டு அவனேடு கலந்தும் சம்பாஷித்தும் எல்லாக் காரியங்களையும் எல்லாச் சமயத்திலும் செய்யும் வாழ்க்கை நெறியில், முதலில் கொஞ்சம் விடா முயற்சி செலுத்த வேண்டியதாகும். செலுத்திஞல் பிறகு நாம் காண்போம், அவன் இந்த முயற்சியை வெற்றி பெறச் செய்வான் என்பதை. போகப் போக நாம் காண்போம், அவனுடைய அருள் மிக வேகமாகப் பெய்து நமக்கு உதவி வருவதை.

ஒரு நல்ல காரியம் செய்யும் அவகாசம் ஏற்படுமானுல், ''ஆண்டவனே, நீயும் கூட இருந்து உதவினுலொழிய இதை நான் செய்து முடிக்க இயலாது'' என்று ஆண்டவனுக்குச் சொல்லி இறைஞ்சுவேன். உடனே அந்தக் காரியத்துக்கு வேண்டிய ஆற்றலையும் அதற்கும் மேலேயும் கூட அடைந்து விடுவேன் என்பதை என் அனுபவத்தில் அடிக்கடி கண்டிருக்கிறேன்.

ஏதேனும் தவறு செய்து விட்டேனுல், ''பகவானே! நீ என்னைத் தனியாய் விட்டு விட்டாய். அதனுல் இப்படியாயிற்று. நீ என்னை இப்படி விட்டு விட்டால் நான் தவறுதான் செய்வேன். இது உனக்குத் தெரியாதா? உன்னுடைய பாடு என்று என்னைத் தனியாக விட்டு விடாதே!'' என்று ஆண்டவனிடம் சொல்லி விட்டுக் கவலை யின்றியிருப்பேன்; என் பிழையைப் பற்றி எண்ணி எண்ணி அலைய மாட்டேன். உள்ளத்தில் மறுபடியும் ஆண்டவன் புகுந்த பிறகு எனக்கு என்ன கவலை?

அவன் உதவியை அருளும்படி கேட்கும் போது ஆண்டவனிடம் மோசமின்றி, கபடமின்றி, யுக்தியின்றிப் பேசவேண்டும். உள்ளம் திறந்து பேச வேண்டும். இப்படி இறைஞ்சினுல் அவன் எப்பொழுதும் அருள்வான்; மறுத்ததை நான் என்னுடைய அனுபவத்தில் கண்டதில்லை.

# மாலவல்லியின் தியாகம்

அத்தியாயம் 23

## கங்க நாட்டு இளவரசன்

கடைக்குச் சமீபமாக வந்து நின்ற வாலிபனைக் கண்டதும் வணக்கத்துடனே எழுந்து நின்று வரவேற்றான் அந்த முத்து வியாபாரி குணசிங்கன். அவன் அந்தக் கடையின் உள்ளே நுழைந்தபோது அங்கிருந்த ஆசனம் ஒன்றை இழுத்துப் போட்டுக் கொண்டு அமர்ந்து கொண்டான்.

அந்த வாலிபன் அங்கு வந்தது, அதுவரையில் அங்கு நடந்த சம்பாஷணைக்கு முற்றுப்புள்ளி வைத்தது போலாகி விட்டது. பூதுகனின் பெயரைக் கேட்டதும் சிறிது ஆச்சரியம் அடைந்து நின்ற சந்தகர் மேலும் பூதுகனைப் பற்றி அவர்கள் ஏதேனும் பேசுவார்களோ என்று எதிர்பார்த்ததற்கு மாறாகத் திடீரென்று ஒரு வாலிபன் தோன்றி அவர்கள் சம்பாஷணைக்கு முற்றுப் புள்ளி வைத்ததை நினைத்துச் சிறிது ஆயாசம் அடைந்தார். இருப்பினும் அவ் வாலிபனின் கவர்ச்சிகரமான உருவமும் அவனுக்கு நடந்த உபசாரமும் அவர் மனத்தில் சிறிது வியப்பை ஏற்படுத்தவே, அவருக்கு அவ் வாலிபனைப் பற்றியும் சிறிது தெரிந்து கொள்ள வேண்டுமென்ற சிரத்தை ஏற்பட்டு விட்டது.

பக்கத்துக் கடை வியாபாரி அந்த வாலிபன் முத்துக் கடையில் வந்து உட்கார்ந்ததும், இந்தச் சமயத்தில் இடையூறாக உரையாடுவது உசிதமில்லை என்று நினைப்பவன் போல் வேறு திசையில் தன் கவனத்தைச் செலுத்தலானான். வியாபாரம் நடக்கும் ஒரு கடையில் அனாவசியமாக அறிமுகமில்லாத தாம் நிற்பது லக்ஷணமல்ல என்பதைச் சந்தகர் உணர்ந்திருந்தார். இருப்பினும் அந்த முத்து வியாபாரியிடம் முக்கியமாக ஏதோ பேச நினைத்ததாலும், புதிதாக வந்த அந்த வாலிபனைப் பற்றிச் சிறிது தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவல் ஏற்பட்டதாலும் அந்த இடத்தை விட்டுச் செல்ல மனமில்லாதவராக அங்கு குவிக்கப்பட்டிருந்த முத்துக்களில் தம் கவனத்தைச் செலுத்துகிறவர் போல் நின்றார். குதிரையில் வந்த அந்த அழகிய வாலிபன், "குணசிங்கரே! குடந்தைக்குச் சமீபமாக உள்ள கோமூச்சுவரத்திலிருந்து சந்தகர் என்ற சோதிடர் இவ்வூருக்கு வந்திருக்கிறாராமே? உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டான்.

அந்த வாலிபன் தம்மைப் பற்றி விசாரிப்பதைக் கேட்டதும் சந்தகருக்கு ஏற்பட்ட வியப்பும் திகைப்பும் அதிகமாகி விட்டன. இருப்பினும் அவர் அந்தச்

கி.ரா.கோபாலன்

சமயம் தம்மை யார் என்று வெளிக் காட்டிக் கொள்ள விரும்பவில்லை. அங்கு குவிக்கப்பட்டிருக்கும் முத்தில் ஒரு கை எடுத்து அவைகளை விரலால் புரட்டிப் புரட்டிப் பரிசீலனை செய்பவர் போலப் பார்த்துக் கொண்டிருந்தார்.

"கோடீச்சுவரத்திலிருந்து சோதிடர் வந்திருக்கிறாரா? எனக்குத் தெரியாதே. பக்கத்துக் கடைக்காரரை வேண்டுமானால் விசாரிக்கிறேன்" என்றான் முத்து வியாபாரி.

"வேறு ஒருவரையும் விசாரிக்க வேண்டாம். உமக்குத் தெரியுமாஎன்றுதான் கேட்டேன். உமக்குத் தெரியாவிட்டால் பாதகமில்லை. நானே அதை விசாரித்து அறிந்து கொள்கிறேன்" என்றான் அந்த வாலிபன்.

"உங்களுக்கு எதற்காக அந்த சோதிடரைப் பற்றித் தெரிய வேண்டும்?" என்றான் முத்து வியாபாரி.

"நல்ல சோதிடர் என்றால் பார்க்கத் தோன்றாதா? முக்கியமாகச் சில விவரங்கள் அவரை விசாரிக்க வேண்டும்" என்றான் அந்த வாலிபன்.

"உங்களுக்குச் சோதிடத்தில் இவ்வளவு பற்றுதல் இருக்குமென்று நான் நினைக்கவில்லை. நீங்கள் ஜைன சமயத்தைச் சேர்நதவர்கள். உலகில் மனிதன் தன்னுடைய கர்ம விதியிலிருந்து பேதைமை புத்தியினால் ஏதேதோ செய்து மீண்டு வருவதாக நினைப்பதுபற்றி மகாவீரர் எள்ளி நகையாடி இருக்கிறார். 'நம்முடையவினையைத்தவத்தால்வெல்வதை விட வேறு வழிகளில் நம் வினையை வென்று விட்டோம்' என்று நினைப்பது மடமையாகும் என்று அவரே சொல்லி இருக்கிறார். எங்கள் ததாகதரும் 'பேதை மனிதன் மடமை நிறைந்த சில கொள்





சைசனிலிருந்து விலகினால் அந்த அனுவுக்கு அவன் பேதையாகிறான்' என்று சொல்லியிருக்கிறார். இதையெல்லாம் நான் உங்களுக்குச் சொல்லித் தெரிய வேண்டாம். சோதிடர்களும் நம்மைப் போன்ற மனிதர்கள்தான். தங்கள் வினைப் பயனை மீறி எதுவும் செய்ய முடியாத அவர்கள் பிறருடைய வினைப் பயனைத் தீர்த்துவிடப் போகிறார்களா?'' என்று கேட்டான் வியாபாரி.

இதுவரையில் எல்லாவற்றையும் பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருந்த சந்தகர் கையிலிருந்த முத்துக்களை அலட்சியமாகக் குவியலில் போட்டு, ''புத்தர்பிரான், மகாவீரர் இவர்களுடைய அமுத மொழிகளைக் கேட்டு அதன்படியே ஒவ்வொருவரும் நடப்பதானால் இந்த உலகமே சுவர்க்கமாகி விடும். இந்த மனித குலத்தைக் கடைத்தேற்றுவதற்காக அவர்கள் பல அரிய வழிகளை வகுத்து விட்டுப் போயிருக்கிறார்கள். ஆனால் மனிதன் அவர்கள் விட்டுப்போன அரிய வழிகளைக் கடைத்தேற்றுகிறவன் போல் தன்னுடைய சுயநலத்தை அனுசரித்துத் தனக்கேற்ப ஒரு மார்க்கத்தை அமைத்துக் கொள்கிறான். சோதிட சாஸ்திரம் பொய்யானதல்ல. அவைகளும் சிறந்த ஞானிகளால் உருவாக்கப் பட்டவைதான். இந்த நாட்டில் புராதனமாகத் தோன்றிய வேதத்தின் ஓர் அங்கமாகவே நிற்கிறது சோதிட சாஸ்திரம். தனி மனிதனின் இன்ப துன்பத்துக்காக மாத்திரம் அந்த சாஸ்திரம் ஏற்பட்டதில்லை.

''இந்தப் பரந்த உலகின் கிரக சஞ்சாரங்களின்பலனாக அப்போதைக்கப்போது ஏற்படும் மாறுதலைக் கணக்கெடுத்துக் காட்டுகிறது சோதிட சாஸ்திரம். நமக்கு ஒளியளிக்கும் சூரியனும் சந்திரனும் அலட்சியம் செய்துவிடக் கூடியவர்களல்ல. இவற்றைப்போல் மற்ற கிரகங்களும் அலட்சியம்செய்து விடக்கூடியவை அல்ல. இரவு, பகல், மழை, காற்று, நெருப்பு இவைகளெல்லாம் அந்த கிரக சஞ்சார பலன்களினால் ஏற்பட்டு இந்த உலகத்துக்கு நன்மையையோ தீமையையோ செய்கின்றன என்பது மறைக்க முடியாத உண்மையாகும். இந்த உலகில் சிறு நன்மை தீமைகள் கூட அந்த கிரக ரீதியின் பலனைத்தான் ஏற்படுகின்றன வென்பதை நல்ல புத்திசாலிகளிடம் போய்க் கேட்டால்தான் சொல்லுவார்கள். விதியை வெல்ல வேண்டுமென்று எண்ணும் மனிதன்கூடத் தெய்வ வலிமையையும் அதற்கு அடங்கியுள்ள கிரக வலிமையையும் அலட்சியம் செய்வதில்லை. மனிதன் பிறக்கும்போதே இக்கிரகங்களின் குண தோஷத்தோடு சிருஷ்டிக்கப்பட்டவனாகி விடுகிறான் என்பது தான் நம் முன்னோரின் கருத்து. ஆகையால் தம் மன ஆறுதலுக்காக ஒரு சோதிடரைக் காண விரும்பிய ஒருவரிடம் இத்தகைய வார்த்தைகள் சொல்லாதீர்கள்'' என்றார்.

சந்தகரின் வார்த்தைகளைக் கேட்ட அவ் வாலிபன் சிறிது முகமலர்ச்சியுற்றவனாக அவரைப் பார்த்துக் கொண்டே, ''தாங்கள் சொல்வதுதான் உண்மை. தாங்களும் சோதிட சாஸ்திரத்தில் வல்லவர்களென்று தெரிகிறது'' என்றான்.

''எனக்கு அந்த சாஸ்திரத்தில் பயிற்சியும் இல்லை. தாங்கள் சொல்லியபடி கோமச்சுவரத்துச் சந்தகர் இந்த சாஸ்திரத்தில் மிகுந்த தேர்ச்சியுள்ளவரென்றுதான் நானும் கேள்வியுற்றிருக்கிறேன்'' என்று கூறினார்.

''அப்படியென்றால் அவர் இருக்கும் இடம் தெரியுமா தங்களுக்கு?'' என்று கேட்டான் அவ் வாலிபன்.

''தெரியும். என்னோடு வந்தீர்களானால், அவர் இருக்கும் இடத்துக்கு அழைத்துச் செல்கிறேன்'' என்றார்.

அந்த வாலிபன் ஆர்வத்தோடு எழுந்து, ''சரி வாருங்கள், போகலாம்'' என்று அழைத்தான்.

அந்தச் சமயம் சந்தகர் அந்த முத்து வியாபாரியோடு பேசிச் சில விவரங்கள் அறியத்தான் வந்திருந்தார். ஆயினும் அந்த வாலிபனின் வேண்டுகோளைத் தட்ட முடியாதவராகி அவனோடு புறப்படச் சித்தமானார்.

அந்த வாலிபன் குதிரையிலேறி அமராமல் அதன் லகானைக் கையில் பற்றியபடியே சந்தகரைப் பின் தொடர்ந்து நடந்தான். சிறிது தூரம் சென்றதும் சந்தகர் அந்த வாலிபனைப் பார்த்து, ''இப்பொழுது நாம் எங்கு செல்லலாம்?'' என்று கேட்டார்.

அவருடைய வார்த்தையைக் கேட்ட அந்த வாலிபன் திகைப்படைந்தவனாக, ''எங்கு செல்லலாமென்றால்?......நாம் சோதிடர் சந்தகரைப் பார்க்கத்தானே போகிறோம்?....'' என்றான்.

''ஆமாம். நீங்கள் குறிப்பிடும் சந்தகர் நான்தான். அவ்விடத்தில் என்னை யாரென்று காட்டிக் கொள்ளப் பிரியப்படவில்லை. நாம் ஒரு தனியான இடத்திலிருந்து பேசினால் நலம். உங்கள் மனத்தில் உள்ளதைத் தாராளமாகக் கேட்கலாம்—நானும் தாராளமாகப் பதில் சொல்லலாம். அதனால்தான் எங்கே போகலாம் என்று கேட்டேன்'' என்றார்.

அந்த வாலிபன் ஆச்சர்யத்தின்மேல் ஆச்சர்யம் அடைந்தவனாக, ''உங்களை முதலில் பார்த்தபோதே அப்படித்தான் எனக்குச் சந்தேகம் ஏற்பட்டது. நீங்கள் சொல்வதும் சரிதான். நாம் எங்கேனும் தனிமையான இடத்தில் இருந்து பேசுவதுதான் நலம். எங்கள் நாட்டிலிருந்து இங்கு வந்திருக்கும் பட்டு வியாபாரி தங்கியிருக்கும் இடத்துக்குப் போவோம். அங்குதான் நான் இந்த ஊருக்கு வந்தால் தங்குவது வழக்கம்'' என்றான்.

''சரிதான். தாங்கள் எந்த நாட்டைச் சேர்ந்தவர்கள்?'' என்றார் சந்தகர்.

''நான் கங்கபாடியைச் சேர்ந்தவன். ஒரு சாதாரணப் போர்வீரன்'' என்றான் அவ் வாலிபன்.

''தங்களைப் பார்த்தால் ஒரு சாதாரணப் போர்வீரராக எனக்குத் தோன்றவில்லை. ஒரு சாதாரணப் போர்வீரருக்கு அந்த முத்து வியாபாரி அவ்வளவு மரியாதையும் உபசாரமும் காட்ட வேண்டிய அவசியம் இல்லையல்லவா?'' என்றார் சந்தகர்.

''இல்லை. நான் ஒரு சாதாரணப் போர் வீரன்தான். என் பெயர் வீரவிடங்கன். ஒரு முத்து வியாபாரி செய்த உபசாரத்திலிருந்து என்னைப்பற்றித் தாங்கள் வேறு விதமாகத் தீர்மானித்துவிடக் கூடாது. எப்பொழுதுமே வியாபாரிகள் தங்களிடம் அதிகமாக வியாபாரம் செய்பவர்களை மிகவும் குழைவோடு உபசரிப்பார்கள்'' என்றான்.

''எனக்கு அது தெரியும். முத்து வியாபாரியின் உபசாரத்தைக் கொண்டு மாத்திரம் உங்களை நான் தீர்மானித்துவிடவில்லை. ஒரு சோதிடரின் முதல்

## தனது கவுனை வெண்மையென அவள் நினைத்திருந்தாள்

ஆனால், ரின்ஸோவினால் சலவை செய்த மீனாவின் கவுனைப் பார்த்ததும் பிரமித்தாள்!



## உண்மை! ரின்ஸோ அதிவெண்மையாக வெளுக்கிறது




அற்புத சோப் பவுடராகிய ரின்ஸோவினால் சலவை செய்யுங்கள். உங்களுடைய வெண்மை ஆடைகள் கண்ணைப் பறிக்கும் வெண்மையாக ஆகிவிடும்! வர்ண துணிகளும் அதிகப் பிரகாசமடையும்! அடித்துத் துவைக்கவோ, அழுத்தித் தேய்க்கவோ வேண்டியதில்லை. ரின்ஸோவின் பிரமிக்கத்தக்க விறுவிறுப்பு வாய்ந்த நுரை எல்லா அழுக்குகளையும் கழுவிக் களைந்துவிடும். கண்ணைப் பறிக்கும் அத்தகைய அதிகப்படி வெண்மைக்கு நீங்கள் சேர்க்க வேண்டியது வேறொன்றுமில்லை, குடும்பத்தின் சகல சலவைகளுக்கும் ரின்ஸோ உபயோகியுங்கள்!

**. . . சலவை செய்ய மிகவும் சுலபமானது**

**இந்த அற்புத சோப் பவுடர்**

R. 7-50 TM

பாடம் தம்மிடம் சோதிடம் கேட்க வந்தவர்களின் சாமுத்திரிகா இலட்சணங்களையும் அறிந்து கொள்வது தான். நான் தங்கள் சாமுத்திரிகா இலட்சணங்களை மாத்திரம் அறிந்து கொள்ளவில்லை; தங்கள் குதிரையின் சாமுத்திரிகா இலட்சணங்களையும் அறிந்து கொண்டேன். சிலசமயம் ராஜகுமாரர்கள் கூடத் தங்களைப் போர் வீரர்கள் என்று சொல்லிக் கொள்வதில் பெருமை அடைகிறார்கள். நம்முடைய நாட்டில் ராஜ பரம்பரைப் பண்பாடே அதுதான். ஒரு சிறந்த போர்வீரனைத் திகழ்பவன்தான் ஒரு அரச குமாரனையோ அரசனையோ திகழ முடியும். நீங்கள் சொல்லியபடி இன்று சாதாரணமான போர்வீரனை இருக்கலாம். ஆனால் எதிர்காலத்தில் ஒரு அரசராகக் கூடிய சாமுத்திரிகா இலட்சணங்கள் உங்களிடம் அமைந்திருக்கின்றன'' என்றார் சந்தகர்.



பம்பாய் ஸ்ரீ செல்லமணி பாகவதரின் சிஷ்யையும், ஸ்ரீ என். இ. ஐயர் அவர்களின் புதல்வியுமான குமாரிசரோஜாவுக்கு இந்திய அரசாங்கத்தார்கர்நாடக சங்கீத மேல் படிப்புக்காக உபகாரச் சம்பளம் அளித்திருக்கின்றனர். உபகாரச் சம்பளம் பெற்ற குமாரி சரோஜா சென்னை கர்நாடக சங்கீதக் கல்லூரியில் சேர்ந்துள்ளார்.

வீரவிடங்கன் சிரித்துக் கொண்டே ஏதோ யோசனையில் ஆழ்ந்த வண்ணம் நடந்தான். அவன் மிகவும் அடக்கமான குரலில், ''கோடீச்சுவரத்துச் சோதிடரைப்பற்றி நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன். இன்று அவரை நேரில் பார்த்ததிலிருந்து அவர் மிகவும் திறமைசாலிதானென்பதையும் அறிந்து கொண்டேன். தங்கள் வாக்குப் பலிதமடையுமானல் தங்கள் ஆசீர்வாதப்படி எதிர்காலத்தில் நான் ஒரு மன்னனைத் திகழும் பாக்கியம் பெற்றவனகிறேன்'' என்றான்.

சிறிது நேரத்தில் அவர்கள் மருவூர்ப் பாக்கத்தில் பல தேசத்து வியாபாரிகளும் தங்குவதற்காகச் சிறு சிறு விடுதிகள் அமைக்கப்பட்டிருந்த விடுதி யொன்றுக்குச் சமீபமாக வந்தனர். தன் குதிரையை அங்கு நடப்பட்டிருந்த கொம்பில் பிணைத்துக் கட்டி விட்டுச் சந்தகரை அழைத்துக் கொண்டு விடுதியில் நுழைந்தான் அவ் வாலிபன். அவ் விடுதியில் இருந்த பணியாள் ஒருவன் அவர்களைக் கண்டதும் எழுந்து வணக்கம் செலுத்தினன். வீரவிடங்கன் அந்தப் பணியாளை வெளியே செல்லும்படியாகக் கண்ஜாடை காட்டவும் அவன் சிரங் குனிந்து வணங்கிவிட்டு வெளியே சென்றான்.

அந்த அறையில் அமருவதற்காக அழகான ரத்தினக் கம்பளம் ஒன்று விரிக்கப்பட்டிருந்தது. கவரோரமாகப் பட்டு வியாபாரி கொண்டு வந்து நிறைத்திருக்கும் பட்டு, நூல், துணி முதலானவைகள் கட்டுக் கட்டாக அடுக்கப்பட்டிருந்தன. இவை தவிர அவ் வறையில் விசேஷமாக எதுவும் இல்லையென்று சொல்லலாம்.

வீரவிடங்கன் அங்கிருந்த இரண்டு திண்டுகளை எடுத்துப் போட்டு அதில் சாய்ந்துகொண்டு சந்தகரையும் உட்காரும்படி வேண்டிக் கொண்டான்.

சந்தகர் அவன் எதிரில் உட்கார்ந்து தன் எக்கில் செருகியிருந்த சோழிப் பையை எடுத்து எதிரே வைத்துக்கொண்டார். பிறகு, ''சோதிடர்களிடம் எப்பொழுதுமே பொய் சொல்லக் கூடாது. சோதிடம் கேட்க வருகிறவர்கள் பொய்யோடு வந்தால் சோதிடர்கள் சொல்லும் பலனும் பொய்யாகத்தான் இருக்கும். வைத்தியர்களிடம் எப்படி உண்மையான உடல் நிலையைச் சொல்லுகிறேமோ அப்படித்தான் சோதிடர்களிடமும் உண்மையான நிலையை எடுத்துச் சொல்ல வேண்டும். உங்களை ஒரு ராஜகுமாரனென்று சொல்லும்போது அதை நீங்கள் இல்லையென்று மறுத்தால் அப்பொழுது நான் பொய்யனகி விடுகிறேன். அந்த சாஸ்திரமே பொய்யாகிவிடுகிறது. அதை நான் எதற்காகச் சொல்லுகிறேனென்றால் அந்த சாஸ்திரத்தை உண்மையென்று மதித்துத் தாங்கள் என்னிடம் சோதிடம் கேட்க வருகிறீர்கள். அப்படி இருக்கும்போது நீங்களும் உண்மையோடு வந்தால்தான் அந்த சாஸ்திரமும் உண்மையானதாகும். இப்பொழுது நீங்கள் உங்கள் சந்தேகத்தைக் கேட்பதற்கு முன்னல் உங்கள் உண்மை நிலையை எனக்குச் சொல்லிவிட வேண்டும்'' என்றார் சந்தகர்.

வீரவிடங்கன் தயங்கியபடியே ஏதோ யோசனையில் ஆழ்ந்தான். சந்தகர்

கேள்வி அவனுக்கு ஒருவிதத்தில் சங்கடத்தை ஏற்படுத்தியது. தான் அவரிடம் சோதிடம் கேட்கப் போய் இவ்வளவு விபரீதமான முறையில் அகப்பட்டுக் கொள்ள நேரும் என்று அவன் நினைக்கவில்லை. என்ன செய்வது? இவ்வளவுக்குப் பின்னும் உண்மையை மறைப்பது எப்படி? அவன் சிரித்துக் கொண்டே, "நீங்கள் மிகவும் தந்திரக்காரர். எப்படியோ என்னிடமிருந்து உண்மையைக் கறந்து விட்டீர்களே. நான் கங்க தேசத்து இளவரசன். என் பெயர் பிரதிவீபதி. என்னை இக் காவிரிப் பூம் பட்டினத்தில் இன்னாரென்று சிலருக்குத்தான் தெரியும். அனேகருக்கு என்னை இன்னாரென்று தெரியாது. சில காரணங்களால் என்னுடைய பெயரை நான் மறைக்கத்தான் வேண்டி யிருக்கிறது" என்றான்.

"இருக்கலாம். சில சமயங்களில் அப்படித்தான் நடந்து கொள்ள வேண்டியிருக்கிறது. இதோ பாருங்கள். இந்த முத்து வியாபாரி எதிரில் நான்தான் கோடீச்சுவரத்துச் சோதிடர் சந்தகர் என்று காட்டிக்கொண்டேனா? இப்படித்தான் என்னுடைய நண்பன் பூதுகனும் அனேக இடங்களில் தன்னைக் காட்டிக் கொள்ளாமலேயே நடந்து கொள்வான்" என்றார் சந்தகர்.

பூதுகன் என்ற பெயரைக் கேட்டதும் வீரவிடங்கன் என்ற பெயரில் மறைந்திருந்த பிரதிவீபதி சிறிது ஆச்சர்யம் அடைந்தவனாக, "பூதுகரா! அவர் உங்களுடைய நண்பரா!.." என்றான்.

"ஆமாம், மிகவும் அந்தரங்கமான நண்பன். அவனை உங்களுக்குத் தெரியுமா?" என்றார் சந்தகர்.



"நன்றாகத் தெரியும், நான் அவரோடு அதிகமாகப் பழகியதில்லை. பழகிய சிறிது நேரத்தில் எனக்கு மிகவும் அந்தரங்கமான நண்பராகி விட்டார். அவர் இப்பொழுது எங்கே இருக்கிறார் என்று உங்களுக்குத் தெரியுமா? அவரைப் பார்க்க வேண்டுமென்ற துடிப்புத்தான் எனக்கு" என்றான் அவ் வாலிபன்.

"அவனைப் பார்க்க வேண்டுமென்று ஆவலில் தான் நான் இந்தக் காவிரிப் பூம்பட்டினத்துக்கு வந்தேன். அவன் இங்கு இல்லையென்று நன்றாகத் தெரிந்து விட்டது. ஒரு வேளை காஞ்சீபுரத்தில் இருக்கலாமோ என்ற சந்தேகம். நான் கூடக் காஞ்சீபுரம் போகலாமென்று நினைக்கிறேன். உங்களுக்கும் அவனுக்கும் நட்பு ஏற்பட்டது எப்படி?" என்றார்.

"எல்லாம் தெய்வாதீனமாகத்தான் ஏற்பட்டது. அதைச் சொன்னால்தான் புரியும். ஒருநாள் அவர் கடற்கரையில் ஒரு பௌத்த பிக்ஷுவோடு மல் யுத்தம் செய்து கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் அவர்களின் சண்டைக்குநடுவிலே நான் புகுந்து சமாதானம் செய்து அந்த பௌத்த பிக்ஷுவை உயிரோடு விட்டு விட ஏற்பாடு செய்தேன். அவர் மல்யுத்தம் செய்வதில் இவ்வளவு சமர்த்தராக இருப்பார் என்று நான் நினைக்கவில்லை."

"அவன் இந்த விஷயத்தில் மாத்திரம் தீரன் என்று சொல்ல முடியாது. உடல் வலுவிலும் புத்தி வலுவிலும் மிகச் சிறந்தவன். உண்மையிலேயே க்ஷத்திரியனாகப் பிறக்க வேண்டிய அவன் அந்தணனாகப் பிறந்து விட்டான்" என்றார் சந்தகர்.

"அவர் அந்தணரா? நாஸ்திக வாதம் செய்வதில் தேர்ந்தவராக இருக்கிறாரே" என்றான் பிரதிவீபதி.

"ஆம்; அதுதான் அவனிடம் உள்ள பெரியகுறை. அதிலும் அவனிடம் உள்ள சில நற்குணங்கள் தான் நாம் போற்றக் கூடியவை. தெய்வம் இல்லையென்று அவன் சொன்னாலும் சத்தியத்தையும் உண்மையையும் தெய்வமாகவே போற்றிப் பாதுகாப்பான். நல்லதியாக புத்தியுடையவன். கெடுதல்களைக் கண்டால் மனம் வெறுப்பவன். இத்தகைய உத்தம குணமுள்ள அவன் பெரிய நாஸ்திக வாதியாயிருந்தாலும் நம்முடைய அன்புக்கும் மதிப்புக்கும் உரியவனாகிறான்" என்று கூறினார் சந்தகர்.

"ஆம்! நான் அவரோடு பழகியது குறைவாக இருந்தாலும் சத்தியசந்தர்

என்றும் நேர்மையான குணம் படைத்தவரென்றும் தீமையைக் கண்டு சகிக்காதவரென்றும் தெரிந்துகொண்டேன். அத்தகைய மனிதரின் நட்பு கிடைத்தது பெரும் பாக்கியம்தான் என்று நான் கருதுகிறேன். நான் மிகக் குழப்பமாக இருக்கும் தருணம் எனக்கொரு அரிய நண்பரின் உதவி இல்லாமல் போய் விட்டதே என்றுதான் வருந்துகிறேன். விதிதான் சரியான சந்தர்ப்பத்தில் என்னையும் அவரையும் பிரித்திருக்க வேண்டும்'' என்ருன் பிரதிவிபதி.



''நீங்கள் சொல்வதிலிருந்து உங்களுடைய நிலையில் குழப்பம் ஏற்பட்டிருக்கிறதாக எனக்குத் தெரிகிறது. ஏதோ உங்கள் மனத்தை வருத்துகிறது. உங்களைப் போன்ற அரசகுமாரர்களுக்கு என்ன மனவிசாரம் இருக்குமென்று தான் எனக்குத் தெரியவில்லை. ஏதோ விதி வந்துதான் உங்களையும் பூதுகனையும் நல்ல சமயத்தில் பிரித்ததாக வருத்தப்படுகிறீர்கள். அப்படி என்ன நடந்தது என்று நான் தெரிந்து கொள்ளலாமா?'' என்று கேட்டார் சந்தகர்.

''சில நாட்களுக்கு முன் சம்பாதி வன புத்த சேதியத்தில் ஒரு புத்தபிக்ஷு கத்தியால் குத்திக் கொல்லப்பட்டார் என்ற விஷயம் உங்களுக்குத் தெரிந்திருக்கலாமென்று நினைக்கிறேன்.''

''தெரியும், அந்தக் கொலைக்கும் உங்களுக்கும் ஏதேனும் சம்பந்தமுண்டா?''

''எனக்கும் அந்தக் கொலைக்கும் சம்பந்தமில்லை. ஆனல் வேருெருவருக்கும் இந்தக் கொலைக்கும் சம்பந்தம் உண்டென்று பேசிக் கொள்கிருர்கள். அவர்கள் சந்தேகப்படும் பேர்வழியும் தலை மறைவாக இருக்கிருர். அதைப் பற்றி உங்களிடம் தெரிந்து கொள்ளலாம் என்றுதான் ஆவல்'' என்ருன்.

சந்தகர் சிரித்துக் கொண்டே, ''அந்தக் கொலைக்குக் காரணம் ஒரு பெண்ணுக இருக்கும் என்று சந்தேகிக்கிருர்களா?'' என்று கேட்டார்.

''ஆமாம். ஆனல் அந்தப் பெண் செய்திருப்பாள் என்று நான் நம்பவில்லை. பூதுகரும் நம்பவில்லை.''

''ஓகோ! பூதுகனுக்கும் அந்தப் பெண்ணைப் பற்றித் தெரியுமா?'' என்று கேட்டார் சந்தகர்.

''தெரியும், அந்தப் பெண் பூதுகனின் காதலியாகிய வைகைமாலைக்கு அந்தரங்கமான தோழி. அந்தப் பெண்ணின் நல்ல குணங்கள் அவருக்கு நன்ருகத் தெரியும். அதோடு, அவர் புத்த பிக்ஷுவோடு சண்டை செய்யும்போது நான் அந்தப் பெண்ணேடு தனிமையில் அந்தக் கடற்கரையில் இருந்தேன்..'' என்ருன்.

''சரிதான்—நீங்கள் அந்தப் பெண்ணேடு தனிமையில் கடற்கரையில் இருந்தீர்களா? ஒரு புத்த பிக்ஷுணி என்று சொல்லிக் கொள்ளும் ஒரு பெண்—அழகு—ஹூம்—அப்படியென்ருல், அந்தப் பெண்ணுக்கும் உங்களுக்கும் ஏதோ தொடர்பு இருக்க வேண்டுமென்று நினைக்கிறேன்.''

''ஆமாம்! அந்தப் பெண்ணைநான் காதலிக்கிறேன்! அவளும் என்னிடம் அன்பு வைத்துள்ளாள். ஆனல்....'' என்று தயங்கினுன்.

''ஆனல் அவள் இருந்த நிலையும் அவளுக்குள்ள கட்டுப்பாடுகளும் அதற்கு இடந்தரவில்லை போலிருக்கிறது. பாவம்! ஒரு துறவு நிலையிலுள்ள ஒரு பெண்ணைக் காதலிப்பதென்ருல் சிறிது சங்கடம் தான்'' என்ருர் சந்தகர்.

''தாங்கள் மிகவும் சாமர்த்தியசாலி. தாங்கள் இவ்வளவு தூரம் தெரிந்து கொண்டிருப்பீர்களென்று நான் நினைக்கவில்லை'' என்ருன் பிரதிவிபதி.

''இவ்வளவு தூரம் தெரிந்து கொண்டிருக்கிறேன் என்று தாங்கள் மெச்சிக் கொள்ளலாம். ஆனல் அதற்குமேல் எனக்குத் தெரியாது. நீங்கள் சொல்லித்தான் இனிமேல் தெரிய வேண்டும்'' என்ருர் சந்தகர்.

''தாங்கள்தான் பெரிய சோதிடராயிற்றே?'' என்று சொல்லி அவர் முகத்தைப் பார்த்தான்.

''பெரிய சோதிடன்தான். ஆனல் பெரிய சோதிடர்கள் கூட இந்தக் கலியுகத்தில் கிரகங்கள் தங்கள் கணக்கை ஏமாற்றி விடும் என்பதையறிந்து தொழிலை விட்டு விட்டார்கள். திரேதா, துவாபர யுகங்களில்தான் கிரகங்கள் மனிதனின் கணக்குக்குக் கட்டுப்பட்டவைகளாயிருந்தன. சத்தியமும், தருமமும் அழிந்த இந்தக் கலியுகத்தில் அவைகள் மனிதருக்குக் கட்டுப் பட்டவையல்ல. அதற்கொரு கதை உண்டு!'' என்ருர் சந்தகர். **(தொடரும்)**



## ஏ.வி.எம். திருமணம்

ஏ. வி. எம். ஸ்டுடியோ அதிபர் திரு ஏ. வி. மெய்யப்பன் அவர்கள் புதல்வர் செல்வன் முருகன், புதல்வி செல்வி மீனு, திருச்சி திரு எம். ஏ. அருணாசலத்தின் புதல்வி செல்வி ரஞ்சனி, புதல்வர் செல்வன் வீரப்பன் இவர்களது திருமணங்கள் சென்னை பாலாஜி நகரில் சென்ற மாதம் 10ஆ சிறப்பாக நடைபெற்றன. திருமணத்துக்கு எல்லா சினிமா நட்சத்திரங்களும் விஜயம் செய்து தங்கள் தங்கள் வீட்டுத் திருமணங்கள் போலவே எல்லாக் காரியங்களிலும் பங்கெடுத்துக் கொண்டு சிறப்பித்தனர். சென்னை நகரப் பிரமுகர்கள், உறவினர்கள், நண்பர்கள், தலைவர்கள் எல்லாரும் திரளாக விஜயம் செய்து மணமக்களுக்கு ஆசிகூறி வாழ்த்தினார்கள். வாழ்க மணமக்கள்! வாழ்க பல்லாண்டு!

# சிறந்த

## போட்டோ எடுப்பதற்கு உறுதிமொழி கூறுவது

ஒவ்வொரு போட்டோகிராப்பருக்கும் எல்லா வித பிலிம்களையும் உபயோகித்து ஆராய்ந்த பிறகு, எப்பொழுதுமே சிறந்த தரமுள்ள ஆக்பா பிலிம் மீது அசைக்க முடியாத உறுதி ஏற்படுகிறது. உலகம் முழுதும் பிரசித்தி பெற்ற இந்த ஆக்பா ஐஸோபான் ஐஎஸ்எஸ் பிலிம், வெளிச்சக் குறைவாக இருந்த போதிலும் கூட, படம் நன்றாக விழ, உறுதி மொழி அளிக்கிறது. அதன் வேகம் அதிகமாயிருப்பினும், எக்ஸ்போஷர் குறைவாகவோ அல்லது அதிகமாகவோ இருந்தாலும் கூட படம் நன்றாக விழ உதவுகின்றது. வயல் வெளிக் காட்சிகள், விளையாட்டு பந்தய காட்சிகள், போர்ட்ரெயிட்டுகள், இரவு காட்சிகள் முதலியன நன்றாக எடுக்க இதுவே உகந்த பிலிம்.




## ஐஸோபான் ஐஎஸ்எஸ் பிலிம்

இந்தியாவிற்கு ஸோல் டிஸ்ட்ரிபியூட்டர்கள் :

**ஆக்பா இந்தியா பிரைவேட் லிமிடெட்**

பம்பாய் • புது டில்லி • கல்கத்தா • மதராஸ்



# பாலைவனத்திடையே....

ராஜஸ்தான் பாலைவனத்தின் சிறுக்கோடியை அறுத்துக் கொண்டு ஓடியது நாங்கள் ஏறியிருந்த ரயில். நண்பன் பலராமனும் நானும்தான் அந்தப் பெட்டியில் இருந்தோம். பலராமன் என்னுடைய பள்ளி நண்பன்; பட்டாளத்தில் சேர்ந்து இப்போது பெரிய பதவிக்கு வந்து விட்டான். காஷ்மீரத்தில் இப்போது அவனுக்குப் பாதுகாப்பு வேலையாம். மூன்று மாத விடுமுறையில் தெற்கே புறப்பட்ட அவனை, டில்லியில் நான் தங்கியிருந்த ஓட்டலில் சந்தித்தேன். இரண்டு பேருக்கும் ஒரு வாரப் பொழுது டில்லியிலும் ஆக்ராவிலுமாகச் சுறுசுறுப்பாய்க் கழிந்தது. எனக்காக அவன் இரண்டு நாட்கள் அதிகமாக டில்லியில் தங்கிப் பிறகு சென்னைக்குக் கிளம்பினான். பலராமனுக்கு இன்னும் கல்யாணமாகவில்லை. ஒற்றைக் கட்டை. பள்ளிக்கூடத்தில் நோஞ்சலும் நெட்டையுமாக இருந்த அந்தப் புல் தடுக்கி வஸ்தாது எப்படித்தான் இப்போது இரும்பு மனிதனாக மாறினானே! பட்டாளத்து உடற் பயிற்சியும், சப்பாத்தியும், பருப்புக் கூட்டும் சேர்ந்து அவனை இப்படிச் செய்திருக்கின்றன.

ஆக்ராவைத் தாண்டி டோல்பூருக்கு முன்னும் பின்னும் பரந்து கிடந்த பாலைவனத்தைப் பார்த்துக் கொண்டு வந்தேன். பாலைவனத்தை நேரில் பார்க்காமலே இதற்கு முன்பு நான் செய்து வைத்திருந்த கற்பனைக்கும் இதற்கும் எத்தனை வித்தியாசம்! ஒரே மணல் வெளியாக, கொள்ளிடக்கரை மணல் பரப்பைப் போல், மெரினா கடற்கரைப் பொட்டலைப்போல் கண்ணுக்கெட்டியவரை ஒரே மணல் கடலை நான் எதிர்



அகிலன்



பார்த்தேன். சமவெளிக்குப் பதிலாக அங்கே எத்தனை எத்தனை மலைகள், பள்ளத்தாக்குகள், குன்றுகள், கோபுரங்கள், குகைகள்-எல்லாம் மணலில்! தஞ்சாவூர்க் கோபுரத்தைப் போலவோ, மதுரைக் கோயிலைப் போலவோ வடக்கே ஒன்றைக்கூடப் பிரம்மாண்டமாகக் காண முடியா விட்டாலும், இயற்கைத் தேவி இத்தனை அற்புதங்களையும் அங்கு மணலில் செய்து வைத்திருக்கிறாள். மணல் வீடு கட்டி விளையாடும் சிறு குழந்தை போல் அவள் இந்தப் பாழ்வெளியில் தன் கைவண்ணத்தைக் காட்டியிருக்கிறாள்.

பாலைவனத்தைக் கண்டவுடன் எனக்குப் பாரதியின் பாட்டொன்று நினைவுக்கு வந்தது. என்னை மறந்து பாடத் தொடங்கினேன்.

"பாலைவனத்திடையே — தனைக்கைப்
பற்றி நடக்கையிலே — தன்கை
வேலின் மிசையாணை - வைத்துச்சொன்ன
விந்தை மொழிகளைச் சிந்தை
செய்வா யென்று
சொல்லவல்லாயோ? - கிளியே!"

திடீரென்று பலராமன் உள்ளே வந்து உட்கார்ந்து என்னை ஒரு விதமாக உற்றுப் பார்த்தான். பட்டென்று நான் பாட்டை நிறுத்தி விட்டேன்.

"இன்னொரு தரம் அதைப் பாடு!"

என்னுடைய குரல் 'இனிமையில்' எப்போதும் எனக்குப்பயம் உண்டு. இதற்காகவே ஒருவன்—அதிலும் நண்பன்—ஓடுகிற ரயிலிலிருந்து குதித்து விடவா போகிறான் என்ற தைரியத்தில் பாடினேன். ஆனால் அவன் போக்கு நேருக்கு மாறாக இருந்தது.

"என்னை என்ன கேலி செய்கிறாயா?" என்று கேட்டேன்.

"இல்லை, பாடு!"

நான் எவ்வளவு மறுத்தும் அவன் விடவில்லை. பாடினேன். மூன்றாவது முறையும் வற்புறுத்தினான். பாடித் தொலைத்தேன்.



"கிளியாகப் பிறந்திருந்தால் பறந்துபோய் இந்தப் பாலைவனத்தின் மேற்கு எல்லையைப் பார்க்கலாமல்லவா?" என்றான்.

"சோலையில் தான் கிளி பறக்கும்; பாலைவனத்தில் ஏது கிளி?"

"எனக்குப் பறந்து போக வேண்டும்போல் ஆசை இருக்கிறது."

"இன்னொரு நூறு ரூபாய் செலவு செய்தால் விமானத்தில் போயிருக்கலாமே?" என்றேன் அவனிடம்.

"அதை நான் சொல்லவில்லை. இந்தக் கையோடு, காலோடு, கிளி மாதிரி பறந்து செல்ல வேண்டும். மனிதர்களுக்கு இறக்கை முளைக்க வேண்டும்; தெரிந்ததா?"

அவனைப் பார்த்து நான் சிரித்தேன். பறந்து செல்ல வேண்டும் என்ற ஆசையை இப்போது மட்டும் அவன் வெளியிடவில்லை. இதற்கு முன்பே டில்லியில் காட்சிசாலை ஒன்றில், பறக்கும் கந்தர்வர்களின் சிற்பத்தைப் பார்த்தவுடன் அவர்களைப் போல் பறக்க வேண்டும் என்றான். அடுத்தாற்போல் நாங்கள் பூங்காவில் உலவிக் கொண்டிருக்கும் போதும் இப்படித்தான் இரண்டு தும்பிகள் ஒன்றாய்ச் சிறகடித்துச் செல்வதைக் கண்டு விட்டுப் பெருமூச்சு விட்டான். இந்த விசித்திரமான ஆசை இவனுக்கு எங்கிருந்து முளைத்தது?

"பறக்கும் கந்தர்வர்களின் சிற்பம் உன் நினைவுக்கு வருகிறதா?" என்றான்.

நான் தலையசைத்தேன்.

"எவனோ ஒரு சிற்பி அழகு உணர்ச்சியின் சிகரத்தில் இரண்டு காதலர்கள் ஒன்றிப் பறப்பதாகக் கற்பனை செய்திருக்கிறான். மேகங்களினூடே அவர்கள் மெய்ம் மறந்த நிலையில் மிதந்து செல்வதைப் பார்த்தாயா? அந்தக் கந்தர்வமங்கை தன்னுடைய நாயகன் மீது துவண்டு விழுந்து, கிறங்கும் விழிகளால் அவன் உயிரைக் குடிக்கும்போது, அவன் அவளைத் தூக்கிக் கொண்டு வானவெளியில் பறக்காமல் என்ன செய்வான்? அவர்கள் உயரே, உயரே பறந்து கொண்டிருக்கிறார்கள்."

நண்பன் கவிஞனாக மாறிக் கொண்டு வருவது போல் எனக்குத் தோன்றியது. "நீ ஒரு பைத்தியக்காரன். எவனோ ஒரு காதல் பைத்தியம் பிடித்த கலைஞனுக்குத் தான் முதன் முதலாக இந்தக் கற்பனை தோன்றியிருக்க வேண்டும். தன்னால் நிறைவேற்ற முடியாத ஆசையைத் தன் கலை மூலம் நிறைவேற்றியிருக்கிறான்" என்றேன்.

"நிறைவேறாத ஆசை!...." நண்பன் தடுமாறினான்.

"என்ன பலராமா! ஏன் ஒரு மாதிரிக் குழம்புகிறாய்?" என்று கேட்டேன்.

"என்னுடைய ஆசையும் ஒன்று இப்படித் தான் நிறைவேறாமல் போய் விட்டது. இனி என்றைக்குமே அது நிறைவேறப் போவதும் இல்லை. நான் கலைஞனாகவோ கவிஞனாகவோ இருந்திருந்தால் அதைப் படமாக எழுதியோ, பாட்டாகப் பாடியோ ஓரளவு மனம் தேறியிருப்பேன். எனக்காக நீ ஒரு கதை எழுதுகிறாயா?" என்றான் சோகக் குரலில்.

"என்ன கதை?"

"பாரதி பாடியிருக்கிறாரே, அதே போல் நான் ஒரு பாலைவனத்தில் மலர்ந்த பனிமலருக்குக் கையடித்துச் சத்தியம் செய்து கொடுத்தேன்.—அதோ பார், அந்த பேலை வானத்தின் கோடியில், பாலைவனத்தின் மறு எல்லையில் இருக்கிறது அவளுடைய கிராமம். அவளை நான் இப்போது பார்க்கத் துடிக்கிறேன். பார்க்க வேண்டுமென்றால் கிளியாக மாறிப் பறந்து போனால்தானே முடியும்?"

பலராமனின் குரல் தழுதழுத்தது. கண்களின் ஓரத்தில் தேங்கி நின்ற நீர்முத்துக்களைத் துடைத்துக் கொண்டு அவன் தன்னுடைய கதையைக் கூறினான்:

இந்திய பாகிஸ்தான் எல்லைக் கோட்டுக்குப் பக்கத்தில் பிகானீர் நகரத்தை அடுத்தாற் போல் பலராமனின் பட்டாளப் பகுதி முகாம் போட்டிருந்தது. காவல் வேலையைத் தவிர வேறொன்றும் முக்கியமான அலுவல்கள் அவர்களுக்குக் கிடையாது. வெறும் பொட்டல் வெளியில் மணற் காட்டில் அவர்கள் வாழ்க்கை நடத்தினார்கள். வேற்று மனிதர்களின் முகத்தைப் பார்க்க வேண்டுமானால் இரண்டு மைல் தூரத்திலுள்ள இக்கிராமத்துக்குச் செல்ல வேண்டும். அந்தக் கிராமத்திலும் ஐம்பது அறுபது வீடுகளுக்கு மேல் இல்லை. எல்லாம் கூரைக் குடிசைகள். ஒரே ஒரு முறை பலராமன் அங்கே போய்ச் சுற்றி விட்டுச் சலிப்புடன் திரும்பினான்.

காவேரிக்கரை மண்ணில் பிறந்த பலராமனுக்கு இந்தப் பாலைவன வாழ்வு பயங்கரமாகத் தோன்றியது. குடிப்பதற்கே தண்ணீருக்குப் பஞ்சம். குளிப்பதற்கு எங்கே போவது? வேர்வை தான் துடைக்கத் துடைக்க மழையாய்ப் பொழிந்ததே தவிர அதைக் கழுவிக் கொள்ள ஒரு செம்புத் தண்ணீர் கிடையாது. காலையிலும் மாலையிலும் ஈரத் துணியால் துவட்டிக் கொண்டு காலத்தை ஓட்டினான். எப்படியாவது மேலதிகாரியிடம் சொல்லி விரைவில் தன்னை வேற்றூருக்கு மாற்றிக் கொள்ள வேண்டுமென்று தோன்றியது.

கால் போன போக்கில் ஒரு நாள் மாலை தனிமையில் நடந்து கொண்டிருந்தான் பலராமன். தூரத்தில் இரண்டு மூன்று ஒட்டகங்கள் பிகானீரிலிருந்து திரும்பிக் கொண்டிருந்தன. கிராமத்து வியாபாரிகள் மாதா மாதம் நகரத்துக்குச் சென்று சாமான் ஏற்றி வருவார்களாம். அவர்களுடைய உடை அலங்காரம் பலராமனுக்குப் பிடித்திருந்தது. தலையில் நீண்ட சிவப்புத் துணியைச் சுற்றி முண்டாசு கட்டிக் குஞ்சம்போல் முன்புறம் தொங்க விட்டிருந்தார்கள். தொளதொளவென்று தொங்கும் முழுக்கைச் சட்டையும், பஞ்சகச்சம் வைத்துக் கட்டிய எட்டு முழ வேஷ்டியும், கழுத்தில் கறுப்புக் கயிற்றில் தாயத்தும், காலில் பூட்ஸுகளுமாக அவர்கள் காட்சியளித்தார்கள்.

ஒட்டகங்கள் பத்தடி தூரத்தில் நெருங்கின. கிழவர்களைப் போல் கூனிக் குறுகி அவை அரைத் தூக்கத்தில் நடப்பவை போல மெதுவாக நடந்து வந்தன.

"நமஸ்தே, பாபுஜி!"

முதலில் வந்த ஒட்டகத்திலிருந்து ஒரு கிழவர் உரக்கக் கூவினார். உடனே அதை நிறுத்திக் கீழே மண்டியிட வைத்துத் தொப்பென்று குதித்து இறங்கி வந்தார். பலராமனிடம் நெருங்கி வந்து மரியாதையுடன் பேச முற்பட்டார். "நீங்கள் இங்கே முகாம் போட்டிருப்பதில் எங்களுக்கு மிகவும் சந்தோஷம். உங்களால் எங்களுக்கு எத்தனையோ நன்மைகளுண்டு. கடைசி வரையில் கடவுள் உங்களை எங்களுக்குப் பக்கத்திலேயே தங்க வைத்துக் காப்பாற்ற வேண்டும்!"

பலராமனுக்குச் சிந்தி மொழி நன்றாகத் தெரியும். தன்னைச் சீக்கிரம் அந்த இடத்தை விட்டு மாற்றும்படி கடவுளை வேண்டிக் கொண்டிருப்பவன் அவன். கிழவரின் பேச்சு அவனுக்கு விந்தையாக இருந்தது. "பட்டாளத்துக்காரர்கள் பக்கத்தில் இருக்கும் போது எங்களுக்கென்ன பயம்? இந்தப் பகுதியில் அடிக்கடி நடக்கும் கொலை, கொள்ளைகளைப் பற்றி நீங்கள் கேள்விப் பட்டிருப்பீர்களே? பஞ்சம் ஒரு பக்கம், பகற் கொள்ளை மறு பக்கம் என்று நாங்கள் பயந்து பயந்து சாகிறோம். இந்த தேவ்சிங் கோஷ்டியாரின் கொட்டம் நீங்கள் இருந்தால் கட்டாயம் அடங்கி விடும்."

"முடிந்தவரை பார்க்கிறோம்" என்று கூறினான் பலராமன்.

கிழவர் அத்துடன் விடுவதாக இல்லை.

"நான் வாழ்க்கையில் நாலைந்து தடவை என் செல்வங்களைக் கொள்ளை கொடுத்தவன். அந்தப் பாதகர்கள் பணத்தோடு போனால் தேவலாமே! என்னுடைய பெரிய பையனையே கூட்டிக் கொண்டு போய்விட்டார்கள். அவன் ஓடிப்போய்ப் பத்து வருஷமாகிறது; இப்போது அவன் இருந்தால் இருபத்தைந்து வயது; கல்யாணம் செய்து வைத்திருப்பேன்."

பலராமனுக்கு அவரிடம் இரக்கம் பிறந்தது. "பயப்பட வேண்டாம்; கவனித்துக் கொள்கிறோம்" என்று அவர் முதுகைத் தட்டிக் கொடுத்தான்.

"என் பெயர் ராம்நாராயண்: கிராமத்தில் குழந்தைக்குக்கூட என் பெயர் தெரியும்; என் கடையில் கிடைக்காத சாமான் பிகானீரிலேயே கிடைக்காது. நானாக உங்களிடம் வரவேண்டுமென்று நினைத்தேன். எப்போதாவது கிராமத்துக்கு வந்தால் என் வீட்டுக்கு வரத் தவறாதீர்கள். ஒருவேளை நீங்கள் வந்து என்னோடு தேநீர் சாப்பிட்டால் அதைப் பெரிய பாக்கியம் என்று நினைப்பேன். வருகிறீர்களா?"

மூன்று முறை குனிந்து பலராமனுக்கு வணக்கம் செலுத்திவிட்டு ஒட்டகத்தில் ஏறிக் கொண்டார் கிழவர். மற்ற இரண்டு ஒட்டகங்களும் பின் தொடர்ந்தன; அவற்றை ஓட்டிச் சென்றவர்கள் கிழவருடைய வேலையாட்களாகவும் இருக்கலாம். அல்லது அவரைப்போல் வேறு வியாபாரிகளாகவும் இருக்கலாம். வயதில் சிறியவர்கள்.

பலராமனுக்கு இந்த எதிர்பாராத சந்திப்பு சற்று மகிழ்ச்சியைக் கொடுத்தது. பொது மக்களுடன் பட்டாளத்தார் பழகக் கூடாது என்ற விதி இருந்தாலும், எப்போதாவது நேரம்

புது டெல்லி, இந்திய சர்க்கார் விளம்பர இலாகா காரியாலயத்தைச் சேர்ந்த திரு எம். ராமசுப்ரமணியன் அவர்களுக்கும் குமாரி சேதுவுக்கும் சமீபத்தில் திருநெல்வேலியில் வெகு சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. வாழ்க மணமக்கள் !

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

கிடைத்தபோது கிராமத்துக்குப் போய்த் தேநீர் குடிக்க விரும்பினான். மேலும் அந்தப் பக்கத்து வாழ்க்கையைப் பற்றி அவனுக்குக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவல். பலராமன் அங்கு உதவித் தலைவனாக இருந்ததால் அவனுக்கு இயல்பாகவே சில சலுகைகளும் கிடைத்தன.

இன்னும் இரண்டு மணிநேரம் ஓய்விருந்தது: அவன் மேலே தொடர்ந்து நடந்தான். தண்ணீர்த்தாகம் நாக்கைச் சுழற்றியது. அரை மைல் தூரத்தில் ஊற்றுக் கிணறு ஒன்றிருந்ததால் நடையை அந்தப் பக்கம் திருப்பினான். கிணற்றிலிருந்து தலையிலும், இடுப்பிலுமாக மண் குடங்களில் நீர் சுமந்து கொண்டு சில பெண்கள் எதிரில் வந்தார்கள்.

நாலடி ஆழமுள்ள சின்னஞ்சிறு கிணறு அது ; ஊற்றென்றும் சொல்லலாம் ; 'தல்லா' என்று அதை அவர்கள் அழைத்தார்கள். மழைத் தண்ணீரைப் புதையல் போலக் காப்பாற்றிச் சுரக்க வைக்கும் அந்தத் தல்லாக்கள் தான் பாலைவன மக்களுக்கு உயிர் நாடி. பத்து மைல் தொலைவிலிருந்துகூட இந்தக் குடி தண்ணீர் கொண்டுபோக வருவார்களாம். இப்போது அந்தக் கிணற்றைச் சுற்றி நாலைந்து பெண்களும் இரண்டு சிறுவர்களுமே நின்றார்கள். கோவேறுக் கழுதை ஒன்று சற்றுத் தள்ளி நின்றது.

**ப**ட்டாளத்துப் போர்வழியான பலராமனைக் கண்டவுடன் பதறிப் போய் அங்கு கூடியிருந்த பெண்கள் விலகி ஓடினார்கள். ஒரே ஒருத்தி மட்டிலும் நின்ற இடத்தை விட்டு நகராமல் வேடிக்கை பார்த்தாள். அவள் வேடிக்கை பார்த்தாள் என்பது அவளுடைய மெல்லிய மஞ்சள் முகத்திரைக்குப் பின்னால் சுடர்விட்ட கண்களின் மூலம் தெரிந்தது. எல்லாப் பெண்களுமே முக்காடிட்டு முகத்தை மறைத்துக் கொண்டிருந்தார்கள். ஆண்கள் போட்டுக் கொள்வதைப் போன்ற முழுக்கைச் சட்டைகள், பல நிறத் துணியால் தைத்த பாவாடைகள்; தந்தநிறக் கால்களைப் பலவித வண்ணச் செருப்புகள் மறைத்திருந்தன.

''தண்ணீர் குடிக்க வந்தேன்; நீங்கள் பயப்பட வேண்டாம்'' என்றான் பலராமன்.

''நாங்கள் ஒன்றும் பயப்படவில்லை'' என்றாள் அந்தப் பெண். பலராமனுக்கு அவளுடைய துணிவு சிரிப்பு மூட்டியது.

''உன்னைச் சொல்லவில்லை; அவர்கள் ஏன் இப்படி ஓடுகிறார்கள்?''

அந்தப் பெண் பின்னை அவர்கள் பக்கம் திரும்பிக் கலீரென்று சிரித்தாள். ''நாம் ஐந்தாறு பேர்கள் இருக்கிறோம். இந்த ஒற்றை மனிதரைக் கண்டு ஏன் இப்படி நடுங்குகிறீர்கள்? அவர் காக்கிச் சட்டை போட்டுக் கொண்டதால் என்ன; கையில் துப்பாக்கி கொண்டு வரவில்லையே!''

**ப**லராமன் மீண்டும் அவள் கண்களைச் சந்தித்தான். அவை முகத்திரைக்குப் பின்னிருந்து கேலியாக நகைத்தன.

''அடி, கங்கா! துடுக்குக்காரி! வாயை மூடமாட்டாயா?'' என்று கத்தினாள் ஒரு வயதான கிழவி.

பிறகு பயம் நீங்கி அனைவரும் கிணற்றருகில் வந்தார்கள்; கங்கா தன் கையில் வைத்திருந்த பித்தளைப் பாத்திரத்தில் நீர்மொண்டு அவனிடம் நீட்டினாள். அதை வாங்கிக் குடித்துக் கொண்டே, 'ஒரு சொட்டுத் தண்ணீர் கிடைக்காத இடத்தில் பிறநத பெண்ணுக்குக் கங்கா என்று பெயர் வைத்திருப்பது ஆச்சரியந்தான்' என்று நினைத்துக் கொண்டான்.

மற்றப் பெண்களைவிடக் கங்காவிடம் அதிகமாக இளமைத் துடுக்கும், மிடுக்கும், அலட்சியமும் காணப்பட்டன. மற்றவர்களைவிட அவள் உயர்ந்த ரகப் பட்டுத் துணி உடுத்துக் கொண்டிருந்தாள். கைவளைகள் குலுங்கக் குலுங்க அவள் நீர் மொண்டு மண் பாத்திரத்தை நிரப்பத் தொடங்கினாள். சிறுவர்கள் இருவரும் அவளுடைய குடங்களைத் தூக்கிக் கோவேறுக் கழுதையின் மேல் வைத்தார்கள். கழுதையின் முதுகில் மூங்கில்களை வைத்துக் கட்டி இரண்டு பக்கமும் குடங்களைச் சுமப்பதற்காக வசதி செய்யப்பட்டிருந்தது.

கங்காவுக்கு நன்றி சொல்லிவிட்டுத் திரும்பி நடந்தான் பலராமன். நாலடிதூரம் நடந்தவுடன் ஏனோ அவனுக்கு மீண்டும் அவளைத் திரும்பிப் பார்க்க வேண்டும் போல் தோன்றியது. திரும்பினான். அங்கே, முகத்திரையை ஒரு கையால் ஒதுக்கிய வண்ணம் அவனைக் கூர்ந்து நோக்கிக் கொண்டிருந்தாள் அவள். முதலில் அந்த முகம் அவனைப் பிரமிக்கவைத்தது ; அடுத்தாற்போல் அந்த விழிகள் அவனைத் திணற அடித்தன ; பிறகு மயங்கச் செய்தன.—அவனைக் கண்டவுடன் ஏன் அந்த விழிகள் அப்படி மருண்டு விழிக்கின்றன? ஏன் அந்தக் கண் இமைகள் அப்படி அடித்துக் கொள்ளுகின்றன? மான் விழி என்று சொல்லுகிறார்களே, அது முற்றிலும் உண்மைதான் ; அந்த விழிகள் கங்காவிடம்தான் இருக்கின்றன என்று அவன் முடிவுக்கு வந்தான்.

இதுபோல் தினம் ஒரு கணம் அமுது பொங்கும் அந்த விழிகளைச் சந்திக்க முடியுமானால் இந்தப் பாலைவனமே திடீரென்று சோலைவனமாகி விடும்போல் அவனுக்குத் தோன்றியது. (அடுத்த இதழில் முடியும்)



# பை-கோலேட்ஸ்

# நரஸூ காபி

அருந்தி அதன் பிரத்யேகமான ருசியை அனுபவியுங்கள்



**நரஸூஸ்
மான்யுபாக்சரிங்
கோ. பிரைவேட் லிட்.
சேலம் & சென்னை**

NCZ-21 AFM



# த்வார்க்கின்ஸ்

கை ஆர்மோனியப் பெட்டிகள் செய்வதில் கைதேர்ந்தவர்கள். மேற்படி ஆர்மோனியப் பெட்டிகள் தயாரிப்பதில் புதுமையைப் புகுத்தியவர்களில் 'த்வார்க்கின்ஸ்' முன்னணியில் நிற்கிறார்கள்.

விலை : ரூ. 40/–லிருந்து ரூ. 550/–வரையில்

விலை விவர ஜாபிதாவுக்கு ஆங்கிலத்தில் எழுதுங்கள்

**த்வார்க்கின் & சன் பிரைவேட் லிட்.**

8/2, எஸ்பிளனேடு ஈஸ்ட், கல்கத்தா - 1

# நேரு புகழும் நெய்வேலி



**வேலன்**

தமிழ் நாட்டின் பொருளாதார சரித்திரத்தில் சென்ற திங்கட்கிழமை தினத்தைப் பொன்னாளெனப் போற்ற வேண்டும். தமிழ் நாட்டுக்குப் புது வாழ்வளிக்கப் போகும், நெய்வேலி பழுப்பு நிலக்கரி வெட்டு வேலையைப் பாரதப் பிரதமர் நேருஜி அன்றுதான் இயக்கி வைத்தார். இலங்கை சென்ற பிரதமர் நேரு தில்லி திரும்பும் வழியில், இந்த மகத்தான பணியை ஆரம்பித்து வைப்பதற்காக, அன்றைய தினம், சுமார் 11-மணி அளவில், உளுந்தூர்ப் பேட்டை விமானத் திடலில், சிறிய ரக ராணுவ விமானத்தில் வந்து இறங்கினார். நேருஜியுடன் இந்திய மாதர் குல திலகம் இந்திரா காந்தி அவர்களும், மத்திய சர்க்கார் எரி பொருள் மந்திரி சர்தார் சுவரன் சிங் அவர்களும், சென்னை கவர்னர் ஸ்ரீ ஜான், ராஜ்ய முதலமைச்சர் ஸ்ரீ காமராஜ் ஆகியோரும் திருச்சியிலிருந்து மேற்படி விமானத்தில் வந்து சேர்ந்தனர்.

உளுந்தூர்ப் பேட்டையிலிருந்து நெய்வேலி வரையில் சுமார் ஆறு மைல் நீளத்துக்கும் சாலையின் இரு புறங்களிலும், பல்லாயிரக் கணக்கான கிராமவாசிகள் அனல் வீசும் அதி வெய்யிலையும் பொருட்படுத்தாது அணி வகுத்து நின்று, பாரதப் பிரதமரைக் கண்டதும், "பண்டிட் நேருவுக்கு ஜே! நெய்வேலி நிலக்கரிக்கு ஜே!" என்று வாழ்த்தொலி எழுப்பி வணங்குதல் செய்தார்கள்.

நெய்வேலிப் பழுப்பு நிலக்கரி வெட்டும் பணி இது வரையில் பரீட்சார்த்தமாகவே நடந்தேறி வந்தது. இந்தப் பரீட்சார்த்த வேலை ஏறக்குறைய ஐந்து ஆண்டுகளாக நடந்து கொண்டிருந்தது. ஏராளமாகநிலக்கரி நிபுணர்கள் வந்து வந்து சோதனைகள் நடத்தினார்கள். நூறு கோடி ரூபாய் வரை செலவு செய்யப் போகும் இவ்வளவு பெரிய ஓர் திட்டத்தை, "எண்ணித் துணிக கருமம்" என்றபடி முன் யோசனை, முன் ஆராய்வு இன்றி ஆரம்பித்துவிடக் கூடாது அல்லவா? ஆகையால், பழுப்பு நிலக்கரிப்படலம், பூமியில் எந்தெந்த இடத்தில் எந்தெந்த நிலையிலிருக்கிறது? எந்தெந்த இடத்தில் என்னென்ன இடையூறுகள் குறுக்கிடக்கூடும் என்பதையெல்லாம் சோதனைகள் செய்து அறிந்தார்கள். இடையூறுகளிலெல்லாம் பெரிய இடையூறு, பூமியை வெட்டிக் கொண்டே போகும் போது மேல் நோக்கிச் சீறிப்பாயும் தண்ணீரை எப்படிக் கட்டுப்படுத்துவது என்பதாகும். இதற்கும் வழி கண்டுபிடித்து விட்டார்கள் நம் அதிசய பூதத்துவ நிபுணர்கள். நெய்வேலியை நடு மையமாகக் கொண்டு சுமார் 100 சதுர மைல் விஸ்தீரணத்துக்கு இந்த நிலக்கரிப் படலம் வியாபித்திருப்பதைப் பற்றிப் பலரும் கேள்விப்பட்டிருக்கலாம். இந்த நிலக்கரிப் படலம் நூறு சதுர மைல் விஸ்தீரணமுள்ளதும் பல மைல் உயரம் கனமுள்ளதுமான ஒரு பெரிய பழுப்பு நிறத் தோசை அல்லது அடையைப் போன்றதாக இருக்கிறது. அடையின் விளிம்பு மெல்லியதாகவும், நடு பாகம் கனமுள்ளதாகவும் இருப்பதே போல், இந்த நிலக்கரித் தோசையின் மையமும் கனமாக அமைந்திருக்கிறது. இந்தக் கனமான பாகத்தில் சுமார் 5½ சதுர மைல் விஸ்தீரணத்தில் தண்ணீரின் சீற்றம் குறைவாயிருப்பதால், சுரங்கம் வெட்டும் பணிக்கு இந்த இடத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள்.

இந்த மத்திய இடத்தில்தான மண் வெட்டும் பணியைப் பாரதப் பிரதமர் அமோகமாக ஆரம்பித்து வைத்தார். அந்தத் திறந்த வெளியில் அலங்காரப் பந்தலுக்குள், பிரதமர் நேருஜியை, நெய்வேலி திட்டப் பிரதம நிர்வாக அதிகாரி ஸ்ரீ டி. எம். எஸ். மணி அவர்களும், முதல் அமைச்சர் காமராஜ் அவர்களும், வரவேற்று மேடைக்கு அழைத்துச் சென்றார்கள். பந்தலுக்கு உள்ளும் புறமும் பதினாயிரக் கணக்கில் மக்கள் நிரம்பியிருந்தனர். வெய்யில் தாளாமல் மயக்கமுற்ற கிராமவாசிகள் சிலரைத் தொண்டர்களும் போலீஸ் சேவகர்களும் தூக்கிச் சென்று ஆசுவாசப் படுத்திக் கொண்டிருந்தார்கள். திரு டி. எம். எஸ். மணி அவர்கள் திட்டங்களின் விவரங்களை எடுத்துரைத்து, பிரதமர் நேருவை நோக்கித் தமது திருக்கரத்தால் இந்தப் பணியைத் துவக்கி வைக்கும்படி கேட்டுக் கொண்டார். நேருஜி இந்தத் திட்டத்தை ஆரம்பித்து வைத்துப் பேசுகையில், "நெய்வேலித் திட்டம், தென்னகத்தின் பொருளாதாரத் தலைகுனிவைப் போக்கும் திட்டம். அதை உறுதியுடன் நிறைவேற்றி வைப்பதில் அனைவரும் ஒத்துழைப்போம் வாரீர்!" என்று அழைத்து, "திறப்பு விழா ஸ்தூபி"யைத் திறந்து வைத்தார். பாண்டு வாத்தியங்கள் இசைக்க, அதிர்வெடிகள் முழங்க, மண்வெட்டும் யந்திரங்கள், அப்போது தங்களுடைய நீண்ட இரும்புக் கைகளை உயர்த்தி நேருஜிக்கு வந்தனம் செலுத்திவிட்டுப் பூமியிலுள்ள மண்ணைப் பிறாண்டத் தொடங்கின. இரும்புப் பற்சக்கரங்கள் தாங்கிய டிராக்டர்கள், தங்களுடைய கூரிய பற்களைக் காட்டிக் கொண்டே புழுதிப் புயலை எழுப்பி, மண் வெட்டும் பணியில் ஈடுபட்டன. இந்தக் காட்சியை நேருஜி கண்டு களித்தபின், தேசிய கீதத்துடன் விழா இனிது முடிவுற்றது.





1. நேருஜி பொத்தானை அமிழ்த்தி நிலக்கரி வெட்டும் விழா ஸ்தூபியைத் திறக்கிறார். 2. சுரங்கத்திலிருந்து வெட்டி எடுத்த நிலக்கரி. 3. பூமியைப் பெயர்த்தெடுக்கும் பிரும்மாண்டமான இயந்திரம். 4. திரு டி. எம். எஸ். மணி பூமியைப் பெயர்த்தெடுக்கும் பிரும்மாண்டமான இயந்திரங்கள் வேலை செய்வதை நேருஜிக்குக் காண்பிக்கிறார் 5. நெய்வேலி நிலக்கரித் திட்டத்தின் 'மாடல்' ஒன்றை நேருஜி பார்வையிடுகிறார். 6. நெய்வேலியிலிருந்து திரும்பிய ஜவாஹர்லால் நேரு அவர்களைச் சென்னை மீனம்பாக்கம் விமான நிலையத்தில் மந்திரிகள், பிரமுகர்கள் முதலியோர் வழி அனுப்புகின்றனர். ★






(சென்ற வாரத் தொடர்ச்சி)

என் நண்பர் ஒருவர் என்னிடம் ஓடோடி வந்தார். "என்ன சமாசாரம்?" என்று அவரைக் கேட்டேன்.

"சென்ற வாரத்தில் உங்கள் கட்டுரையைப் படித்தேன்!" என்றார்.

"ரொம்ப சந்தோஷம்!" என்றேன்.

"ஒரு சந்தேகம்!" என்றார்.

'என்ன கேட்கப் போகிறாரோ' என்று நினைத்தேன். இருந்தாலும், "என்ன சந்தேகம், சொல்லுங்களேன்!" என்றேன்.

"சர்வோதய மகாநாடு ஏன் கூடவேண்டும்? ஏன் சர்வோதய மகாநாடு நடக்க வேண்டும்? அதற்குப் போதிய காரணம் நீங்கள் சொல்லவில்லையே?" என்றார்.

"நான் எதற்காகச் சொல்வது? வினோபாஜியே சொல்லி விருக்கிறாரே" என்றேன்.

"என்ன சொன்னார்?" என்று கேட்டார்.

"இதோ கேளுங்கள்" என்றேன்.

மகாநாட்டின் வரவேற்புரை, வாழ்த்துரைகள் எல்லாம் ஆனவுடன் அந்த மாபெரும் பந்தலில் அமைதி நிலவியது. ஆம், வினோபா அடிகள் பேசப் போகிறார் என்று யாவரும் காதைத் தீட்டி வைத்துக் கொண்டார்கள். நிதானமாக மிகத் தாழ்ந்த குரலில் வினோபாஜி அவர்கள் பேசினார்.

"ராமனுக்கு ஒரு நாளாவது லட்சுமணனைப் பார்க்கவில்லை என்றால் தூக்கம் வருவது கிடையாதாம்! எப்படியும் ஒரு நாளைக்கு ஒரு தடவையாவது லக்ஷ்மணனைப் பார்த்து விட வேண்டுமாம் ராமனுக்கு! அதேபோல் பாரதநாட்டில் பல பகுதிகளிலுள்ள பூதானத் தொண்டர்களாகிய உங்களை வருஷத்துக்கு ஒரு முறையாகிலும் காண்பதில் உள்ளத்துக்கு ஒரு திருப்தியுண்டாகிறது. நமது லட்சியத்தில் ஈடுபட்டப் பரஸ்பரம் உற்சாகமும் ஊக்கமும் பெறுகிறோம். காந்தி மகான் இருந்த போது பலன் எதிர்பாராது சேவை செய்யும் நிஷ்காம்ய சேவகர்களின் தரிசனம் கிடைத்தது. இப்பொழுது சுதந்திரம் கிடைத்த பின், நாட்டில் தொண்டு நடைபெறுகிறது. வாஸ்தவம்தான். ஆனால் நிஷ்காம்ய சேவை கிடைப்பது துர்லபமாக இருக்கிறது. ஒரு சிறு தொண்டு புரிந்து விட்டு மந்திரியாக விரும்புகிறார்; சட்டசபை அங்கத்தினராக விரும்புகிறார்!" என்றார் அடிகள்.

அதைத் தொடர்ந்து "இத்தகைய நிலையில் நாட்டில் உள்ள நல்ல மக்கள் பலன் கருதாத நல்ல தொண்டு செய்ய முடியாதோ, அதற்கு வாய்ப்பே கிடையாதோ என்று எண்ணி வந்தனர். அப்போது "பூமிதானம்" என்ற கருத்து உதயமாயிற்று. பயன் எதிர்பார்க்காத தொண்டு செய்யும் வாய்ப்பு இதில் இருக்கிறது. அதனால் பூமிதானம் மக்களுக்குக் கிடைத்த வரப்பிரசாதம் என்று கருதுகிறேன்" என்றார் வினோபாஜி.

** ** **

மறு நாள் காலை சம்மேளனம் தொடர்ந்தது. ஒவ்வொரு ராஜ்யத்தைச் சேர்ந்த முக்கிய பூதான தொண்டர்கள் தங்கள் தங்கள் ராஜ்யத்தில் எப்படி பூதான வேலைகள் நடைபெற்று வருகின்றன என்பதை விளக்கினார்கள். தமிழ் நாட்டைப் பற்றி திரு ச. ஜகந்நாதன் அவர்கள் கூறிய விவரம் மெய் சிலிர்க்கும்படியாக இருந்தது.

"வினோபா ஓரிஸ்ஸாவிலிருந்தபோது எனக்கு ஒரு கடிதம் எழுதினார்கள். 'தமிழ் நாட்டில் ஆலயம் மையமாகக் கொண்டே கிராமங்கள் அமைந்துள்ளன. அதனால் கிராம மக்கள் நிலங்களை ஆண்டவனுடைய சொத்து என்றே கருதி வருகிறார்கள். நிலம் ஆண்டவனுடையது என்ற உரிமையுடன் வாழும் மக்களிடையே கிராமதானம் கிடைப்பது சுலபமாக இருக்க வேண்டும்' என்று எழுதினார்கள்.

"ஆனால் அடிகள் தமிழ் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்யத் தொடங்கி ஐந்து மாதங்கள் ஆகியும் கிராம தானம் கிடைப்பதாகக் காணோம். கிணறு அழமாகத் தோண்டத் தோண்ட ஒரு நாள் தண்ணீர் ஊற்றுத் தட்டுப்பட்டு, குபுகுபு வென்று ஊற்று நீர் பொங்கிப் பெருகி வருவது போல் ஐந்து மாதங்களுக்குப் பிறகு மதுரை ஜில்லாவில் கிராம தானம் கிடைக்கத் தொடங்கியது.

விரைவில் நூற்றுக் கணக்கான கிராமங்கள் மதுரை ஜில்லாவில் கிடைக்கத் தொடங்கின. அந்தக் கிராம தான வேகம் தாலூக்கா தானமாகப் பரிணமிக்கத் தொடங்கியது. திருமங்கலம் தாலூக்காவே கிடைப்பதாக இருந்தது. இதற்குள் தேர்தல் வந்தது. சாதி வித்தியாசம் என்ற விஷத்தைக் கக்கிச் சூழ்நிலையைக் கெடுத்து விட்டது. இப்பொழுது அந்த விஷம் அடங்கி வருகிறது. கிராம மக்களே தங்கள் பகுதியில் மகாநாடுகள் கூட்டி நிலையைச் சீர்திருத்திக் கொண்டு வருகிறார்கள். திருமங்கலம் பகுதியில் 120 கிராம தானங்களாகி விட்டன. விரைவில் மற்றக் கிராமங்களும் கிடைத்து விடும்'' என்று தமது நம்பிக்கையைத் தெரிவித்தார்!

திருமங்கலம் முழுதும் கிராமதானமாகிப் புது ஒளிபெற்றுத் திகழும் நன்னாளைக் காலடியில் கூடியிருந்த மக்கள் அனைவரும் ஆவலுடன் எதிர்நோக்கத் தொடங்கி யிருக்கின்றனர். காலடி தந்த சர்வோதயக் காட்சி எப்படிப் பார்த்தீர்களா!

* * *

மேடையில் தேபர், ஜெயப்பிரகாஷ் போன்ற பெருந் தலைவர்கள் உட்கார்ந்திருந்தனர். தேபர் அவர்களோ சற்றுப் பொறுமை இழந்து மேடையை விட்டு மேலும் கீழும் ஏறி இறங்கி நடந்து வந்தார். மகாநாட்டுத் தலைவர் பார்த்தார். இவரைக் கட்டிப் போட வேண்டும் என்று தீர்மானித்தார்: ''இப்பொழுது தேபர் பேசுவார்!'' என்று மைக்கில் அறிவித்தார். அவ்வளவுதான், மக்கள் அமோகமாகக் கை தட்டி ஆரவாரித்துத் தலைவரை வரவேற்றனர். தேபர் கன கச்சிதமாக ஒரு விஷயத்தைச் சொல்லித் தமது பிரசங்கத்தை முடித்துக் கொண்டார்.

''இயற்கையன்னை ஒவ்வொரு நாட்டுக்கும் ஒவ்வொரு பண்பை அளித்திருக்கிறாள். கிரேக்க நாட்டுக்குக் கலை உணர்ச்சியை அளித்தாள். கிரேக்கர்கள் கலை உணர்ச்சி மிகுந்தவர்களாக விளங்கினார்கள். ரோம சாம்ராஜ்யம் சிறப்புற்று விளங்கிய காலத்தில் அங்கு நியாய சாஸ்திரம் பரிணமித்தது. பிரிட்டனில் மக்கள் ஆட்சி என்ற தத்துவம் முதன் முதலில் தலை எடுத்தது. அமெரிக்காவில் பொறி இயற்கலை பரிணமிக்கிறது. நம் நாட்டில் ஆத்மிகமும் தியாகமும் பண்டைநாள்முதல் இன்று வரை பரிணமிக்கிறது. ராமகிருஷ்ணர், விவேகானந்தர், காந்தி மகான், இன்று வினோபாஜி ஆகியோர் அந்த அரும்பண்பைத் தொடர்ந்து காப்பாற்றி வந்திருக்கிறார்கள். அரசியல் துறையில் ஜவாஹர்லால் நேருஜியும் சமுதாய ஆத்மீகத் துறையில் வினோபாஜியும் பாரதப் பண்புக்கு எடுத்துக் காட்டும் அரும் சுடர்களாக விளங்குகிறார்கள்! இவர்கள் ஏதோ திடீர் என்று வந்தவர்கள் அல்ல. பாரதப் பண்பு பெற்றுத் தந்த புதல்வர்கள்'' என்று மிக அழகிய சொற்பொழிவு நிகழ்த்தினார்.

* * *

பூதான இயக்கம் சின்னஞ் சிறு சிற்றூராக ஆறு ஆண்டுகளுக்கு முன் உருவெடுத்தது. அது நாளடைவில் கிராம தானமாகப் பரிணமித்து விட்டது. சென்ற சில ஆண்டுகளில் பாரதம் முழுதிலும் சுமார் 2500 கிராமங்கள் கிராம தானமாகக் கிடைத்துள்ளன என்றால் கிராமதான உணர்ச்சி நாட்டில் எவ்வளவு வேகமாகப் பரவி வருகிறது என்பதை நேயர்கள் சுலபமாக ஊகிக்கலாம்!

அதனால்தான் காலடி சர்வோதய மகாநாட்டில் இது வரை இல்லாத ஒரு புது தீர்மானம் கொண்டு வரப்பட்டது. 1957-ம் வருஷ இறுதிக்குள் ஐந்து கோடி ஏக்கர் நிலம், பூமி தானமாகப் பெறுவதற்கு வேண்டிய முயற்சிகள் எடுக்கவேண்டும் என்று முந்தைய மகாநாடுகளில் தீர்மானம் போடப்பட்டன. இந்த மகாநாட்டிலோ ஐந்து கோடி ஏக்கர் நிலம் பூமி தானமாகப் பெறுவது என்று எண்ணிக்கையைக் குறிக்கோளாகக் கொண்டு வேலை செய்வது பூதானக் கொள்கைக்கே புறம்பானது என்று தீர்மானிக்கப்பட்டது. அதனால் இனி கிராம தானங்கள் பெற ஊழியர்கள் முயல வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது. சர்வசேவா சங்கத்தின் இந்தத் தீர்மானத்தை யொட்டி ஜெயப்பிரகாஷ் நாராயண் அவர்கள் வெகு நீண்ட பிரசங்கம் நிகழ்த்தினார். சபையோர் ஓரளவு களைத்துக்கூடப் போய் விட்டனர். அந்தச் சமயத்தில் ''கேரளத்தின் முதல் மந்திரியும் நானும் பழைய நண்பர்கள்'' என்று ஒரு வாக்கியத்தைப் போட்டார்! அவ்வளவு தான். கூட்டத்தின் பிற்பகுதியிலிருந்து எழுந்த கரகோஷம் கொட்டகையை நல்ல வேளை தகர்க்காமல் விட்டது. இதிலிருந்து மேடையிலிருந்த பல காங்கிரஸ் தலைவர்களும் வந்திருந்த பிரதிநிதிகளும் கேரளத்தில் கம்யூனிஸ்ட் சர்க்கார் பொது மக்களின் ஆதரவை எவ்வளவு தூரம் பெற்றிருக்கிறது என்பதை உணர்ந்து கொண்டிருப்பார்கள்.

சபையோர் ஈ. எம். எஸ். ஸைப் பற்றித் தலைவர் ஜெயப்பிரகாஷ், இன்னும் என்ன சொல்லப் போகிறார் என்று ஆர்வத்துடன் கேட்கத் தொடங்கினர்.

''முன்பு நானும் நம்பூத்திரிபாடு அவர்களும் ஒரு முகமாக ஒன்று சேர்ந்து தேசப் பணி புரிந்தோம். பிறகு அவர் பாதையும் என் பாதையும் பிரிந்தது. இப்பொழுது மீண்டும் ஒன்று சேர்கிறோம். பூதானப் பணியில் அவரும் உதவி செய்வதாகக் கூறியிருக்கிறார். இந்த இயக்கம் பிரிந்த எங்களை மீண்டும் இணைக்கிறது!'' என்றார். அவ்வளவுதான்! மற்றொரு முறை எழுந்த கரகோஷம் வான் முகட்டையே தொட்டு விட்டது.

* * *

சில நாட்களுக்கு முன் கேரள ராஜ்யத்தின் தலை நகரமாகிய திருவனந்தபுரம் சென்று வந்தேன். அங்கு மந்திரிகளைச் சந்தித்தேன். மக்களோடு கலந்து பழகினேன். அவர்கள் யாவரும் கம்யூனிஸ்ட் மந்திரி சபையை ஒரு முகமாக வரவேற்றனர். அதே உணர்ச்சிதான் காலடியிலும் எனக்கு ஏற்பட்டது.

அன்று பிற்பகல் தலைவர் தர்மாதிகாரி ஒரு நீண்ட சொற்பொழிவாற்றினார். பின்னர் கேரள முதன் மந்திரி ஸ்ரீ ஈ. எம். எஸ். நம்பூத்திரி பாடு அவர்களுடைய வாழ்த்துக் கடிதத்தைக் கேரள சட்ட மந்திரி திரு வி. ஆர்.





# தளதளக்கும் ஈனோ வயிற்றுக் கோளாறுகளிலிருந்து எட்டே விநாடிகளில் நிவாரணமளிக்கிறது!

**அஜீர்ணம், நெஞ்செரிச்சல், அல்லது வாயுப் பொருமல் இவைகளில் எதையும் ஈனோ நிவர்த்திக்கிறது!**

ஒரு கிளாஸ் தளதளக்கும் ஈனோ ப்ரூட் ஸால்ட் சாப்பிட்டால் எட்டே விநாடிகளில் வயிற்றுக் கோளாறுகள் சீரா கின்றன. மிதமாக பேதி ஏற்பட விரும்பினால் வெறும் வயிற்றில் சிறிது பெரிய ‘டோஸ்’ ஈனோ அருந்தினால் போதும். எப்பொழுதும் உங்கள் வீட்டில் ஒரு பாட்டில் ஈனோ வைத்திருங்கள்.




ஈனோ
இந்த சீதோஷ்ண ஸ்திதிக்கு விசேஷமாக ஏற்றது
(2 அளவுகளில் கிடைக்கும்)

## ஈனோ ‘ப்ரூட் ஸால்ட்’

அமித அமிலங்களை அடக்கும்
தளதளக்கும் பானம்

‘ஈனோ’ மற்றும் ‘ப்ரூட் ஸால்ட்’ என்ற வார்த்தைகள் ரிஜிஸ்தர் செய்யப்பட்ட ட்ரேட் மார்க்குகள்

குருப் லாபரேட்டரீஸ் (இந்தியா) ப்ரைவேட் லிட்.

கிருஷ்ணய்யர் கொண்டு வந்திருந்தார். அதைத் தலைவர் படித்தார். "அசெம்பிளி நடைபெற்று வருவதால் என்னால் மகாநாட்டுக்கு வர இயலவில்லை. எனினும் விநோபா அவர்களின் இந்த பூதான இயக்கத்துக்கு எனது பரிபூரண ஆதரவும் நம்பிக்கையும் உண்டு" என்று தெரிவித்திருந்தார். இதைப் படித்து முடித்தாரோ இல்லையோ, அவ்வளவு தான்; கரகோஷம் விண்ணை இடித்தது. அதையொட்டிக் கேரள சர்க்காரின் சார்பில் ஸ்ரீ வி. ஆர். கிருஷ்ணய்யர் பூதான இயக்கத்தை ஆதரித்து நல்ல சொற்பொழிவு நிகழ்த்தினார். பின்னர் கேரளத்தின் பி. சோ. கட்சித் தலைவர் திரு பட்டம் தாணுப் பிள்ளையும் பேசினார்.

மகாநாட்டின் இரண்டாவது நாளின் நிகழ்ச்சி நிரல் முடிவடைந்து கொண்டிருந்தது. முடிவுரையாக விநோபா அடிகள் தான் பேசவேண்டும். எல்லோரும் விநோபா அடிகளின் பேச்சைக் கேட்கக் காதைக் கூர்மைப் படுத்திக் கொண்டு தயாராயினர்.

முடிவுரையாக விநோபா பேசிய பேச்சு உயர்தரமான சங்கீதம் கேட்பதுபோலிருந்தது. அந்தச் சங்கீதத்தில் அபூர்வமான சங்கதிகள் விழுந்தால் சங்கீத ரஸிகன் எவ்வளவு பரவசப்படுவானோ அவ்வளவு பரவசப்படுத்தும்படி யிருந்தது. அறிவுக்கு விருந்தாகவும், உள்ளத்துக்கு உவப்பாகவும் இருந்தது.

"நாம் மக்களின் மனமாறுதலில் நம்பிக்கை கொண்டிருக்கிறோம். அன்புடன் சொன்னால் நில உடைமை உள்ளவன் மனம் விட்டு நிலமற்றவனுக்கு நிலத்தைக் கொடுக்கிறான். தானம் செய்கிறான். அன்பு வழியில் மனமாற்றத்தை இயற்ற முடியும் என்று நம்புகிறோம். ஆனால் கம்யூனிஸ்டுகளோ, மனமாவது மாறுவதாவது என்கிறார்கள்! மனமாற்றத்தில், கருத்துப் புரட்சியில் அவர்களுக்கு நம்பிக்கை இல்லை. ஆனால் இந்தக் கம்யூனிஸ்டுகள் அத்தனை பேரும் கார்ல்மார்க்ஸ் தத்துவத்தைப் படித்து விட்டு மனம் மாறியவர்கள்தான்!" இப்படிச் சொன்னாரோ இல்லையோ சபையோர் அத்தனை பேரும் 'கொல்'லென்று சிரித்துக் கரகோஷம் செய்தார்கள்!

இன்னொரு ரசமான பகுதியைக் கேளுங்கள்: 'நம்மில் புராணகாலத்தைச் சேர்ந்தவர்கள் 'ஸத்யயுகம் எப்படியிருக்கும் தெரியுமா?' என்று பிரமாதமாக வர்ணிப்பார்கள். அங்கு போக முடியுமா என்றால் மனிதனின் இறப்புக்குப் பிறகுதான் ஸத்யுகம் அடைய முடியும்?' என்பார்கள். அது வானுலகில் இருக்கிறது என்பார்கள்!

கம்யூனிஸ்டுகளும் ஸத்ய யுகம் வரும் என்று நம்பிக்கை கொண்டிருக்கிறார்கள்! ஆம்; அவர்கள் இன்றைக்குப் பல ஹிம்சைகள் கொடுமைகள் செய்தால் எதிர் காலத்தில் அஹிம்சை மயமான சத்ய யுகம் விளையும் என்று கனவு காண்கிறார்கள்.

ஆக, புராண காலத்தவர்களும் கம்யூனிஸ்டுகளும் கற்பனையளவில் ஸத்யயுகத்தைக் காண்கிறார்கள். ஒருவர் இறந்த காலத்தையும், மற்றொருவர் எதிர்காலத்தையும் நோக்கியிருக்கிறார்கள்.

"ஆனால் பூதான ஊழியனோ தற்கால சத்ய யுக வாதி. இவன் வெறும் வாதிமட்டுமல்ல, காரியவாதி. இன்றைக்கே இப்பொழுதே இப் பிறவியிலேயே சத்ய யுகத்தைக் காண லாம் என்கிறான். இப்படிச் சொல்பவன்தான் பூதான ஊழியன்" என்றார்.

இப்படி ஒரு அருமையான பேச்சு நிகழ்த்தி விட்டு, மாலைப் பிரார்த்தனை நேரம் நெருங்கி விட்டதால் சபையோர் அனைவரையும் ஆண்டவனின் கல்யாண குணங்களைப் பிரார்த்தனை செய்யும்படி வேண்டிக் கொண்டார். பஞ்சாபிலிருந்து கன்யாகுமரிவரை எங்கிருந்தெல்லாமோ வந்துள்ள மக்கள் அனைவரும், "எங்கள் முன்னோர்கள் செய்த தவத்தால் இத்தகைய மகானை எங்களுக்கு அளித்தீர்கள். அவர் இன்னும் பல ஆண்டுகள் வாழவும் பணி புரியவும் அவருக்கு நீண்ட ஆயுளை அருளுங்கள்" என்றுதான் அன்று மனமுருகப் பிரார்த்தித்துக் கொண்டனர்.

இவ்விதம் இரண்டு நாட்கள் மகாநாடு வெகு சிறப்பாக நடைபெற்றது. கேரள கவர்னர் திரு ராமகிருஷ்ணராவ், திரு சங்கரராவ் தேவ், அப்பா ஸாஹேப் பட்டவர்த்தன், காகா காலேல்கர், திரு நவகிருஷ்ண சௌத்ரி, மேத்தா, சர்தார் வேதரத்தினம், சென்னை முதன் மந்திரி காமராஜ், பம்பாய் உதவி மந்திரி பட்டீல் இப்படிப் பல பிரமுகர்கள் விஜயம் செய்திருந்தார்கள்.

* * *

அன்றிரவு நான் சென்னைக்குத் திரும்புவதாக இருந்தேன். இரவு பதினொரு மணிக்கு அங்கமாலியிலிருந்து சென்னைக்கு ஒரு விசேஷ ரயில் புறப்படுவதாக இருந்தது. அதில்புறப்பட்டுச் சென்னைவரக் காலையிலேயே நான் ஏற்பாடு செய்து கொண்டிருந்தேன்.

காலடி மகாநாட்டில் பூதான லட்சியம் குறிப்பிட்ட வருஷத்துக்குள் அடைந்தே தீர வேண்டும் என்று காலவரம்பு செய்து கொள்ளக் கூடாது என்று தீர்மானிக்கப்பட்டதல்லவா? இதையொட்டி விநோபா பேசும் போது, "சர்வோதய சமாஜம் எப்பொழுது ஏற்படும் என்று என்னைக் கேட்கிறார்கள் சிலர். நானோ இப்பொழுதே ஏற்படலாம் என்று சொல்லுகிறேன். ஆம், மக்கள் மனம் வைத்தால், நிலம் படைத்தவர்கள் தொழில் படைத்தவர்கள், பொருள் படைத்தவர்கள் அனைவரும் ஒரு முகமாக 'இவை இனி எங்கள் சொந்த உடைமையல்ல; சமூகத்தின் உடைமை' என்று இன்று அறிவித்து விட்டால், இன்றேகூட சர்வோதய சமுதாயம் ஏற்பட்டுவிடும். சர்வோதய சமுதாயம் ஏற்படும் பக்குவம் மக்கள் மனத்தில், அவர்கள் தீர்மானத்திலிருக்கிறதே யொழிய வெளியில் இல்லை!" என்றார்.

இந்தக் கருத்து எப்படியோ அந்த விசேஷ வண்டிக்குத் தெரிந்துவிட்டது! "அங்கமாலியை விட்டு 11 மணிக்குப் புறப்படுவானேன்? இப்பொழுதே புறப்பட்டுவிடுகிறேன்" என்று இரவு 8-30 மணிக்குத் தீர்மானம் செய்து புறப்பட்டு விட்டது.

காலடி சர்வோதய மகாநாட்டின் காற்று இந்த ரயிலுக்குக்கூட அடித்திருக்கிறது. அதனால் நான் ஒருநாள் தாமதித்துச் சென்னைக்கு வந்து சேர்ந்தேன்.

# மன நிம்மதியுடன் பிரயாணம்
## செய்வதற்கேற்ற டயர்

இதோ...புகழ்பெற்ற பயர்ஸ்டோன் புதிய டீலக்ஸ் சாம்பியன் ட்யூப்லெஸ் டயர் உள்ளது. பல்லாண்டு ஆராய்ச்சியின் பயனாக உருவாகிய இந்த டயர், எந்த விலையிலும் வேறெந்த டயராலும் இதுவரை அளிக்க இயலாத பாதுகாப்பு உங்களுக்கும் உங்கள் குடும்பத்தினருக்கும் அளிக்கும். **மன நிம்மதியுடன்** பிரயாணம் செய்வதற்கென்று தயாரித்துள்ள முதல் முதலான டயர் இது ஒன்றே.





**வெடித்தல், துவாரம் விழுதல், சறுக்குதல் இவைகளின் விளைவுகளைக் குறைக்கிறது**

புதிய டீலக்ஸ் சாம்பியன் டயர் வழக்கத்திற்குப் புறம்பாக காற்றுப் புகாத ஸேப்டி லைனெர் கொண்டு பொருத்தப்பட்டுள்ளது. இதனால் கிழியவோ, வெடிக்கவோ, விரிந்து போகவோ செய்யும் ஆபத்துக்கள் தவிர்க்கப்படுகின்றன. மற்றும் ஸேப்டி லைனெர், டயரைக் கிழிக்கும் பொருள்களைப் பற்றிக்கொண்டு, காற்று வெளியேறாமல் தடுக்கிறது. இதன் மல்டிபிள் ஏங்கிள் டிரெட் டிஸைன் எத்தகைய ரஸ்தா பரப்புகளிலும், வளைவுகளிலும் சறுக்காமல், அதிகப்படியான பாதுகாப்பு அளிக்கிறது.

**Firestone**
**பயர்ஸ்டோன்**

புதிய டீலக்ஸ் சாம்பியன்
**ட்யூப்லெஸ்**
**டயர்**

# ஒருநாள் வானம்

ஒருநாள் வானம் பார்த்திருந்தேன்
உணர்ச்சியின் வசமே பட்டிருந்தேன்
இருநாள் அன்றே என்றேநான்
சிலகால் மனத்துள் நினைத்திருந்தேன்
கண்கள் விரித்தே நோக்கிநின்றேன்
களங்கம் இல்லா வானமதை
மண்ணில் இல்லா அற்புதமே
மாயோன் படைப்பின் வானமம்மா !
எண்ணில் என்மனம் இளகிடுமே
இதயம் நினைந்தே துள்ளிடுமே
கண்ணைச் சிமிட்டும் விண்மீனும்
கதைகள் பேசும் அம்மீனும்
விண்ணில்த் தோன்றும் அழகினையான்
வியந்தே ஆங்கு நின்றிருந்தேன்.
அதனைக் கூர்ந்து நோக்கிநின்றேன்
அன்புப் பெருக்கிற் றிளைத்துநின்றேன்.
அடுத்துத் தோன்றிய விண்மீனோ
அருகில் என்னைக் கூவிற்று.
வெண்மை நிறத்து வானமது
விளங்குஞ் சிலகாற் கருநிறத்தில்
தண்ணொளி வீசும் மதியங்கே
தாவித் தனியே ஓடிற்று.
புண்ணிய மாந்தர் புவிமீது
புகழும் இறைவன் படைப்பேயாம்
எண்ணரும் இறைவன் எழிலுருவை
இதய வானில் கண்டுநின்றேன்.

'வேலழகன்'



# மணப்புயல் சித்திரத் தொடர் கதை ④

ஹேமா வீட்டில் ஒரு நாள்















எனக்குப் பழமும் வேண்டாம்; கிழமும் வேண்டாம்!
என்னம்மா கோபம்?


ராகமே, அநுராகமே!


பாட்டின் அர்த்தம் புரிகிறதோ, இல்லையோ, ஹேமா! கோபம் ஒரு நாள் அன்பாக மாறி விடுமாம்!


என்ன இருந்தாலும் விமலா கெட்டிக் காரிதான்!


அம்மா! ரமணி என்ன சாதாரண மனிதரா? பெரிய பணக்காரர்!


அப்படி யானால் எங்களுக்குக் கல்யாணச் சாப்பாடு இருக்கிறது என்று சொல்லுங்கள்!
பேஷாக!
தொடரும்

# முரளியின் யோசனை!

பரீட்சையெல்லாம் முடிந்து முரளி விடுமுறையைக் குதூகலமாகக் கழித்துக் கொண்டிருந்தான். குதூகலத்துக்குக் காரணம், அவனுடைய பெரியப்பா முதலியவர்கள் ஊரிலிருந்து வரப் போவதாக வந்த செய்திதான்.

அவன் பெரியப்பா ஒரு சிறந்த நடிகர். பல இடங்களில் நாடகம் நடத்துவதற்காகவே அவர் தம் நாடகக் குழுவினருடன் முரளியின் வீட்டுக்கு வர ஏற்பாடு ஆகி இருந்தது. பெரியப்பாவும் அவர் சகாக்களும் நாடகத்துக்கு வேண்டிய துணிமணி பெட்டிகளுடன் வந்து சேர்ந்தனர். முரளி, தான் அந்த நாடகங்களைப் பார்க்கப் போகும் ஆனந்தத்தில் மூழ்கிப் போய் இருந்தான். முரளி, அவன் தகப்பனார் மற்றும் முரளியின் பெரியப்பா எல்லோரும் சேர்ந்து தாழ்வாரத்தில் உட்கார்ந்து அளவளாவப் போனார்கள்.

அப்பொழுது காலை எட்டு மணி இருக்கும். யாரோ கதவைத் தட்டும் சப்தம் கேட்டு முரளி கதவைத் திறந்து பார்த்தான். அங்கே தன் தகப்பனாரின் சிநேகிதர் 'அரட்டை' வீரர் பொன்னுசாமியைக் கண்டான். இவருக்கு இந்தப்பட்டம் முரளி தான் கொடுத்திருந்தான். அவர் அரட்டை அடிக்க ஆரம்பித்தால் எல்லோரும் சலித்துப் போகும் வரைவிட மாட்டார். அதில் அவரை வெல்ல முடியாத காரணத்தினாலேயே அந்தப் பட்டத்தை அவன் அவருக்கு வழங்கியிருந்தான். பொன்னுசாமி பெரிய பணக்காரர். சிறந்த அறிவாளி. ஆனால் அவர் அரட்டையை எவராலும் தாங்க முடியாது.

கதவு திறந்தவுடன் 'நமஸ்காரம்' என்று சொல்லிக் கொண்டு உள்ளே வந்து வராந்தாவில் அமர்ந்தார் பொன்னுசாமி. பேசவும் ஆரம்பித்தார். மணி ஒன்பதாகி, பத்தாகி, பன்னிரண்டும் ஆகி விட்டது. பெரியப்பா முதலியவர்களுக்குப் பசி தாங்க முடியாமல், 'அவர் இங்கிருந்து போக மாட்டாரா!' என்று அயர்ந்து போய் உட்கார்ந்திருந்தார்கள்.

"சாப்பிட நேரமாச்சு. சாப்பிடப் போகலாம் வாருங்கள்!" என்று முரளியின் தகப்பனார் பொன்னுசாமியையும் அழைத்தார். ஆனால் அந்தமனிதர், "வேண்டாம்! நான் பத்மநாபன் வீட்டுக்குச் சாப்பிடப் போக வேண்டும். அவர் கூப்பிட்டிருக்கிறார்!" என்று சொல்லிக் கொண்டே மறுபடியும் பேச்சைத் தொடங்கி விட்டார்.

'இது என்ன வம்பாகப் போச்சு! நம் சாப்பாட்டிலும் மண் விழுந்தது. பத்மநாபன் இவரைக் கூப்பிட்டு விட்டு அவரும் தவிக்கப் போகிறார்' என்று முரளி யோசனை செய்தான். அதற்கு ஒரு வழி அவனுக்குத் தோன்றியது. மெல்ல வந்து நடிகர் பெரியப்பா காதில் ஏதோ சொன்னான். பெரியப்பாவும் அவர் சகாக்களும் உள்ளே சென்றார்கள். கொஞ்ச நேரத்துக்கெல்லாம் வாசற் பக்கத்திலிருந்து பெரிய முனீசுவரர்களும் அவர்கள் சிஷ்யர்களும் உள்ளே நுழைந்தார்கள்.

"வர வேண்டும், வரவேண்டும்" என்று முரளியின் தகப்பனார் அவர்களை எழுந்து உபசரித்தார்.

அரட்டை வீரர் பொன்னுசாமி, "சரி யார் யாரோ வருகிறார்கள். மன்னிக்க வேண்டும். நான் வருகிறேன்" என்று சொல்லி விடைபெற்றுக் கொண்டார்.

அவர் சென்றவுடன் எல்லோரும் பெரிதாகச் சிரித்து விட்டுப் பிறகு போட்டுக் கொண்ட வேஷங்களை யெல்லாம் கலைத்துச் சாப்பிடச் சென்றார்கள்.

"சபாஷ், முரளி! சரியான யோசனை செய்தாய். உன் யோசனையினால்தான் அரட்டை பொன்னுசாமியிடமிருந்து தப்பினோம். அதனால் பத்மநாபனும் பலனடைந்தான்!" என்று அவன் தந்தை சொல்லிச் சிரித்தார்.

குமார்



# மாயப்பந்து

9. மால்கோஷின் தந்திரம்

கலா மேலே போகப் போக எங்கே யாவது விழுந்துவிடப் போகிறேமே என்று பயந்து மந்திரக் கிழவியின் கழியை இரண்டு கைகளாலும் பிடித்துக் கொண்டாள். 'மால்கோஷ்! மால்கோஷ்!' என்று உரக்கச் சத்தமிட்டுக் கத்தினுள். அவள் கத்தி என்ன பயன்? அவன் காதில் விழுமா ?

மந்திரக் கிழவி நேராக உயரத்தில் குன்றின்மீது உள்ள தனது வீட்டுக்கு அழைத்துச் சென்றுள். குன்றிலுள்ள அந்த வீட்டில் இரண்டு அறைகள் காணப்பட்டன. அதில் ஒரு அறையில் கலாவை இருக்கச் செய்தாள்.

"கதவை நான் வேணுமென்றேதான் தாளிடவில்லை. நீ என்னைத் தாண்டி எப்படித் தப்ப முடியும்? நான் அடுத்த அறையில் உட்கார்ந்து கொண்டு உன் நடவடிக்கைகளைக் கவனித்து வருவேன். நீ தப்பி ஓட ஆரம்பித்தால் உன் உயிருக்கே ஆபத்து நேரிடும். ஜாக்கிரதை" என்று கிழவி சொல்லவே, கலா பயந்து நடுங்கினுள். சற்று நேரம் கழித்துக் கொஞ்சம் தைரியம் வந்தவுடன் அறையிலுள்ள ஜன்னல் வழியாக வீதியில் நடப்பவர்களைப் பார்த்தபடியே இருந்தாள். ஆனுல் அவள் வெகு உயரத்தில் இருந்ததால் அவளுடைய கண்களுக்கு ஒன்றுமே புலப்படவில்லை. தன் அண்ணனை நினைத்துக் கொண்டே வருத்தத்துடன் மேலே என்ன நடக்கப் போகிறதோ என்று

ராஜி



பயந்து அறையில் தனியாக உட்கார்ந்து கொண்டிருந்தாள்.

குளத்துக்கு அருகே இருந்த சுரங்கத்தில் உள்ள விலை உயர்ந்த பொருள்களையும் ஆபரணங்களையும் பொன் நாணயங்களையும் பார்த்து வியந்து கொண்டிருக்கும் சமயத்தில் திடீரென்று மால்கோஷுக்கு அவன் தங்கையின் ஞாபகம் வந்தது. உடனே குளத்தின் வழியாக வெளியே வந்தான். தன்னுடைய தங்கை நின்று கொண்டிருந்த இடத்தை நோக்கி ஓடினன். அவளைக் காணுமல் போகவே அவளைத் தேடிய வண்ணம் இங்கும் அங்குமாக அலைந்தான். வழிப்போக்கர்களை விசாரித்ததில் மந்திரக் கிழவி ஒரு பெண்ணை ஆகாய மார்க்கமாகக் குன்றின் மீதுள்ள தன் வீட்டுக்கு அழைத்துச் சென்றதாகச் சொன்னார்கள்.

மால்கோஷ் இதைக் கேட்டதும் குளத்தில் குதிப்பதற்கு முன் மரத்தில் தான், மாட்டி யிருந்த சட்டை இருக்கிறதா என்று கவனித்தான். அதிர்ஷ்டவசத்தால் அந்தச் சட்டை மாட்டப்பட்டிருந்த இடத்திலேயே இருந்தது. சற்று நேரம் வெய்யிலில் நின்று தனது துணிகளைக் காய வைத்துக் கொண்டான். பிறகு தன்னுடைய பையிலுள்ள தன் தகப்பனுர் கொடுத்து உதவிய வெள்ளை மந்திரப் பொடிப் பொட்டலத்தை எடுத்தான். நன்ருக மந்திரப் பொடியைப் பந்தின் மீது தடவி வெய்யிலில் காய வைத்தான். பந்து முன்பு போலப் புதுப் பந்தாகவே தோற்றமளித்தது.

அன்று இரவு போலீஸ் அதிகாரியின் வீட்டில் இளைப்பாறினன். தன் தங்கையை எப்படிக் கிழவியின் வீட்டிலிருந்து தப்ப வைப்பது என்பதே அவன் யோசனை. பல வழிகளைச் சிந்தித்துப் பார்த்தான். தன்னுடைய பந்தின் உதவியைப் புத்திசாலித்தனமாக உபயோகிக்க நிச்சயித்தான்.

மறுநாட் காலையில் பந்துடன் கலா இருக்கும் குன்றுக்கு அடியில் நின்று கொண்டிருந்தான். அங்கு கூடி யிருந்த ஜனங்கள் எல்லோரும், "ஐயா! நீங்கள் வருத்தப்படுவதில் பிரயோசனமில்லை. தன்னிடம் கொண்டு போன ஆசாமிகளையோ அல்லது பொருள்களையோ கிழவியிடமிருந்து ஒருவரும் திருப்பிக் கொண்டுவர முடியாது" என்று சொன்னார்கள். அதைக் கேட்ட மால்கோஷுக்குப் பயமும் துக்கமும் அதிகரித்தன. அங்கிருந்தால் கூட்டமும் அதிகரிக்கும் என்று எண்ணிச் சற்றுத் தூரத்துக்கப்பால் உள்ள ஒரு தனிமையான இடத்துக்குச் சென்றான். அருகில் இருந்த ஒரு கோவிலின் கோபுரத்தில் ஏறிக் குன்றின் மீதுள்ள மந்திரக் கிழவியின் அறையை நோக்கினன். அறை அவன் நின்று கொண்டிருந்த இடத்துக்கு உயரமாக இருந்தாலும் அறையின் ஜன்னலுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டிருப்பது தனது தங்கை என்று அவளது ஆடையின் அடையாளத்திலிருந்து தெரிந்து கொண்டான். வெகு சந்தோஷத்துடன் கோபுரத்திலிருந்து கீழே இறங்கி, குன்றுக்கு அருகில் வந்தான். யோசனை செய்தான். தன் தகப்பனுர் கூறியபடி தனது புத்தியையும் பயன்படுத்தி, பந்தையும் உபயோகப்படுத்த நிச்சயம் செய்தான். பந்தைக் கையில் எடுத்தான். "ஏ பந்தே! குன்றின் மேல் மந்திரக் கிழவியின் அறையில் இருக்கும் என் தங்கையை நான் பார்க்க வேண்டும். அவள் உட்கார்ந்திருக்கும் ஆசனத்துக்கு அருகிலிருக்கும் ஜன்னல் கம்பியில் உறுதியான கயிற்றைக் கட்டு. அந்தக் கயிறு நீளமாக அடிவாரம் வரையில் வளர்ந்து என்னிடம் வரட்டும்!" என்று சொல்லி, பந்தைக் கீழே போட்டுப் பிடித்தான்.

அடுத்த நிமிஷம் மந்திரக் கிழவியின் அறையின் ஜன்னல் கம்பியில் ஒரு உறுதியான கயிறு தோன்றித் தானுகவே பிணைந்து கொண்டது. பிறகு அந்தக் கயிறு நீண்டு வளர்ந்து மால்கோஷின் கைக்கு வந்து சேர்ந்தது.



தனியாக அறையில் அமர்ந்திருந்த கலா ஜன்னல் கம்பியிலிருந்து திடீரென்று கயிறு நீண்டு வளர்ந்து கொண்டே போவதைப் பார்த்தாள். உடனே அவள் பயந்து விட்டாள். மந்திரக் கிழவியின் சூழ்ச்சியா யிருக்குமோ என்று நினைத்து அவளை உரத்த குரலில் கூப்பிட்டாள். ஆனால் மந்திரக் கிழவியிடமிருந்து பதில் வர வில்லை. வெளிப் பக்கத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும் ஜன்னலிடம் நெருங்கிக் கீழே பார்த்தாள்! 'ஆகா, யார் கயிற்றைப் பிடித்துக் கொண்டு குன்றை நோக்கி ஏறி வருவது! என்ன, மால்கோஷா வருகிறான்?' கலா கவனித்துப் பார்த்தாள். குன்றின் அடிவாரத்திலிருந்து கயிற்றை லாகவ மாகப் பிடித்துக் கொண்டு மால்கோஷ் மேலே மேலே ஏறிக் கொண்டிருந்தான்.

கலாவின் மனம் ஆனந்தத்தால் துள் ளியது. அதிகமான சந்தோஷம் காரண மாக அவளுக்கு என்ன செய்வது என்றே தோன்றவில்லை. அவள் முகம் மலர்ந்த தாமரை மாதிரி இருந்தது.

மால்கோஷ் கொஞ்சம் கொஞ்சமாகக் கயிற்றைப் பிடித்துக் கொண்டு ஏறி ஜன்னலை நெருங்கி விட்டான்.

அண்ணாவைக் கண்டதும் கலா, "அண்ணா! வா வா! அப்படியே மெதுவாகக் கைப்பிடிச் சுவரைப் பிடித்துக் கொண்டு சுற்றி அறைக்குள் வா" என்றாள்.

மால்கோஷ் மெதுவாகக் கைப்பிடிச் சுவரைப் பிடித்துக் கொண்டு மூச்சுத் திணறிய வண்ணம் கலா இருக்கும் அறைக்குள் சென்றான்.

உடனே மால்கோஷ், "ஜன்னல் கம்பி யில் கட்டியிருக்கும் கயிறு உடனே மறைந்து போக வேண்டும்!" என்று சொல்லிக் கொண்டே பந்தைக் கீழே போட்டுப் பிடித்தான். மறு கணம் அந்தக் கயிறு மறைந்து விட்டது.

அந்தச் சமயத்தில் 'ஹா ஹா ஹா' என்று பெரிதாகச் சிரித்துக்கொண்டே அறையின் வாசற்படியில் தோன்றினாள் மந்திரக் கிழவி. "உங்கள் இருவரையும் இந்த அறையிலேயே சேர்த்து வைக்க வேண்டும் என்று நான் எண்ணிய எண் ணம் இப்பொழுது நிறைவேறிற்று" என்று கூறிவிட்டு மறுபடியும் சிரித்தாள்.

மந்திரக் கிழவியைப் பார்த்ததும் மால் கோஷுக்கும், கலாவுக்கும், அவர்களுக்கு ஏற்பட்ட ஆபத்திலிருந்து எப்படித் தப்பு வது என்று கவலையாகப் போய்விட்டது.

அறையின் வாசற்கதவின் அருகில் நின்ற மந்திரக் கிழவி உள்ளே மால்கோஷிடம் நெருங்கினாள். "மால்கோஷ்! ஏன் பயப் படுகிறாய்? நான் இனிமேல் உனக்கும் உன் தங்கைக்கும் ஒரு கெடுதியும் செய்ய மாட் டேன். என்னை நம்பு. உன் புத்தி சாதுரி யத்தை நான் மிகவும் மெச்சினேன். நான் ஒருவருக்கும் எளிதில் தெரிந்து கொள் ளாதபடி சாதாரண சத்தத்தைத் தண்ணீ ருக்குள் வைத்து அதைச் சுரங்க அறையின் கதவு திறக்கும்படி செய்திருந்தேன். பல மந்திரவாதிகள் கதையைப் புரிந்து கொள் ளாமல் தண்ணீருக்குள் பல மந்திரங்களை உச்சரிக்கப் பார்த்து ஏமாந்து திரும்பி னார்கள். ஆனால் நீயோ அந்த மந்திர சத் தத்தைக் கையாண்டு நான் ஆச்சரியப் படும்படி சுரங்கக் கதவைத் திறக்கச் செய் தாய். உன்மீது அப்பொழுது எனக்குப் பிரியம் உண்டாயிற்று. இருந்தாலும் உன் மீது உள்ள கோபம் குறையாமல் உன்னிட முள்ள மாயப் பந்தைக் கைப்பற்றி உனக்கே அந்தப் பந்தின் மூலம் கெடுதல் செய்ய நினைத்தேன். ஏனோ அது பலிக்கவில்லை. கடவுள் சித்தம் அப்படி இருக்கிறது என்று என் மனத்தைச் சமாதானப் படுத்திக் கொண்டு வெளியே வந்து உனது அழ கான தங்கையைத் தூக்கி என் அறையில் வைத்தேன். இரகசியமாகத் தூக்கி வர வில்லை. பல ஜனங்களின் முன்னிலையி லேயேதான் தூக்கி வந்தேன். அதற்கு முக்கிய காரணம் உன்னைத் தனிமையி லேயே சந்தித்துப் பேசவேண்டும் என்பதற் காகத்தான். நீ எப்படியும் உன் தங்கையை நான் இங்கே கொண்டு வந்திருக்கிற செய் தியைக் கட்டாயம் ஜனங்களிடமிருந்து அறிந்து கொள்ளுவாய் என்பது நிச்சயம். வெகு உயரத்தில் இருக்கும் உன் தங் கையை எப்படிச் சந்திக்கப் போகிறாய் என்பதுதான் விளங்கவில்லை. உன் தங்கை யிடம் நீ சேருவதற்கு மாயப் பந்தினால் செய்த தந்திரம் போற்றத் தக்கது. மந்தி ரத்தை நீ தந்திரத்தினால் அல்லவா ஜயிக் கிறாய். அந்தச் சாமர்த்தியத்துக்குப் பெயர் போனவர் உங்கள் தகப்பனார் மால்மா. நீ தகப்பனார் குணத்தை அப்படியே கொண்டிருக்கிறாய். அதைப் பார்க்க எனக்கு மிகவும் சந்தோஷம். உண்மையில் உன்னை உன் தங்கை இருக்கும் இடத்துக் குப் போக முடியாதபடி செய்ய வேண்டு மென்ற நோக்கம் எனக்கு இருந்திருந்தால் உன்னை என் அறைக்கு வர முடியாமல் செய்திருப்பேன் அல்லவா?" என்றாள்.

உடனே மால்கோஷ், "ஆமாம்! அது உண்மைதான். எனக்கும் கலாவைச் சந்திக்கும் வரையில் நம்பிக்கை இல்லை. உங்களிடமிருந்து ஏதாவது தீங்கு வரும் என்றுதான் எதிர்பார்த்தேன். இப்பொழுது தான் நீங்கள் சொன்னதிலிருந்து உங்க ளுக்கு எங்கள்மீது தீய எண்ணம் எதுவும் இல்லை என்பது தெரிகிறது" என்றான்.

"உன்னைத் தனிமையாக நான் சந்திக்க யத்தனித்தது உனக்கு ஒரு அதிசயப் பொருள் ஒன்றைக் கொடுக்கத்தான்" என்று சொல்லிக் கொண்டே கிழவி தன் அறைக்குச் சென்றாள். (தொடரும்)

தரத்திற்கும் உறுதிக்கும்-இணையற்றது

# ஹத்திபாயின்

தராசு மார்க்

உத்தரவாதமுள்ள

ஸ்டெயின்லெஸ் ஸ்டீல்

பாத்திரங்கள்



உபயோகித்து. கழுவி துடைத்து நோக்குங்கள்.

என்ன செய்தாலும் அதன் பளபளப்பு நிலைத்து நிற்கும்

ஹக்கிபாய் துள்சிகாஸ் அன்ட் சன்ஸ்
பம்பாய்-2.






### அத்தியாயம் 23

## மான் கூட்டம்

சிவசங்கரனுடன் அன்று வேட்டையாடச் சென்றவர்களில் ஒருவர் தாசில்தார் அப்துல்லா ஸாஹேப். இவருக்கும் சிவசங்கரனுக்கும் உத்தியோக முறையில் முதலில் தொடர்பு ஏற்பட்டது. பிறகு, வேட்டைப் பிரியர் என்று தெரிந்ததும் அவரிடம் சிவசங்கரனுக்கு நட்புணர்ச்சி உண்டாயிற்று. அவரும் மிக நல்லவர். சிவசங்கரனின் நல்ல சுபாவத்தையும், கர்வமில்லாத தன்மை

யையும் கண்டு அவர் சந்தோஷப்பட்டார். சிவசங்கரன் உத்தியோகத்தில் உயர்ந்தவராக இருந்தாலும், வயதில் சிறியவரானபடியால், அவருடன் உரிமையுடன் பழகினார்.

அப்துல்லா ஸாஹேபின் மருமகனும் அன்று கூடவந்திருந்தான். அஹமத் அவருடைய பெண்ணை மணந்து கொண்ட பாக்கியசாலி. தன் மனைவி ஸலீமாவை வாயுபகவான்கூடப் பார்த்து விடக் கூடாது என்று அவளை வீட்டினுள்ளேயே அடைத்து வைத்திருந்தான். அப்துல்லா ஸாஹேபுக்கு இது கொஞ்சம் வருத்தம் அளித்த விஷயம். உலகம் இவ்வளவு முன்னேறிக் கொண்டு வரும்போது தன் மகள் மட்டும் பர்தாவுக்குள் இருப்பது அவருக்குச் சம்மதமாக இல்லை. ஆனாலும் மருமகப் பிள்ளைக்கு விரோதமாக எதுவும் சொல்லக் கூடாதென்று பேசாமல் இருந்து வந்தார்.

சிவசங்கரனிடம் மனம் விட்டு ஒரு நாள் பேசும் பொழுது இதையும் கூறினார். எப்போதாவது சமயம் நேர்ந்தால் அஹமதுக்குப் புத்தி சொல்ல வேண்டுமென்று கூடச் சொல்லி யிருந்தார்.

இதனால் சிவசங்கரனுக்கு அஹமதைப் பரிச்சயம் செய்து கொண்டு சிநேகத்தை வளர்த்துக் கொள்ள வேண்டுமென்று இருந்தது. ஆகவே அஹமதிடமே பேசிக் கொண்டு வந்தார். ஜீப் காரின் 'கரா புரா' சத்தம்கூட அவர்களுடைய பேச்சொலியில் அமுங்கிப் போய் விட்டது.

''அஹமத்! நீங்களும் நானும் இவ்வளவு 'தோஸ்த்' ஆகி விட்டோம் அல்லவா? ஒரு நாள் நீங்களும் உங்கள் மனைவியும் என் வீட்டுக்கு விருந்துக்கு வர வேண்டும்'' என்றார் சிவசங்கரன்.

அப்துல்லா ஸாஹேப் சிரித்தார். அஹமத் பதில் சொல்லத் தயங்கினான். ''ஏன் பதில் சொல்லவில்லை? எங்கள் வீட்டில் நீங்கள் சாப்பிட மாட்டீர்களா? ரொம்ப ஆசாரமா?'' என்று கேட்டார் சிவசங்கரன்.

''அதெல்லாம் இல்லை; நான் அவசியம் வருகிறேன்.''

''நான் வருகிறேன் என்றால்? ..''

''என் மனைவி வரமாட்டாள். அவளுக்கு யார் வீட்டுக்கும் போய் அதிகமாகப் பழக்கமில்லை.''

''என்ன இது? அதிசயமாக இருக்கிறதே. உமது மனைவி யார் வீட்டுக்கும் போவதில்லையா? என்ன அப்துல்லா ஸாஹேப்? உம்முடைய மகளை அவ்வளவு கட்டுப் பெட்டியாகவா வளர்த்திருக்கிறீர்கள்? அஹமதின் பாடு திண்டாட்டம் தான். மனைவியை அழைத்துக் கொண்டு உல்லாஸமாக எங்கும் போக முடியாது'' என்று மிகவும் வருத்தப்படுபவர் போலப் பாசாங்கு செய்தார் சிவசங்கரன்.

''மனைவியை அழைத்துக் கொண்டு போனால் உல்லாஸம் எங்கிருந்து வரும்?'' என்று அஹமத் கேட்ட போது அத்தனை பேரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்!

அந்தச் சமயத்தில் ஜீப்பை ஓட்டிக் கொண்டு வந்த டிரைவர், மெதுவான குரலில், ''நாம் மலையடிவாரத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறோம்'' என்று கூறவே சற்று நேரம் பேச்சு ஓய்ந்தது. எல்லாரும் ஆவலுடன் வழியைக் கவனிக்க ஆரம்பித்தனர்.

வழியிலிருந்த இரண்டு மூன்று திருப்பங்களைத் தாண்டிய பிறகு கருணாகரன் ''வலது பக்கம் திரும்ப வேண்டும்'' என்று கூறவே, ஜீப் தன்னுடைய விநோதமான ஒலியோடு வலது பக்கம் திரும்பியது.

அதுவரையில் ஒரு பக்கம் வயல் வெளிகளாகவும், இன்னொரு பக்கம் மலைச் சரிவாகவும் பார்த்து வந்த சிவசங்கரனுக்கு வானோங்கிய மரங்களின் இடையே போவது உற்சாகத்தை அளித்தது.

''இங்கேகூட மான் கூட்டங்கள் வருவதுண்டு'' என்றான் கருணாகரன்.





பம்பாய் ராஜ்ய சுருக்கெழுத்தாளர் சங்கத்தின் தலைவர் திரு சுகவாரனுக்கும் திரு கே. எஸ். சீனிவாச ஐயர் அவர்களின் புதல்வி ஜயலக்ஷ்மிக்கும் மாதுங்காவில் ஏப்ரல் 22ந் தேதியன்று சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.
வாழ்க மணமக்கள் !

''இந்த 'ஜீப்' போடும் சத்தத்தில் ஒரு மிருகம் கூட எதிர்ப்படாது. எல்லாம் ஓடிப்போய் விடும்'' என்றான் அஹமத்.

காட்டிலாகாவைச் சேர்ந்த பங்களாவை அடையும் வரையில் ஒரு மிருகம் கூட அவர்கள் கண்களில் படவில்லை. அதனால் எல்லாருமே சற்று ஏமாற்றம் அடைந்திருந்தனர்.

சிவசங்கரன் அப்துல்லா ஸாஹேபிடம் ''உங்கள் மருமகனும், நீங்களும் வருவதால் எல்லா மிருகங்களும் பர்தாவுக்குள் பதுங்கிக்கொண்டு விட்டன போலிருக்கிறது'' என்றார். அவர்களுடைய சிரிப்பொலி பிரயாணிகள் விடுதியின் சுவர்களில் மோதி எதிரொலித்தது.

காட்டிலாகா அதிகாரியைத் தேடிக்கொண்டு போன டிரைவர் ஒல்லியாகக் கடுவன் பூனை போன்ற முகமுடையவர் ஒருவரை அழைத்து வந்தான்.

''உங்களுக்கு என்ன வேண்டும்? நான் தான் ராமன் நாயர்'' என்று தம்மை அறிமுகம் செய்து கொண்டார் அவர்.

கருணாகரன் அவரிடம், ''நாங்கள் விஜயராகவனின் நண்பர்கள். இங்கே இன்றும் நாளையும் தங்கிக் காட்டில் வேட்டையாடி விட்டு, நாளை மாலை புறப்பட்டுப் போகிறோம். அதுவரையில் எங்களுக்கு இந்த விடுதியில் ஒரு அறை வேண்டும்'' என்றான்.

ராமன் நாயர் ஒரு புன்னகை புரிந்தார். உடனேயே செய்யத்தகாத ஒரு காரியத்தைச் செய்துவிட்டமாதிரி மறுபடியும் முகத்தைச் சுருக்கிக் கொண்டார். காட்டுக்குள்ளேயே இருந்து வருகிறபடியால் அவருக்கு மனிதர்களுடைய சகவாசமே மறந்து போய் விட்டதோ என்று எண்ணத் தோன்றியது.

''யானை வேண்டுமா?'' என்று கரகரப்பான குரலில் கேட்டார் ராமன் நாயர்.

''விலைக்கு வேண்டாம். வேட்டையாடப் போகும்போது அதன்மீது ஏறிக்கொண்டு போகிறோம்'' என்று சிவசங்கரன் கூறவே மறுபடியும் அனைவரும் சிரித்தார்கள். ராமன் நாயரின் முகம் கூட ஒரு கணம் மலர்ந்தது.

ஆனால் பதில் கூறியபோது அவர் முகத்தில் எந்தவித உணர்ச்சியும் இருக்கவில்லை. ''நானும் விலைக்குத் தருவதாகச் சொல்லவில்லை. எத்தனை மணிக்கு வேண்டும் என்று கூறினால் சௌகரியமாக இருக்கும்'' என்றார்.

''இப்போது நாங்கள் ஜீப்பிலேயே கொஞ்ச தூரம் போய்ச் சுற்றி விட்டு வருகிறோம். பிறகு இரண்டு மணிக்குப் போகிறோம். இரண்டு மணிக்கு யானையைக் கொண்டுவரச் சொல்லுங்கள்'' என்றார் சிவசங்கரன்.

''யானையைக் கொண்டுவர முடியுமா? அழைத்து வந்தால் போதும்'' என்றான் கருணாகரன்.

மறுபடியும் எல்லாரும் ஜீப்பில் ஒருவர் பின் ஒருவராக ஏறிக் கொண்டார்கள்.

அடர்ந்த காட்டுக்குள்ளே பெயரளவுக்குப் போடப்பட்டுள்ள பாதைமீது ஜீப் சென்றபோது எல்லாருக்குமே கொஞ்சம் 'திக் திக்' கென்று மனம் அடித்துக் கொண்டது. எந்தப் பக்கத்திலிருந்து எந்த மிருகம் வருமோ என்று ஆவலுடன் துப்பாக்கியை வெளியே நீட்டிப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான் அஹமத். சிவசங்கரனும் தமது துப்பாக்கியை எடுத்து ஏதோ குறி பார்ப்பது போல வைத்துக் கொண்டிருந்தார்.

அப்துல்லா சாஹேபுக்கு அவர்கள் செய்வது வேடிக்கையாக இருந்தது. ''அப்பனே! எந்த மிருகமும் இந்த ஜீப் போடும் சத்தம் கேட்கும் போது உங்கள் எதிரே வந்து நிற்காது. பேசாமல் துப்பாக்கிகளை உள்ளே வைத்து விட்டு, இந்தக் காட்டின் அழகையாவது பார்த்து ஆனந்தப் படுங்கள்'' என்றார்.

அவர் கூறியதைப் பொய்யாக்கவிரும்புவதுபோல் ஒரு பக்கத்தில் மான் கூட்டம் ஒன்று தெரிந்தது. டிரைவர் காரை மிகவும் மெதுவாக ஓட்டினான்.

அந்தப் புள்ளிமான் கூட்டத்தில் சுமார் முப்பது மான்கள் இருக்கும். அத்தனை மான்களைச் சேர்ந்தாற் போலப் பார்ப்பதே ஆச்சரியமாக இருந்தது. அவற்றின் தேகத்திலுள்ள மினு மினுப்பும், அள்ளித் தெளித்தமாதிரி புள்ளிகளும், மருளும் அதன் விழிகளும், பார்ப்பவர்கள் மனத்தை வசீகரித்து விடும். இரண்டு மூன்று மான்கள் புல் மேய்

# "உங்கள் பற்களை பாதுகாருங்கள்!"

விஸ்டம் பல் வைத்தியர் எப்படி என்று கூறுகிறார்



வாயில் உள்ள சில அபாய இடங்களில்தான் சொத்தை ஏற்படுகிறது! இந்த இடத்திற்கு 'விஸ்டம்' டூத் ப்ரஷால் அதிக கவனம்செலுத்துங்கள். அது அந்த இடங்களை துப்புரவாக சுத்தம் செய்வதற்கென்றே விசேஷ அமைப்பு கொண்டது.



**ஈறுகளின் ஓரங்கள்**

ஓரங்களை சுற்றிலும் சுத்தம் செய்யுங்கள். ஆனால் ஈறுகளை பின்னுக்கு தள்ளாதீர்கள். வரிசையில் நேராக இல்லாத பல்லின் இரு பக்கங்களிலும் உள்ள பற்களை முக்கியமாகக் கவனியுங்கள். இங்கேதான் சொத்தை ஆரம்பிக்கிறது.



**பல் முனைகள்**

மெல்லும்போது, நீங்கள் சதுர அங்குலத்துக்கு 200 ராத்தல் அழுத்தம் கொடுக்கிறீர்கள். இதனால் உணவுத் துகள்கள் பல் குழிகளில் புகுந்து விடுவதால் இவைகளை நீக்க துரிதமாக ப்ரஷால் தேய்க்க வேண்டும்.



**பற்கள்**
**இடையே**
**இடைவெளிகள்**

பலபேர்கள் இவைகளை வாயின் ஒரு பக்கத்திலேயே சுலபமாகத் துலக்குகிறார்கள். மறு பக்கம் துலக்க அவர்களுக்கு சிரமமாயிருக்கிறது. எந்த பக்கத்தில உங்களுக்கு சிரமமாயிருக்கிறதோ அங்கே அதிகக் கவனம் செலுத்துங்கள்.

விஸ்டம் ப்ரஷை தினமும் இரு தடவையாவது உபயோகித்து பற்களைபாதுகாருங்கள். துலக்க சுலபமாயிருக்கவே விஸ்டம் சிறிய தலையும் வளைந்த கைப்பிடி அமைப்புமுள்ளதால் வாயில மூலைமுடுக்குகளிலும் புகுத்தலாம்; அதன் விறைப்பான நைலான் குச்சங்கள் பல் இடுக்குகளில் நுழையும். பொருத்தமான வடிவம் கொண்ட விஸ்டம் [illegible] ப்ரஷை உபயோ

**காலாகாலத்தில் உங்கள் பல் வைத்தியரை நாடுங்கள்.**

# *Wisdom* REGD.



நீடித்து
உழைக்கும்
டூத் ப்ரஷ்

வதை நிறுத்தி, ஓசை வந்த பக்கம் திரும்பி நின்றன. சலனமற்று நின்ற அந்த மான்களின் காதுகள் மட்டும், முன்னும் பின்னும் ஆடின.

அஹமத் அவசரமாகத் தன்னுடைய பையை எடுத்து எதையோ தேடினன். இரண்டு நிமிடங்களில், ஒரு காமிராவை எடுத்தான். பரபரவென்று அதைத் திறந்து ஒரு கண்ணை மூடிக் கொண்டு இன்னொரு கண்ணால் மானைப் பார்த்தான். அதே கணத்தில் மான் தலையைத் திருப்பிக்கொண்டு இன்னும் பின்னல் போய் விட்டது.

சிவசங்கரன் அஹமதைப் பார்த்து, ''என்னமோ செய்து மானை விரட்டி விட்டாயே?'' என்றார்.

''இனிமேல் எடுத்துப் பயனில்லை. இந்த அடி மரங்கள்தான் வரும்'' என்றான் கருணாகரன். அப்படிச் சொல்லி விட்டு ஜீப்பை விட்டு இறங்கினன். சிவசங்கரனும் இறங்கினர். இருவரும் பத்தடி தூரம் நடந்தார்கள். கருணாகரன் துப்பாக்கியை எடுத்த போது சிவசங்கரன் அவன் கையைப் பிடித்துக் கொண்டார்.

''கருணாகரன்! இந்த மான்களைக் கொல்ல வேண்டாம். இந்த சாதுப் பிராணிகளை எதற்காகக் கொல்லவேண்டும்?'' என்றார்.

பேச்சுக் குரல் மான் கூட்டத்துக்கு எட்டியிருக்க வேண்டும். ஒரு மான் ஒரு கணம் திரும்பிப் பார்த்து விட்டுப் பாய்ந்து ஓடத்தொடங்கியது. அவ்வளவு தான்; அத்தனை மான்களும் ஒரேபாய்ச்சலாகப் பாய்ந்து ஓடின. அவை துள்ளும் அழகைப் பார்த்துக் கொண்டே இருக்கலாமென்று தோன்றியது.

## அத்தியாயம் 24
# மனம் கசந்தது

இருவரும் மௌனமாகக் காருக்குத் திரும்பி வந்தனர். அப்துல்லா ஸாஹேப் அவர்களைப் பார்த்து, ''இவ்வளவு அருகில் இருந்த மிருகங்களை விட்டு விட்டீர்களே. ஒரு வேட்டுத் தீர்த்திருந்தாலாவது சமாதானமாக இருக்கும்'' என்றார்.

''சிவசங்கரன்தான் தடுத்து விட்டார். ரொம்ப அழகாக இருப்பதால் கொல்லக் கூடாதாம்'' என்றான் கருணாகரன்.

மறுபடியும் ஜீப் புறப்பட்டது. ''வேட்டைக்கு வந்து விட்டு இரக்கப்பட்டுக் கொண்டே இருந்தால் நமக்கு ஒரு பயனுமில்லை. புலியும், சிறுத்தையும் கூடத்தான் ரொம்ப அழகாக இருக்கின்றன. இறைவனுடைய படைப்பில் எல்லாமே ஒரு அழகுடன்தான் விளங்குகின்றன. மான் அழகாக இருக்கிறதே என்று, புலி அதைக் கொல்லாமல் இருக்கிறதா? காடுகளில் வாழ்வும், சாவும் சகஜம். அதைக் குறித்து நாம் வருந்திப் பயனில்லை. உலகநியதியே அப்படி'' என்று அப்துல்லா ஸாஹேப் கூறினார்.

சிவசங்கரன் அவருக்குப் பதில் ஏதும் சொல்லவில்லை.

வெகுதூரம் வரை குரங்குகளைத் தவிர எதுவும் காணப்படவில்லை. பிறகு தென்பட்ட ஓரிரண்டு மான்களும் ஓடிப் போய் விட்டன. எல்லாரும் மிகவும் களைத்துப் போய்ச் சாப்பிடுவதற்காகத் திரும்பப் பிரயாணிகள் விடுதிக்குச் சென்றனர்.

அங்கே இன்னொரு ஜீப் வந்திருந்தது. அதிலிருந்த சாமான்களை ஒரு ஆள் இறக்கிக் கொண்டிருந்தான்.

யார் வந்திருக்கிறார்கள் என்று சிவசங்கரன் யோசனை செய்து கொண்டிருக்கும்போதே ஒரு இளம் வாலிபன் பிரயாணிகள் விடுதியிலிருந்து வெளியே வந்து கொண்டிருந்தான்.

கருணாகரனின் முகம் 'ஜிவ்'வென்று சிவந்தது. ''இவன்தான் என் சித்தப்பா பிள்ளை அச்சுதன்'' என்று ரகசியமான குரலில் சிவசங்கரனிடம் கூறினன்.

கருணாகரனின் முகத்தைப் பார்க்க முடியவில்லை. அத்தனை நேரம் இருந்த கருணாகரனே வேறு, இப்போதுள்ள கருணாகரன் வேறு, என்று தோன்றியது. குரோதமும், ஆங்காரமும் கண்களில் போட்டியிட்டன.

ஆனல் அச்சுதன் மலர்ந்த முகத்துடன் காணப்பட்டான். அஹமத் வந்திருப்பதைப் பார்த்ததும் உருது பாஷையில் தன் சந்தோஷத்தைத் தெரிவித்துக் கொண்டான். அஹமத் சிவசங்கரனையும், தன் மாமனுரையும் அச்சுதனுக்கு அறிமுகம் செய்து வைத்தான்.

அச்சுதன் தன்னேடு வந்திருந்த இரு நண்பர்களையும், ''இவர்தான் பாலகோபால், இவர்தான் ராம்மோஹன்'' என்று அறிமுகம் செய்து வைத்தான்.

கருணாகரன் வேறு எங்கேயோ பார்த்துக்கொண்டு நிற்கவே, ''பாலகோபால்! அதோ நிற்பவர்தான் என் பெரியப்பாவின் மகன் கருணாகரன்'' என்று கூறினன் அச்சுதன்.

அச்சுதன் சாதாரணமாகப் பழகியது சிவசங்கரனுக்கு வியப்பை அளித்தது.

கருணாகரனின் மன நிலையை அறிந்திருந்த படியால் அவர் பேச்சை மாற்றினார்.

"சாப்பாட்டுக்குப் பிறகு நாங்கள் யானை மீது ஏறி வேட்டைக்குப் போகலாம் என்று தீர்மானித்திருக்கிறோம். நீங்களும் வருகிறீர்களா?" என்று கேட்டார் சிவசங்கரன்.

"ஆமாம்! அதற்காகத்தானே வந்திருக்கிறோம்?" என்றான் அச்சுதன்.

உணவருந்தி விட்டுச் சிவசங்கரனும் கருணாகரனும் வெளியே வந்தார்கள். அருகில் யாருமில்லாதபடியால் கருணாகரன், "இவர்களைப் பற்றி நன்றாகத் தெரிந்தும் ஏன் நம்மோடு வரச் சொல்லிக் கூப்பிட்டீர்கள்?" என்று கேட்டான்.

"நாம் அடர்ந்த காட்டுப்பிரதேசத்துக்குப் போகப் போகிறோம். சிறுத்தைகள் வரும் பாதைகளையெல்லாம் யானைப் பாகன் காட்டுவானாம். பத்துப் பேராகச் சேர்ந்து போனால் நல்லதுதானே? அசட்டுத்தனமான ஆபத்துக்களை நாம் விலைக்கு வாங்கிக் கொள்ளக் கூடாதல்லவா? ஜயந்தி, மாதவி இருவரையும் உத்தேசித்தாவது நாம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்" என்றார் சிவசங்கரன்.

"இருந்தாலும் என்னால் அவனோடு வர முடியாது. அவனைக் கண்டாலே எனக்கு ரத்தம் கொதிக்கிறது. மனம் கசந்து வழிகிறது" என்றான் கருணாகரன்.

"அப்படிச் சொல்வது தவறு, கருணாகரன்! வெறுப்பும், கசப்பும் நாமாக உண்டு பண்ணிக் கொள்வதுதானே! அச்சுதனிடமுள்ள விரோதத்தை நீ மறந்து விட வேண்டும்."

"நான் ஒரு நாளும் மறக்க முடியாது. எதற்காக மறக்க வேண்டும்? உங்களுக்கு அச்சுதனிடம் உறவு கொண்டாட வேண்டுமானால் நீங்கள் போய் விட்டு வாருங்கள். நான் திரும்பிப் போகிறேன்" என்றான் கருணாகரன்.

"நீ சொல்வது சரியல்ல. தயவு செய்து திரும்பிப் போகிறேனென்று சொல்லாதே. அவர்களை நான் நம்முடன் வரும்படி சொல்லி விட்டேன். இனிமேல் வேண்டாம் என்று சொன்னால் நன்றாக இருக்காது. நீ திரும்பிப் போனாலும் எனக்கு வருத்தமாயிருக்கும். உனக்காகத்தான் நான் இங்கு வந்தேன். நாம் இருவருமே திரும்பிப் போனாலும் நன்றாக இருக்காது. தயவு செய்து எனக்காக நீ இதைப் பொறுத்துக் கொள். யாருடனும் நீ பேச வேண்டாம். நீ வேட்டையாடுவதில் மும்முரமாக இரு" என்றார் சிவசங்கரன்.

கருணாகரன் மௌனமாக இருந்தான். அவனுக்கு யோசிக்க இடம் கொடுக்காமல், "சரி, வா போகலாம். யானை வந்து விடும்" என்று கூறிக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு போனார் சிவசங்கரன்.

இரண்டு யானைகளும் உடனே வந்து விட்டன. அச்சுதன், பாலகோபால், ராம்மோஹன் மூவரும் ஒரு யானையின் மீது ஏறி உட்கார்ந்து கொண்டார்கள். அச்சுதன், சிவசங்கரனைப் பார்த்து, "நீங்களும் இதிலேயே ஏறிக் கொள்ளலாமே?" என்றான்.

சிவசங்கரன் உடனே அதன் மீது ஏறி உட்கார்ந்து கொண்டார்.

இன்னொரு யானையின் மீது ஏணியில் ஏறிக் கொண்டிருந்த கருணாகரன் இதைப் பார்த்து விட்டு ஒரு கணம் திகைத்து நின்றான். பிறகு ஏறி யானையின் மீதுள்ள தேங்காய் நார் மெத்தையின் மீது தொப்பென்று உட்கார்ந்தான். யானை தன் உடலைச் சிலிர்த்துக் கொண்டது. யானைப் பாகன் அதைத் தட்டிக் கொடுத்தான்.

அஹமதும், அப்துல்லா சாஹேபும் ஏறிக் கொண்ட பிறகு, ராமன் நாயரும் துப்பாக்கியுடன் அவர்களோடு ஏறிக் கொண்டு விட்டார்.



யானைகள் இரண்டும், தூக்க முடியாத உடலைத் தூக்கிக் கொண்டு எழுந்தன. பிறகு கம்பீரமாக நடக்க ஆரம்பித்தன. யானை ஒவ்வொரு அடி வைக்கும் பொழுதும் அனைவருக்கும் உடல் ஆடியது. "இரவு உடம்பெல்லாம் வலிக்கப் போகிறது" என்றான் அச்சுதன்.

யானை மீது ஏறிக் கொஞ்ச நேரம் ஆவதற்குள்ளேயே சிவசங்கரனும், அச்சுதனும் நன்றாகப் பழகி விட்டார்கள். அச்சுதனின் நல்ல சுபாவம், சிவசங்கரனுக்குப் பிடித்திருந்தது.

"கருணாகரனுக்கு நீங்கள் எங்களுடன் ஏறிக் கொண்டது பிடிக்கவில்லை போல் இருக்கிறது. நான் உங்களைக் கூப்பிடாமல் இருந்திருக்கலாம்" என்று கூறினான் அச்சுதன்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. உங்கள் இருவருக்கும் விரோதமானால் அது

என்னை எப்படிப் பாதிக்கும்? எனக்கு உங்களைச் சந்தித்ததில் மிகுந்த மகிழ்ச்சி'' என்றார் சிவசங்கரன்.

''எனக்கு யாரிடமும் விரோதம் கிடையாது. விரோதம் பாராட்டுபவர்களிடம் என்ன செய்ய முடியும்?'' என்றான் அச்சுதன்.

''நாளடைவில் தானாகச் சரியாகி விடும்'' என்றார் சிவசங்கரன்.

அப்போது ராமன் நாயர் பின்னுலிருந்து ஏதோ சைகை செய்யவே எல்லாரும் அந்தத் திசையில் பார்த்தார்கள். சுமார் முந்நூறு கஜ தூரத்துக்கப்பால் காட்டு மரங்களின் இடையே இரண்டு மூன்று யானைத் துதிக்கைகள் தெரிந்தன. கூர்ந்து கவனித்த பிறகுதான் பல யானைகள் இருப்பது தெரிந்தது. நீளமான தந்தமுடைய ஒரு யானை உயரமான கிளையிலிருந்து தழையைப் பறித்துத் தின்று கொண்டிருந்தது.



அதன் பக்கத்திலும், பின்னுலும் பல பெண் யானைகள் நின்றன. ஒரு குட்டி யானை நடுவில் நின்று கொண்டிருந்தது.

''சுமார் இருபது யானைகளாவது இருக்கும்'' என்றான் அச்சுதன்.

ராமன் நாயர், 'பேச வேண்டாம்' என்று சைகை காட்டினர். பாலகோபால் அப்போது ஒரு சிகரெட்டைப் பற்ற வைக்கவே, அச்சுதன் அதைப் பிடுங்கி அணைத்தான். பிறகு அவன் காதில், ''யானைகளுக்கு முகரும் சக்தி அதிகம். வீட்டுக்குப் போய் எவ்வளவு சிகரெட் வேண்டுமானுலும் புகைத்துக் கொள். இங்கே வேண்டாம்'' என்றான்.

ஐந்து நிமிஷங்கள் யானைகளை நிறுத்தி, அந்தக் காட்டு யானைகளைப் பார்த்து விட்டுப் பிறகு மேலே சென்றார்கள்.

மறுபடியும் கொஞ்ச தூரத்துக்கப்பால் மான்கள் கூட்டம் கூட்டமாக மேய்ந்து கொண்டிருப்பதைக் கண்டார்கள். சிறுத்தைகளை மட்டும் வேட்டையாடுவதற்குச் சென்றபடியால் யாரும் துப்பாக்கியைத் தொடவில்லை.

''யானையின் மீது ஏறி ஒரு மணி நேரம் ஆகி விட்டது. ஒரு சிறுத்தையைக் கூடக் காணவில்லையே. இங்கே சிறுத்தைகளே கிடையாதோ என்னமோ?'' என்று சிவசங்கரன் அலுத்துக் கொண்டார்.

'''சிறுத்தை' என்று கூப்பிட்டால் எதிரே வந்து நிற்குமா? தேடித்தான் பார்க்க வேண்டும். நேரம்தான் ஆகும்'' என்றார் பாலகோபால்.

வெகு நேரம் சுற்றி அலைந்து விட்ட பிறகு ஒரு தண்ணீர்ப் பரப்பு எதிரே தெரிந்தது. அதன் அருகில் எல்லாரும் கீழே இறங்கினர்கள்.

ராமன் நாயர் அருகில் வந்து, ''இங்கே தான் எல்லா மிருகங்களும் தண்ணீர் குடிக்க வரும். மான்களும் இங்கே வருமாதலால் சிறுத்தைகள் மாலை வேளைகளில் புதருக்குள் பதுங்கிக் கொண்டிருக்கும். இங்கே நாம் சத்தம் போடாமல் இருந்தோமானுல் பல மிருகங்களைப் பார்க்கலாம்'' என்றார்.

''சிறுத்தைகள் நம்மையும் தண்ணீர் குடிக்க வந்த மான்கள் என்று நினைத்து விட்டால்..'' என்று ஒரு சந்தேகத்தைக் கிளப்பினன் அஹமத்.

''நாம் அவ்வளவு அழகாக இல்லை. நம்மையெல்லாம் பார்த்தால் சிறுத்தைகள் பயந்து ஓடி விடும்'' என்று அச்சுதன் சொல்லி விட்டு ஒரு மூங்கில் புதரின் மறைவில் நின்றுகொண்டான். எல்லாரும் மறைவிடம் பார்த்து நின்று கொண்டு தண்ணீர்க் கரையைப் பொறுமையுடன் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

பாலகோபால் வந்தது வரட்டுமென்று சிகரெட்டைப் புகைக்க ஆரம்பித்தான். ராம்மோஹன் ஒரு பிஸ்கட் பொட்டலத்தை எடுத்துப் பிரித்தான்.

அஹமத் தன்னுடைய பிளாஸ்கிலிருந்து காப்பியை எடுத்து மூடியில் விட்டுக் குடித்தான்.

பிரும்மாண்டமான காட்டெருமை ஒன்று எதிர்ப் பக்கத்தில் வந்து தண்ணீர் குடித்தது. சற்று நேரம் நின்று வாலை ஆட்டியது. பிறகு மெதுவாகக் காட்டுக்குள் புகுந்தது.

பிறகு கிட்டத்தட்ட நாற்பது மான்கள் கொண்ட ஒரு கூட்டம் வந்தது. எல்லா மான்களும் ஆவலுடன் தண்ணீர் பருகின. அதில் புள்ளியில்லாத ஒரு வகை மான்களும் இருந்தன. அப்போது இருட்ட ஆரம்பித்தது.

மான்கள் எல்லாம் திரும்பிச் சென்றன. திடீரென்று அக்கரையிலிருந்து பரிதாபகரமான ஓலக்குரல் கேட்டது. அதைக் கேட்டு அங்கிருந்தவர்கள் அனைவருக்குமே உடல் சிலிர்த்தது.

## உலகில் முதல் இடம்

கடல்கள், காடுகள், மலைகள், நதிகளைப் போல் பாலைவனங்களும் இயற்கையின் அற்புத சிருஷ்டிகளில் ஒன்றாகும். உலகத்தில் எத்தனையோ பாலைவனங்கள் இருக்கின்றன. ஆனால், ஆப்பிரிக்காவில் உள்ள ஸஹாரா பாலைவனம்தான் உலகத்தில் உள்ள பாலைவனங்களுக்குள் மிகப் பெரியது; பெரியது மாத்திரமல்ல, பயங்கரமானதும் கூட. முப்பத்தைந்து லக்ஷம் சதுரமைல் விஸ்தீரணமுள்ள ஸஹாரா மணற்பாங்கான வெறும் சமவெளி அல்ல. அதுவே ஒரு தனி உலகமாக விளங்குகிறது. ஸஹாராவில் மலைகள், பள்ளத்தாக்குகள், மணற் குன்றுகள்,



காடுகள், பூஞ்சோலைகள், விசித்திர மனிதர்கள், விந்தை மிருகங்களைக் காணலாம். ஸஹாரா மத்தியில் உள்ள ஆயிரக்கணக்கான சதுர மைல் பரப்புள்ள பிரதேசம் மாத்திரமே வெறும் மணல் வெளியாகும். யாரும் வசிக்க முடியாத கொடிய உஷ்ணப் பிரதேசமான அவ்விடத்தில் ஒரு வகை பயங்கரமான நாகப் பாம்புகள் மாத்திரமே வாழ்கின்றன. ஜ்வாலை கிளம்பும் அந்த மணல் பிரதேசத்தில் அந்த விஷப் பாம்புகள் மாத்திரம் எப்படி வாழ்கின்றன என்பது பெரும் விந்தையாக இருந்து வருகிறது.

---

ராமன் நாயர், "இது குரைக்கும் மானின் குரல் ஒலி. சிறுத்தை ஒன்று அதைத் துரத்துகிறது போலிருக்கிறது" என்றார்.

"நாம் அங்கே போக முடியாதா?" என்று கேட்டான் கருணாகரன்.

"இந்தச் சேற்றைத் தாண்டிப் போக முடியாது" என்றார் ராமன் நாயர்.

"சரி! இன்று நமக்கு அதிர்ஷ்டமில்லை. நாளை மறுபடியும் வரலாம்" என்று கூறிக் கொண்டே எல்லாரும் மறுபடியும் யானைகளின் மீது ஏறிக் கொண்டார்கள்.

பிரயாணிகள் விடுதியை அடைந்ததும் அனைவரும் நீராடி விட்டு வாசலில் நாற்காலிகளைப் போட்டுக் கொண்டு அமர்ந்தனர். கருணாகரனுக்கு மத்தியானமே சிவசங்கரன் தன்னை லட்சியம் செய்யாததில் அதிருப்தி ஏற்பட்டிருந்தது. இப்போதும் அவர் தன்னிடம் பேசாமல் அச்சுதனிடமும், அவனுடைய நண்பர்களிடமுமே அதிகமாகப் பேசியது. வேண்டுமென்றே தன்னை அலட்சியம் செய்வதாகப்பட்டது.

அஹமதையும், அவன் மனைவியையும் பற்றிக் கூறிப் பரிகாசம் செய்தார் சிவசங்கரன்.

"அவளை ஒன்றும் கட்டுப் பெட்டியாக அப்துல்லா ஸாஹெப் வளர்க்கவில்லை. அவள் பள்ளிக்கூடத்திலெல்லாம் படித்துக் கொண்டிருந்தாள். இந்த அஹமத்தான் அவளைப் பர்தாவுக்குள் தள்ளி விட்டான்" என்றான் அச்சுதன்.

பாலகோபால் அதற்குள், "உங்களுக்குத் தெரியுமல்லவா சிவசங்கரன். அஹமதின் குடும்பத்துக்கும், அப்துல்லா சாஹெபின் குடும்பத்துக்கும் வெகு நாட்களாக ஏதோ விரோதம் இருந்து வந்தது. ஆனால் ஸலீமா, இந்த அஹமதைத்தான் 'நிக்காஹ்' செய்து கொள்வேன்' என்று பிடிவாதம் பிடித்தாள். ஆகவே அவளுடைய அப்பா விட்டுக் கொடுத்து மணம்செய்து வைக்க வேண்டியதாயிற்று" என்று கூறினார்.

"ஆமாம்! அவர் பெருந்தன்மை உள்ளவர். அதே மாதிரி சிவசங்கரன் மூலமாக எங்கள் குடும்பத்து விரோதம்கூட நீங்கி விடுமென்று நம்புகிறேன்" என்றான் அச்சுதன்.

"எதைப் பற்றிச் சொல்கிறாய்?" என்று கேட்டான் ராம்மோஹன்.

"இது தெரியவில்லையா? சீக்கிரத்தில் சிவசங்கரன் எங்கள் வீட்டு மருமகனாகப் போகிறார்" என்றான் அச்சுதன்.

சிவசங்கரன் அதற்குப் பதிலாக, "விரோதங்களை மறந்து நட்புரிமை பாராட்டுவதுதான் பண்பு. நான் உங்களுக்கு உறவினன் ஆனாலும் ஆகாவிட்டாலும் உங்கள் குடும்பம் ஒன்று சேர்ந்து ஒற்றுமையாக இருந்தால் எனக்குச் சந்தோஷமாக இருக்கும்" என்றார்.

கருணாகரன் ஆத்திரத்துடன், "உங்களுக்குச் சந்தோஷம் அளிப்பதுதான் மற்றவர்களுக்கு வேலையோ?" என்றான்.

அச்சுதன் அதைப் பொருட்படுத்தாமல், "நீங்கள் எங்கள் வீட்டு மருமகனாவதைப் பற்றி என் தந்தை கூடப் பெருமை அடைந்திருக்கிறார். மாதவி அக்காவுக்கு மணமாகப் போவதில் எல்லாருமே சந்தோஷமடைந்திருக்கிறோம்" என்றான்.

"இப்படி யெல்லாம் வேஷம் போட்டுச் சிவசங்கரனை மயக்க வேண்டாம். நீங்கள் எங்களுக்கு இழைத்த அநீதியை எத்தனை ஜென்மம் எடுத்தாலும் என்னால் மறக்க முடியாது" என்று கூறி விட்டு எழுந்து உள்ளே சென்றான் கருணாகரன்.

மறுநாள் காலையில் கருணாகரனைப் பங்களாவில் காணவில்லை. **(தொடரும்)**

வியர்வை நாற்றங்களுக்கும் சாதாரண சரும நோய்களுக்கும் விஞ்ஞானம் தரும் புத்தம்புதிய பதில்...

# ஆக்டமர்

**இந்தியாவிலேயே ஓர் அழகுசாதன சோப்பில் இப்போது உள்ளது!**

*தினமும் ஒவ்வொரு முறையும் சருமத்துக்குப் பராமரிப்பு! ஆக்டமர் அடங்கியுள்ள காரணத்தால்தான் பிரீஸ் டாய்லெட் சோப் அத்தகைய பராமரிப்பை உங்களுக்கு அளிக்கிறது. மால்வாண்டேச கம்பெனியின் 'ஆக்டமர்' என்பது அதிநூதனமாக உருவாகியுள்ள ஓர் சருமக் கிருமிநாசினி—வியர்வை நாற்றம், முகப்பரு போன்ற பற்பல சாதாரண சரும நோய்களுக்குக் காரணமான, கண்ணுக்குப் புலப்படாத கிருமிகளையும் ஒழிக்கவல்லது. அமெரிக்க மெடிகல் அஸோஸியேஷனால் அதிகார பூர்வமாக அங்கீகரிக்கப்பட்டுள்ளது 'ஆக்டமர்'*

நறுமணமுள்ள பிரீஸ் டாய்லெட் சோப்பை நீங்கள் உபயோகித்துப் பார்ப்பதற்கு இதுவே உற்ற தருணம். தவறாமலும் இடையறாமலும் 3 வில்லைகள் மட்டும் உபயோகித்தாலே, கிருமிகளினின்று கிட்டத்தட்ட விடுதலை பெற்ற சருமம் உங்களுடையதாகிவிடும். வியர்வை நாற்றங்களினின்றும் சாதாரண சரும நோய்களினின்றும் அற்புதமான பாதுகாப்பு என்றால் அதுதான்!




**தனிச் சிறப்பு வாய்ந்த அழகுசாதனசோப் இதுவே. இதுவே பிரீஸ் சோப்!**

BT. 4-50 TM லண்டனிலுள்ள இராஸ்கிக் கம்பெனி லிமிடெட்டுக்காக இந்தியாவில் தயாரித்தது

விளையாட்டு மன்னர்கள். ௨





# கிரிக்கெட் கோபிநாத்

கூட்ச் கடற்கரையில் இங்கிலாந்திலிருந்து மாலுமிகள் வந்து இறங்கினார்கள். அவர்கள் தான் இந்தியாவின் கரையில் கிரிக்கெட் ஆட்டத்தை முதன் முதலில் 1725-ம் வருஷம் விளையாடி, இந்தியாவில் கிரிக்கெட் விளையாட்டுக்கு அங்குரார்ப்பணம் செய்வித்தனர். இன்று இந்தியாவில் அவ்விளையாட்டு பல்கிப் பெருகி வளர்ந்து, உலகமே கண்டு போற்றிப் புகழும்படியான அருமையான கிரிக்கெட் ஆட்டக்காரர்களைப் பெற்றிருக்கிறோம்.

சென்னையில் கிரிக்கெட் விளையாட்டு என்றால் அங்கே திரு கோபிநாத்தைப் பார்க்கலாம். சென்னை கிரிக்கெட் ஆட்டக்காரர்களுக்குத் தலைவராக விளங்கும் அவரது விளையாட்டிலே ஒரு தனிக் கவர்ச்சி இருப்பதைக் காணலாம். பந்தைக் காற்றாகப் பறக்கச் செய்து ஓட்டங்களை எண்ணிக் குவிப்பதில் அவர் தீரர். 'பீல்டிங்' செய்வதில் அசகாய சூரர்.



'கோபி' என்று சென்னை கிரிக்கெட் ரசிகர்கள் அன்போடு அழைக்கும் திரு கோபிநாத் சென்னையில் 1930ம் வருஷம் மார்ச் 1ந் தேதி பிறந்தார். அவர் தமது பதினெட்டாவது வயதில்தான் கிரிக்கெட் விளையாடத் தொடங்கினார். ஆனால் விளையாட ஆரம்பித்த குறுகிய காலத்துக்குள்ளேயே தேர்ந்த பயிற்சி பெற்று, வெளிநாட்டுக் கோஷ்டிக்கெதிராக ஆடும் அளவுக்கு முன்னேறி விட்டார்.

கிரிக்கெட் ஆட்டத்தில் நூறு ஓட்டங்கள் எடுப்பது என்பது அபூர்வம். ஆனால் திரு ஸி. டி. கோபிநாத்துக்கு 'நூறு' தண்ணீர் பட்டபாடுதான்! 1952ல் இங்கிலாந்துக்கும் 1954ல் பாகிஸ்தானுக்கும் போய் அருமையாக விளையாடியிருக்கிறார்.

திரு கோபிநாத் கிறிஸ்தியன் கல்லூரியில் பயின்று பி.எஸ்ஸி. வகுப்பில் தேறி, பிறகு மாகாணக் கல்லூரியில் சேர்ந்து எம். ஏ., பட்டமும் பெற்றிருக்கிறார். இவர் இப்பொழுது கார்டன் வுட்ராப் கம்பெனியில் 'மெர்க்கென்டைல் அசிஸ்டெண்டாக' பணியாற்றி வருகிறார். 1955-ம் வருஷம் பங்களூரில் மேஜர் ஜெனரல் ஏ. டி. லோகநாதனின் புதல்வியாரை மணந்தார். கோபிநாத்தின் அருமைத் திரு மனைவியார் கோமளா அவர்களுக்கு விளையாட்டுக் கலையில் மிகுந்த ஈடுபாடு உண்டு. அவர் டென்னிஸ் விளையாட்டில் நன்கு தேர்ந்தவர்.

பிறந்த ஊரில் பெருமையடைவதை விடப் பெண் எடுத்த ஊரில் அடையும் சிறப்பே மாப்பிள்ளைகள் பெரும் பாக்கியமாகக் கருதுவது வழக்கமல்லவா? திரு கோபிநாத் பங்களூரில் தெற்குப் பகுதி கிரிக்கெட் கோஷ்டிக்குத் தலைமை வகித்து நியூஸிலந்து கிரிக்கெட் கோஷ்டிக்கு எதிராக விளையாடினார். பங்களூரில் இந்திய கோஷ்டிக்குப் பெரும் தோல்வி ஏற்பட்டு விடும் நிலை. தம் கோஷ்டிக்கு அபகீர்த்தி நேர்ந்துவிடக் கூடாதே என்ற கவலை பங்களூர் மாப்பிள்ளைக்கு ஏற்பட்டு விட்டது. மிகுந்த ரோஷத்தோடு திரு கோபிநாத் அபாரமாக ஆடி, எதிர்க் கட்சியினரும் அயர்ந்து போகும்படி பந்துகளைப் பறக்கச் செய்து 175 ஓட்டங்கள் எடுத்தார். நியூஸிலந்து கோஷ்டித் தலைவரே, கோபிநாத்தின் பந்தடிக்கும் திறமையைக் கண்டு வியந்து பாராட்டினார். அந்தப் பந்தயத்தில் இந்தியா தோல்வி யுற்றாலும், திரு கோபிநாத்தின் இணையற்ற விளையாட்டு எல்லோருடைய உள்ளத்தையும் கவர்ந்து விட்டது. இதுவே அவரது கிரிக்கெட் சரித்திரத்திலே மறக்க முடியாத சம்பவம்.

"நம் நாட்டில் கிரிக்கெட் ஆட்டக்காரர்கள் பந்தை அடிப்பதிலும், பந்தை வீசுவதிலும் தான் கவனம் செலுத்துகிறார்கள். அவர்கள் 'பீல்டிங்' துறையிலும் அக்கறை செலுத்த வேண்டும்" என்று கோபிநாத் தமது பேச்சில் குறிப்பிட்டார். கிரிக்கெட் விளையாட்டில் மன்னராக விளங்கும் திரு கோபிநாத்திடம் நல்ல திறமை இருக்கிறது. இவரது திறமையை நன்கு பயன்படுத்தினால் தமிழ் நாட்டுக்குப் பெருமையைத் தேடித் தருவார்.

— குண்டுமணி.



























வாய்க்கால் கரையில் சைக்கிள் மேல் சாய்ந்தவாறு வயலைப் பார்த்து நின்று கொண்டிருந்தான் பண்ணையார் மகன் கிருஷ்ணன்.

''சின்ன ஐயா, எப்பொழுது வந்தீங்க?'' என்று பேசிக்கொண்டே வரப்பில் நெற்கதிர்களை இருபுறமும் கைகளினால் விலக்கியவாறு வந்துகொண் டிருந்தான் பண்ணையாள். பிறகு தொடர்ந்து கோபாலு, ''இப்பத்தான் பாருங்க, வடக்குத் தெரு நாயுடு பண்ணையாள் அருணாசலம் இல்லீங்க....அவனுங்க நாளைக்கு அறுக்கிற இந்த வயல்லே மாட்டை விட்டு அடிச்சான். 'ஏண்டா, படுவா!' என்று கேட்டேன். 'அட, என்னய்யா உன் வீட்டுச் சொத்து போயிட்டமாதிரி கத்தறயே! ஐயா சொத்திலே இந்த வாயில்லா ஜீவனும்தான் இரண்டு வாயிலே போட்டுக்கிட்டால் என்ன வந்துவிடும்!' என்று வார்த்தை வித்தியாசமா பேசினான்! அவன் இப்பொழுது ஒரு மாதிரித்தான் இருந்து கொண்டிருக்கிறான். நானும் கவனிச்கட்டுத்தான் வரேன்'' என்றான்.

''அது கிடக்குடா, தொலையுது. இன்னொரு சமாசாரம்னு! பெரிய ஐயா எம். எல். ஏ. ஆகப் போகிறாரு, தெரியுமா கோபாலு?''

''அப்படிங்களா! ஏனுங்க, நம்ம ஐயாதான் எம். ஏ. ஆச்சுதுங்களே! எம். எல். ஏ.க்கு இன்னும் பெரிய பரீட்சை கொடுக்கணுங்களா?'' என்று கேட்டான் கோபாலு.

கிருஷ்ணனுக்குக் குபீர் என்று சிரிப்பு வந்தது. ஆனால் பள்ளம் நாற்றங்காலிலிருந்து, சிவன் கோவில் புஷ்கரணி வரை கிருஷ்ணன் கோபாலுக்குத் தேர்தலைப் பற்றி விவரமாகச் சொல்லிக் கொண்டே வந்தான். கோபாலுக்குக் கேட்கக் கேட்க வியப்புத் தாங்கவில்லை. ஆயிரம் கேள்விகள் கேட்டு, சந்தேகங்களையும் நீக்கிக் கொண்டான். இருந்தாலும், பெரிய பெரிய படிப்பு படித்தவர்களுடைய வோட்டையும், தன்னுடைய வோட்டையும் ஒரேமாதிரி — எல்லாவற்றையும் ஒன்றாகத்தான் கணக்குப் பண்ணிக் கூட்டுவாங்க என்பது மாத்திரம்தான் உடனே அவனுக்கு நம்பும்படியாக இல்லை.

'' ஓகோ, மேலத்தெரு நாயுடு நம்ப ஐயாவுக்கு எதிராகவா நிற்கிறாங்க. அதுதான் அந்தப் படுவாப் பயல் என் மச்சான் அருணாசலம் ஒரு மாதிரி, திரிகிறான்'' என்று முடிவு கட்டினான் கோபாலு.

* * *

ஆரம்பத்தில் அவ்வளவு அசுவாரஸ்யமாகக் காணப்பட்ட தேர்தல் விஷயம் இத்தனை சுவாரஸ்யமாக இப்போது தோன்றும் என்று அப்போது சிறிதும் எதிர்பார்க்கவே யில்லை கோபாலு.

இன்னும் தேர்தலுக்கு ஒரு மாதம்தான் இருந்தது!

கோபாலுவுக்குச் சரியான வேலை. பண்ணையாருக்குத்தான் ஆகட்டும், சின்ன ஐயா கிருஷ்ணனுக்கும் ஆகட்டும், நிம்மதியாக ஒரு இரவு தூக்கம் கிடையாது.

அன்று இரவு கோபாலு தெருவுக்குத் திரும்பி வரும்போது, கச்சேரியில் சரியாகப் பன்னிரண்டு அடித்து விட்டது. ''இந்தச் சிறு பசங்கதான் என்ன தொந்தரவு கொடுத்துட்டாங்க. பாவிப்பய மவனுவ வள்ளிசா ஒரு வெள்ளி ரூபாய்க்கு ஒரு அணா குறையக்கூட வாங்க மாட்டேனுட்டாங்களே. நாளைக்கு நம்ப தெரு பயல்கள் இரண்டுபேரை வைச்சுத்தான் குடியானத்தெருவுக்கு நோட்டீசு ஒட்டச் சொல்லணும்'' என்று திட்டம் வகுத்துக் கொண்டிருந்தது அவன் மனம்.

'' அப்பா! உன் மருமகனுக்குக் கொஞ்சம் குரல் கொடு...'' என்று கோபாலு சொன்னவுடனேயே, நிலவொளியினின்றும், மறைந்து நின்ற கோபாலுவின் மனைவி 'கணக்கு' கட்டியின் பின் வந்து நின்றாள். தரையில் பழந்துணிமேல் 'ராஜாக் கணக்காக'ப் படுத்துக் கொண்டிருந்த புருஷனைப் பார்க்கப் பெருமை தாங்க முடியவில்லை அவளுக்கு. 'சும்மா நாள் முழுதும் ஒருத்தொருத்தர் மாதிரி உழவிலே ஏர் பிடிக்கிறவனா கோபாலு? எசமானுடன் கூட நின்று அல்லவா ஒத்தாசை செய்கிறான். துரையாங்காட்டியும் வெள்ளை வேட்டி பனியன் போட்டிருக்கிறான்!'

'' ஏய்! இந்தா..இந்த வேஷ்டியை நீலச் சவுக்காரம் போட்டுத் துவைத்துக் காய



லை. வெள்ளி முளைத்த இரண்டாவது நாழி நான் கும்மாளம் தெருவிலே இருக்கனும்.. ஆ...மாம்!''

'' ஏங்க, இப்படிக் கும்மாளம்?''—கேள்வி முடியு முன்பே பதில் வந்து விட்டது.

'' அட, இது ஏன் வேண்டாத விவகாரம், உனக்குச் சொன்னால் செய்கிறயா? இதெல்லாம் உனக்கு ஒண்ணும் பிடிபடாது. இந்தா, இப்படி வா. ஆமாம். விளக்கு வைப்பதற்கு முன்னே உங்கள் அண்ணச்சி இந்தப் பக்கம் வந்ததா?'' என்று கேட்டான். குரல் தணிந்திருந்தது. அண்டை, அசலுக்குத் தெரியக் கூடாதோ என்னவோ!

'' ஆமாங்க, நான் சொல்ல மறந்துட்டேனுங்க. அவரு எசமான் கூட இல்லே,

# நியாயம்

வசிஷ்டன்



நம்ம ஐயா மாதிரி தேர்தலுக்கு நிற்கிறாங்களாம். கதை கதையாய்ச் சொல்லிச்சு!''

''நிறுத்து. நீ உன்பாட்டுக்கு..''

ஒரு நிமிஷம், ஒரே நிமிஷம் வாய் மௌனமாக நின்றது. மனத்தில் நிரடி நின்ற எண்ணம் பொத்துக் கொண்டு வந்து விட்டது.

'' இதைக் கேட்டு முடிஞ்சு வைச்சுக்க. நானே அந்தப் பயல் இந்த வீட்டை மிதிச்சான்னு, கண்டிசனு சொல்லிவிடு, இந்தப் பக்கம் வர வேணாம்னு. இவுங்க ஜெயிக்கிறதை நான் பார்த்துட்டு உட்கார்ந்திருப்பேனுல்ல!...''

தன்னை மீறி அவன் பெரிய மனிதனாக மாறி விட்டான் என்றுதான் தோன்றியது கணக்குக்கு. அப்படி இருந்தாலும், இந்த அருணாசலத்தோடு என்ன சண்டை, எதற்கு என்பது அவளுக்குச் சரியாக விளங்க வில்லே. 'புருஷர்கள் வியவகாரம் நாமேன் தலையிட வேணும்' என்றிருந்து விட்டாள். இதில் குறுக்கே கேட்கவும் பயம்!

நிலா காய்ந்து கொண்டிருந்தது. தெருவே தூக்கத்தில் ஆழ்ந்து விட்டது. ஏதோ நிலத்தில் வாய் வைத்துவிட்ட ஊர் மாட்டைத் தலையாரி விரட்டும் சத்தம் தூரத்தில் கேட்டது. பக்கத்துக் குட்டையில் தவளைகள் குதித்து. 'சளக், சளக்' என்ற ஓசையை உண்டாக்கின. போர் போட்டிருந்த சம்பா வைக்கோலின் மணம் காற்றில் கலந்து வந்தது. பிரும்மாண்டமாக வளர்ந்திருந்த புளிய மரத்திலிருந்து சிறு சிறு இலைச் சருகுகள் மேலே உதிர்ந்தன.

'' என்னங்க ... இன்னும் உறங்கவில்லே?'' என்று கணக்கு கேட்டாள் புருசன் சோம்பல் முறிப்பதைப் பார்த்து.

'' ஹா....ஆ...ங்...?' என்று கொட்டாவி பதிலாக வந்தது. தூக்கம் அவனுக்கு நன்றாகக் கலந்து விட்டது.

உலகத்திலேயே விழித்துக் கொண்டிருக்கும் மனிதர்கள் தாம் இரண்டு பேர்கள்தான் என்று நினைத்தாள் கணக்கு. சூடு ஆறி இருக்

கும் கணவனிடம் மெதுவாகப் பேச்சுக் கொடுத்தாள்.

"இந்தத்தெருதல்லே நம்மஐயாவே செயிச்சுட்டாங்கன்னு வைச்சுக்குங்க...."

கோபமே வந்துவிட்டது கோபாலுவுக்கு.

"அட, வைச்சுக்கறது என்ன! முதலைதோற்றுக்கூடப் போயிடுமா? அந்த ஆட்டை இந்த முதலை ஒரே அடியாக அடிக்குதா இல்லையா பாரேன்!" என்றான். தொடர்ந்து பேசினான்: "இப்பொழுதே பாரு என்ன செலவழியுது பணம் ஆற்றுத் தண்ணீர் கணக்கா...ஆ... பணம்னு பேச்சு வர்றப்போ தான் நினைப்பு வருது. காலையிலே எட்டுமணிக்கு 'இந்தாடா, இன்றையச் செலவுக்கு' என்று ஐயா ஒரு பத்து ரூபாய் நோட்டு தந்தாங்க. — பத்து அணா மிச்சம் வைச்சிருக்கேன் இந்நேரம்... உம்...! பார்த்துக்க. எடுத்து உள்ளேவை...!"

இந்தப் 'பிரசங்கம்' கேட்டதற்குக் கண்ணைச் சுழற்றிக் கொண்டு உறக்கம் வந்ததுதான் கணக்கு கண்ட பலன். குடிசைக்குள் நுழையப் போனவள் திரும்பினாள். ஏதோ ஞாபகம் வந்து, "நம்ம நரிப் பள்ளத்துக்கு எப்பொழுது அறுப்பு விடப் போறீங்க? அண்டை நிலமெல்லாம் அறுத்தாச்சு. நம்ம குண்டுதான் தனியாக நிற்குது" என்றாள்.

"அதற்கெல்லாம் இப்பொழுது மூச்சு விட நேரமில்லை. நீ ஒண்ணு செய். நாளை இல்லே மறு நாள் விடியு முன்னே அறுப்புக்குப் பத்து ஆட்களை விட்டுவிடு. மாலையில் கண்டு முதலுக்கு ஐயாவோட நானும் ஓடியாந்துடறேன். அப்படியே நான் வரவில்லைன்னு, நீ முடிச்சுடு. கவனம் வைச்சுக்க."

அலுப்பு கண்ணைச் சுற்றிச் சுற்றி வந்தது. அரைத் தூக்கத்தில், பண்ணையார் வில் வண்டியில் உள்ளே உட்கார்ந்திருக்கத் தான் ஓட்டும் காட்சி மனத்திரையில் பளிச்சிட்டது. களத்திலே ஆளெல்லாம் சும்மா மூக்கிலே விரல் வைக்க வேண்டாமா?

'முதலை ஆட்டை விழுங்கிற்று. ஓடோடி வருகிறார் பண்ணையார் கோபாலுவிடம். அப்படியே கட்டிக்கொண்டு சொல்கிறார், முதலைச் சின்னத்தின் வெற்றியை. பண்ணையார் ஸ்பரிசம் மயிர்க்கூச்சல் எடுத்தது...'

இடுக்கிட்டு விழித்தான் கோபாலு. புளியம்பழம் ஒன்று 'டொக்'கென்று தலைப் பொட்டில் வந்து விழுந்தது. ஆத்திரமாக வந்தது. புளியம் பழத்தைக் கையில் எடுத்துத் தரையில் ஓங்கி அடித்தான்.

வலிதான் கோபாலுக்குச் சொந்தம். காலையில் சேரி புளியமரக் குத்தகை எடுத்திருக்கும் நாட்டாண்மைக்காரன் பழத்தைப் பொறுக்கிக் கொண்டு போய் விடுவான். போதாதற்கு மரம் வீட்டுக்குள்ளும் நுழையப் பார்த்தது. இன்னும் சில நாட்களில் இந்த இழவு புளியமரம் வீட்டின் அஸ்திவாரத்தையே யல்லவா பெயர்த்து விடும்!

திரும்பவும் தேர்தல் நினைவுகள் அவன் கண் முன் வந்து நின்றன. அவை கண்ணில் விழுந்ததுதானே அங்கிருந்த தூக்கத்தையே விரட்டி விட்டன.

'மந்திரியானால் ஐயா என்ன வேலை போட்டுத் தருவாங்களோ நமக்கு! அட, இழவு ஒரு நாலு எழுத்துப் படிச்ச வெச்சிருந்தோம்னு ஒரு கலெக்டர் உத்தியோகத்திலே யாவது இழுத்து விடமாட்டாரு. அதற்கு இப்ப வழி இல்லை. மந்திரிக்குச் சேவகன் உத்தியோகம் நமக்குத்தான்! பெரிய மனுசங்களெல்லாம் என்னிடம் உத்தரவு வாங்கிக் கொண்டுதானே உள்ளே போகலாம்!'

முடிவில்லாமல் ஓடின சிந்தனைகள். உடலின் கட்டளைக்கு மனம் படிய மறுத்தது. 'தூங்க மாட்டேன்' என்று பிடிவாதம் பிடித்தது.

கும்பகோணம் போய் விட்டு வண்டி திரும்பி வந்து கொண்டிருந்தது. பண்ணையில் வண்டியில் தெற்கத்தி ஜோடியைப் பூட்டி, ஓட்டிக் கொண்டிருந்தான் கோபாலு. உள்ளே பண்ணையார் உட்கார்ந்திருந்தார். இதுவரை இந்த வண்டியைத் தொட்டுப் பார்த்ததுகூட இல்லை கோபாலு. இப்போது வண்டியில் பண்ணையாரையே வைத்து ஓட்டும் பாக்கியம் அல்லவா கிட்டி இருக்கிறது! பெருமிதம் பொங்கி வழிந்து கொண்டிருந்தது முகத்தில். இந்தக் காட்சியைத் தெரிந்த முகங்கள் பார்க்காதா என்று அவன் கண்கள் அலைபாய்ந்தன.

கோபாலுவின் மனம் நன்றியால் நிறைந்தது. கண்கண்ட தெய்வம் மிக அருகில் உட்கார்ந்திருந்தது. 'வெற்றிலை, புகையிலைக்குக் குறைச்சல் உண்டா! இந்தக் காலத்துலே இவருமாதிரி யாரு இருக்காங்க! பாவம் எத்தனை கூட்டங்கள் பேசி யிருப்பாரு? எத்தனை காசு, பணம் செலவழித்திருப்பாரு?'

"ஏண்டா கோபால், என்ன பேசவே காணோம். அசதியா?" பண்ணையாரின் குரல் கோபாலுவைத் தட்டி எழுப்பியது.

'அசதிங்களா? எனக்கா? நல்ல வேலை போங்க. நீங்கள் எத்தனை சிரமப்பட்டிருக்கீங்க. நான் செய்யிறது ஒரு சிரமத்தோட சேர்த்தீங்களா?"

'ஆமாம், உன் தெருவிலே எல்லாரிடமும் சொல்லி விட்டாயா! நமக்குத்தானே போடறேன்னுங்க?"என்று கேட்டார் பண்ணையார்.

'உங்களுக்கு அது விஷயமா கொஞ்சம் சம்சயமும் வேண்டாமுங்க. ஒரு வீடு, ஒரு ஆளு விடாமல் சொல்லிக் கட்டுப்பாடு செய்துட்டேனுங்க! பிறகு என்ன?"

"என்னடா கட்டுப்பாடு, நமக்குப் போடறேன்னு சொல்லி, ஆட்டுப் பெட்டியிலே போட்டாங்கன்னு!" என்றார் பண்ணையார்.

கோபாலு ஒரு வேகத்துடன் பேசினான்.

"போடுவாங்களா, பாவிப்பய மவன்க. நாயுடுவுக்குப் போட்டுட்டு மாரியாத்தாவுக்கு எதிரா பொய் சொல்லிடுவாங்களா? அவர்களைத் தெருவிலே சேர்க்காமல், கட்டுப்பாடா விசாரிச்சு, தெருவை விட்டு விரட்டிவிடுவேனுங்க..'

ஆவேசமே வந்துவிட்டது அவனுக்கு.

"பாருங்க! சொல்லக்கூட வெட்கமா இருக்குது. நாயுடு பண்ணையிலே இருக்கிறானே, அருணாசலம்னு ஒரு பயல். அவன் என் சொந்த மச்சானுங்க. அவன் நமக்கு எதிரா ஊர் ஜனங்க மனசைக் குளப்பறான். நான் கண்டிக்கப் பார்த்தேன். சுகமில்லை. அவனிடம் நான் பேச்சு வார்த்தையை நிறுத்தி விட்டேனுங்க."

பண்ணையார் ஏனோ இதற்குப் பின் பேசவில்லை. மௌனமாக உட்கார்ந்திருந்தார்.



ஒரு தரம் மை நிரப்பியபின் பைலட் பேனா, கசிவில்லாமலும், பிளாட்டிங் ஒத்த வேண்டிய அவசியமில்லாமலும், மை ஓட்டம் தடைபடாமலும் முழுத்தாளில் நாற்பது பக்கங்கள் அநாயாசமாக எழுதிற்று. பைலட் பேனா உங்களுக்கு எப்பொழுதும் சிறந்த சேவையளிக்கும் என்பதற்கு ஒரு தக்க அத்தாட்சி!

# பைலட் பேனாவின் அற்புத தரத்திற்கு ஒரு தக்க சான்று!




மிகக் குறைந்த விலையுள்ள பைலட் பேனாவின் உயர்தரம் அற்புதமான பரீட்சைகளின் மூலம் நிரூபிக்கப்பட்டுள்ளது. பைலட் பேனாவில மை நிறையக் கொள்ளுவதோடு, உப்புத்தாள்மீது எழுதினும் கூடவோ அல்லது மிருதுவான ஒரு மரப்பலகையைக் குத்திபிளக்கினும் கூடவோ, அதன் உறுதியான நிப்பிற்கு யாதொரு சேதமும் விளையாது! மற்றும் இந்தப் பேனா ஒழுகாது என்பதற்கு உத்திரவாதம் உள்ளது!

எவ்வளவு கடின உபயோகத்திலும்கூட, எழுத்தின் வடிவு குலையாமல், சொகுசாக எழுதும் தன்மையே பைலட் பேனா பெற்றுள்ள தனி மதிப்பிற்குக் காரணம். பைலட் பேனாக்கள் விலை ரூ. 4/8லிருந்து ரூ. 27/- வரையில் பல்வேறு மாடல்களில் உள்ளன. ஒவ்வொரு மாடலும் நீங்கள் கொடுக்கும் பணத்திற்குச் சிறந்த பெறுமானம் அளிக்கும். உங்களுக்குப் பிடித்தமான மாடல் ஒன்றைத் தேர்ந்தெடுங்கள்!




சிறந்த முறையில் நீடித்த உழைப்பிற்கு
**பைலட்** பேனாவை வாங்குங்கள்

*பைலட் பேனாவிற்குகந்தது பைலட் மையே*

தி பைலட் பென் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
கத்தோலிக் சென்டர், ஆர்மீனியன் தெரு, மதராஸ் 1

விற்பனை மற்றும் ரிப்பேர் செய்பவர்கள்: ஜெம் அண்ட் கம்பெனி
525/526, நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் ரோடு, மதராஸ் 1

டிரேட் (P) மார்க்

“டேய், ஏண்டா சின்னப் பயலே, எங்கேடா கணக்கு? களத்துலே அப்படியே போட்டுட்டு நண்டு பிடிக்கப் போயிட்டாங்களோ? என்னடா அநியாயமாயிருக்கு. ஐயா, வந்து நாலு நாழியாச்சு..'' என்று கோபாலு இரைச்சல் போட்ட பின்புதான் கணக்கு ஓடி வந்தான். தான் வண்டியோட்டி வரும் பிரதாபத்தை அவன் பார்க்காத வயிற்றெரிச்சல் அதில் தெரிந்தது.

கோட்டான் குண்டு பதினைலுதான் கண்டிருந்தது. இதுவரை பதினெட்டுக்கு மணி குறைந்ததில்லே. சரியான கவனிப்பு இல்லாமல் ஆழும், பாழுமாகப் போய் விட்டதாகக் கணக்கு சொன்னான். கண்டு முதலே அங்கேயே வியாபாரிக்குப் போடச் சொல்லி விட்டார் பண்ணையார். கோபாலு, களத்தில் மணி இல்லாமல் கூட்டச் செய்து அவ்வளவையும் அளந்து விட்டான்.

'' ஏண்டா, வாரம் எடுத்துக்க வில்லையா ?'' என்று கேட்டார் பண்ணையார்.

'அதெல்லாம் இப்ப ஒண்ணும் வேணுங்க... குருவையிலே பார்த்துக்கலாம். எங்கே ஓடிப் போகுது...நாம் பணத்துக்குப் படுகிற கஷ்டம் நமக்கல்ல தெரியும்!''

இந்தக் களத்தில் முன்பு குறுணி நெல்லுக்குப் பிசிறிக் கொண்டு நின்ற நாட்கள் மனத்தில் தோன்றி மறைந்தன.

''ஆச்சுங்க, அடுத்த வாரம் புதன் கிழமை நம்ப நாயுடு வண்டவாளம் வெளுத்து விடும். இல்லீங்களா ?'' என்று கேட்டான் கோபாலு வண்டியை ஓட்டிக் கொண்டே.

அன்றும் கோபாலு தெருவுக்குத் திரும்பும் போது மணி பதினொன்றுக்கு மேலாகி விட்டது. 'எலெக்ஷன் ஆபீஸ்' இன்னும் மூடக் கூட இல்லே. சின்ன ஐயாவும், ஏஜெண்டுகளும் கணக்கு பார்த்துக் கொண்டிருந்தார்கள். கோபாலு அவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு வந்துவிட்டான்.

கணக்கு காத்திருந்தவள் மாதிரி 'மொணு மொணு' வென்று சண்டைக்கு வந்து விட்டாள். அவளுக்கு மாலையில் களத்திலே ஏதும் கிடைக்காதது பற்றி மிகவும் வருத்தம். பெரிய சீமான் மாதிரி அங்கே அவள் புருஷன் நடந்து கொண்டது அவளுக்குக் கட்டோடு பிடிக்கவில்லே.

'உன் உபத்திரவம் பிடிச்ச புராணத்தை ஆரம்பிச்சுட்டியா...இந்தா கணக்கு உனக்கு ஏதும் நிலவரம் பிடிபடுதா? உலகத்திலே எத்தனே சமாசாரம் தினம் நடக்குது. ஏதாவது உனக்குத் தெரியுமா? நாங்க நாலு நாளா கதறு கதறுன்னு கதறுகிறோம். இங்கே பாரு... இன்றையத் தேதி வரைக்கும் என்ன செலவழிஞ்சிருக்கு! என்னமாவது விவரம் தெரிந்து பேசுகிறீயா? மூணு ஆயிரமும், எண்ணூறும் சொச்சம். இன்னும் 'டவுன் நோட்டீஸ் அடிச்சவருக்குக் கொடுக்கணும். கியாஸ் லேட்டுக்குக் கொடுக்கணும்.''

இதைக் கேட்டுக்கொண்டு நிற்க அவளுக்குப் பிடிக்கவில்லே. ''என்னமோ சட்டமாம், ஒவ்வொருத்தர் அப்படியே அள்ளிட்டு வருகிறாங்க. நீங்களும் உங்க எலெக்ஷனும்'' என்று முணு முணுத்துக் கொண்டே போய்விட்டாள்.

கோபாலும் இந்த நெருக்கடியில் விட்டுப் பிடிப்பதுதான் சரி என்று 'கம்'மென்று இருந்து விட்டான். கிழவர் 'லொக், லொக்' என்று இருமிக்கொண்டே வெளியில் வந்தார்.

கோபாலுக்குத் தேர்தல் ஜுரம் ஏற ஏற, அவன் தகப்பனுக்கும் அவன் உடல் ஜுரம் ஏறிக் கொண்டிருந்தது. எப்பொழுதும் சாக்கைப் போர்த்திக் கொண்டு மூலேயில் விழுந்து கிடந்தான்.

கோபாலுக்கு ஒரே அலுப்பு, அசதி. கிழவனின் கேள்வி எரிச்சலாக இருந்தது. நிலத்தில் விளைந்த நெல்லேப் பற்றி விசாரித்தான் கிழவன். '' என்ன கண்டால் என்ன உனக்கு? தங்கம் பாளம் பாளமா கண்டிக்க போறேன். நிலத்தை நீதான் கட்டிண்டு அழுணும்'' என்று கத்தினான்.



''டேய் தம்பி, ஆயிரம் வந்தாலும் அப்படிச் சொல்லாதேடா, பூமா தேவியை.'' கிழவனுக்குத் தொண்டையை அடைத்தது துக்கம். மகன் எங்கோ கண்ணுக்குத் தெரியாத கஷ்டத்தில் மாட்டிக் கொண்டு விழிப்பது மாதிரி ஒரு பிரமை.

மேலேயிருந்து காய்ந்த புளியங்குச்சி ஒன்று விழுந்தது. கோபாலு பழைய நிலேமைக்கு வந்தான். அநாவசியமாக மனேவியையும், தகப்பனேயும் இரைந்தது வருத்தமாக இருந்தது. இப்போது. எல்லாம் இன்னும் இரண்டு நாள்! மந்திரி 'சேவகனு'னல் எந்த ஊருக்கு மூட்டை கட்ட வேண்டுமோ !

மெதுவாகத் தகப்பனிடம் பேச்சுக் கொடுத்தான். ''ஒரு சேதி, இந்த மரம் இருப்பது மகா உபத்திரவமா யிருக்கு, வெட்டிப் போடணும்னு ஐயா கைப்பட ஒரு மனு எழுதி இன்றைக்கு ஆபீசிலே கொடுத்தாச்சு. நாளேக்கு ஆட்கள் வந்துவிடுவாங்க, மரத்தை வெட்ட'' என்றான்.

கிழவனுக்கு அதற்குள் மகன் சுமுகமாகப் பேசுவது சிறிது இதமாக இருந்தது.

''ஏண்டா தம்பி, இதை நாம்தான் வெட்டிப் போட்டால் என்ன? ஏதும் குற்றமோ?'' என்று கேட்டான் கிழவன்.

'நல்ல வேலேயாச்சே ! நம்பர் போட்ட மரம் சர்க்காரைச்சேர்ந்தது. நமக்கேன் வம்பு! மனு எழுதிக் கொடுத்து 'வெட்டுடா'ன்னு

வெட்டரான். நாம்ப பார்த்து மந்திரியாக் கினவங்கதானே சர்க்காரு!'' இது அவர்பிரசங் கத்திலிருந்து கோபாலு தெரிந்து கொண்டது. கிழவனுக்கும் ரொம்பப் பெருமையாக இருந்தது. 'பின்னே என்ன? தன் பிள்ளை பார்த்து, வோட்டுப் போட்டு, ஒரு ஆளை மந்திரியாக இருக்கச் சொல்றதுன்னா...!'

இன்றுதான் புதன்கிழமை. கோபாலு வின் வாழ்க்கையில் இவ்வளவு முக்கியமான நாள் இதுவரையில் வந்ததில்லை, இனி வரப் போவதும் நிச்சயமில்லை. இன்று பத்து மணிக் குத் தேர்தல் 'ரிஸல்ட்' தெரிந்து விடும்!

ஆனால், சரியாக இந்த நேரம் பார்த்துத் தானா சனியன் பிடிச்ச கிழத்துக்கு இழுப்பு வரணும்! டவுனில் இருக்கவேண்டிய இந்தச் சமயத்தில், கிழவனின் தலைமாட்டில் கோபாலு குந்திட்டு உட்கார்ந்திருக்க வேண்டும் என்று விதி போலும்!

''சரியாக, பத்து மணிக்குள்ளே இதன் முடிவு தெரிந்து விடும் போலேயிருக்கே!'' கோபாலுவின் வாயிலிருந்து கிளம்பிற்று அலுப்புடன்கூடிய செயற்கைச் சிரிப்பு. ஆனால், யாரும் ரசித்ததாகத் தெரியவில்லை.

மேய்ச்சலுக்குப்போன மாடுகள் மத்தியான வேளைக்குத் திரும்பி வந்துவிட்டன. உச்சந் தலை வெயில் உள்ளங்காலில் விழுந்தது. மணி பன்னிரண்டு இருக்கும்.

கிழவனுக்கு அதே நிலை! இன்னும் இரண்டு நாழிகை நேரம் இப்படியே உட்கார்ந் திருந்தால் கோபாலுவின் தலை நிச்சயம் வெடித்து விடும். கணக்கிடம் பண்ணை யாரைப் பார்த்து விட்டு, அப்படியே வைத்தி யரையும் பார்த்து வருவதாகக் கூறிக் கிளம் பினான். 'வைத்தியரைப் பார்த்து ஒரு வார்த்தை' என்ற வார்த்தை கூடி இருந்த தெருவோருக்காகச் சொன்ன வார்த்தை.

தலை தெறிக்கப் பண்ணையார் வீட்டை நோக்கி ஓடினான். பண்ணை வீட்டு வாசலில் பந்தலின் கீழ் பத்து, பன்னிரண்டு பேர்கள் நின்று கொண்டிருந்தார்கள். எல்லோருடைய முகத்திலும் ஒரே மகிழ்ச்சி. கோபாலு வெற்றி கிடைத்துவிட்டதாகவேமகிழ்ந்தான்.

'முதலை முதலைதான்!'

''ஐயய்யோவ்...!'

அருகில் நெருங்கிய போது தான் கோபாலுக்குத் தெரிந்தது. கூட உட்கார்ந் திருப்பது யார்? சந்தேகமே இல்லை, நாயுடு தான்! அவர் எதற்கு வந்தார்?

வாயிலிருந்து வெற்றிலைச் சாறு வழிய, தொந்தியில் சந்தனத்தை அப்பிக் கொண்டு ஆனந்தமாக அமர்ந்திருந்தார் பண்ணையார்.

அருகில் கோபாலுவைப் பார்த்தவுடன், ''டேய், பயலே கோபாலுவாடா, நீ நம்ப ளோட பேசமாட்டாயே, இந்தாடா பிடி'' என்றார் நாயுடு. வெற்றிலைக்குள்ளிருந்த ரூபாய் நாணயம் நிலத்தில் விழுந்து வேக மாக உருண்டோடியது.

கோபாலுவின் முகம் பேயறைந்தாற்போல் மாறிற்று. நாயுடுவின் குரல் பிரளய காலச் சத்தம் மாதிரி காதில் ஆயிரம் மடங்காகக் கேட்டது. காலடியில் இருந்த பூமி பூகம்பத் தில் ஆடுவது போன்று ஆடிற்று. இருதயம் ஓராயிரம் முறை அடித்துக் கொண்டது.

என்ன ஏமாற்றம்? பட்டதெல்லாம் வீண்:

தன்னைச் சுதாரித்துக் கொள்ளச் சிறிது நேரமாகியது கோபாலுக்கு. கடைசியில் ஏமாற்றி விட்டார்கள் தெரு ஜனங்கள். நியாயத்தை, கொடுத்த வார்த்தையைக் காற்றில் பறக்க விட்டு விட்டு அவர்கள் ஆட்டுக்கு வோட்டைப் போட்டு விட்டார்கள் என்று முடிவு செய்தான்.

''வர்றேனுங்க'' என்ற ஒரே வார்த்தை யுடன் அந்த இடத்தை விட்டு அகன்றான். மச்சான் அருணாசலத்துடன் ஜென்மத்துக்கும் பேசுவதில்லை என்று சங்கல்பம் செய்துகொண் டான். பாவி, அவனே எதிரில் வந்து நின்றான்.

மகிழ்ச்சி வெள்ளத்தில் துடிக்க வேண்டிய அருணாசலத்தின் முகம் ஏனோ துக்கசாகரத் தில் ஆழ்ந்தமாதிரி இருந்தது.

''அத்தான்! கோவிச்சுக்காதே! சனியன் பிடிச்ச தேர்தல் விவகாரத்தை மறந்து விடு. இப்பொழுது எங்க பண்ணை எஜமானும், பண்ணையாருமா கூட்டாகச் சேர்ந்து கொண்டு இரண்டு பேர் வயல்களிலும் கரும்பு சாகு படி செய்யப் போகிறார்களாம். சர்க்கார் அனுமதிகூடக் கிடைச்சுடுத்தாம். புது சட்டம் வந்திருக்கிறதாம். அதற்குப் பயந்து கொண்டு இத்தமாதிரி இடீரென்று நடந்ததையெல்லாம் மறந்து விட்டுச் சேர்ந்து விட்டாங்க. நாம் தான் இன்னும் அடிச்சுக்கிட்டு நிற்கிறோம். இந்நேரத்துக்கு நீ உழுதுகொண்டிருந்த நிலத் திலே டிராக்டர் உழுதிட்டிருக்கும். நமக்கும் இனி அங்கே வேலை இல்லை. உங்கள் ஐயாகூட நீ எழுதிக்கொடுத்த 'முச்சரிக்கா'வைக் கிழிச் சுப் போட்டுட்டு, உன்னை வேறே எங்கேயும் போகச் சொல்லி விடுவாருனு தோன்றுது'' என்றான் அருணாசலம்.

எதிர்பார்த்த மாறுதலைக் காணோம், கோபாலுவிடம். ''இத்தனை வருசம் பண்ணை யார் இடத்திலே வேலை செய்துவிட்டு, இப் பொழுது இன்னொருத்தர் நிலத்திலே கால் வைப்பேனா, சும்மாவாவும் குந்துவேன்...'' என்று ஆவேசமாகப் பேசினான் கோபாலு.

இடையில் குறுக்கிட்டான் தபால்காரன். மரத்தை வெட்டச் சொல்லி, மனுக் கொடுத் ததற்குப் பதில் வந்திருந்தது. 'ஆறு வருடங் களாகச் சர்க்காருக்குச் சொந்தமான இடத் தில், சர்க்கார் அனுமதியின்றி, வீடு கட்டின தோடல்லாமல் வசித்து வந்ததற்காக நோட் டீஸ். இது கண்டவுடன் இடத்தைக் காலி செய்து சர்க்கார் வசம் ஒப்புவிக்க வேண்டு மாம். இல்லாவிட்டால், ஸ்தாவர ஜங்கம சொத்துக்கள் பறி முதல் செய்யப்படுவ துடன், அதற்குண்டான தண்டனையையும் அவன் அனுபவிக்க வேண்டுமாம்!

வறட்டியை நெருப்பு கட்டுச் சாம்பலாக்கி விட முடியும். ஆனால், எரிந்து போன வறட் டிச் சாம்பலை மேலும் என்ன செய்துவிட முடி யும் தீயினால்?

கோபாலு நடந்து கொண்டிருந்தான். இல்லை, கோபாலுவின் கால்கள் நடந்து கொண்டு வந்தன. கண்ணில் தேங்கியிருந்த கண்ணீர் வீட்டை மறைத்தது. உள்ளிருந்து அழும் ஓலம் மாத்திரம் தெளிவாகக் காதில் விழுந்தது.

'பாட்டாளியின் நண்பர் நாயுடுவுக்கு ஜே' என்ற முழக்கம் நெருங்கி வந்தது.


















SHALIMAR
PAINT

## 17. உறக்கம்

"அம்பலம் வேகுதடா" என்றான் கால் சோம்பேறி.

"அதைத் தான் சொல்வானேன்?" என்றான் அரைச் சோம்பேறி.

"ஹூம்ம்ம்ம்..ம்" என்றான் முக்கால் சோம்பேறி.

"ம்" என்று முடித்தான் முழுச் சோம்பேறி.

அந் நான்கு சோம்பேறிகளில் 'சிறந்தவன் யார்?' என்று சர்ச்சை ஏற்பட்டது. மத்தியஸ்தர் விதித்தபடி அந்நால்வரும் வயிறு புடைக்க உண்டு ஒரு சத்திரத்தின் திண்ணையின் மேல் படுத்தனர். அப்போது மத்தியஸ்தரின் யோசனைப்படி சத்திரத்தின் பக்கத்திலிருந்த ஒரு குடிசையில் தீப்பிடித்தது. வர வரத் தீயின் வெப்பம் அதிகரித்துத் திண்ணையின்மேல் படுத்திருந்தவருக்குச் சகிக்க முடியாத நிலைக்கு வந்தது. சோம்பலை விட்டு எழுந்து நடந்து தப்பினால் பந்தயம் தோற்றுப் போகுமே என்று ஒவ்வொருவனும் எப்படியோ பல்லைக் கடித்துக்கொண்டு பொறுத்தான். சாதிக்க முடியாத நிலையில் வந்த போதுதான் மேற்சொன்ன விதம் அவர்கள் பேசிக் கொண்டனர். இப்படி ஒரு கதை.

உண்ட பிறகு ஓய்வு பெறுவது அவசியந்தான். அதற்காக முழுச் சோம்பேறியாய்க் கிடப்பதா?

உழைப்பினால் உண்டான உடல் களைப்புத் தீர ஓய்வும், மனத் தளர்ச்சி தீர உறக்கமும் ஆரோக்கிய வாழ்வுக்கு அவசியந்தான். ஆரோக்கிய மண்டபத்தின் நான்கு தூண்களைப் பற்றி எழுதியசமயம் ஓய்வும் உறக்கமும் எவ்வளவு முக்கியமானவை என்பதை விளக்கியாயிற்று.

உடல் உழைப்பினால் சரீரத்தின் உறுப்புக்களுக்குத் தேய்வும் அயர்வும் நலிவும் ஏற்படுவது இயல்பு. ஓடியாடித் திரியாமல் உட்கார்ந்திருந்தாலும் தம் பொறுப்பில் இயங்கிக் கொண்டே இருக்கும் உறுப்புக்களும் சரீரத்தில் உண்டல்லவா? சும்மா இருக்கிறோம் என்ற காரணத்தால் நமது இருதயம் இயங்காமலிருக்கிறதா? சுவாசாசயங்கள் இயங்காமலிருக்கின்றனவா? குடல்களின் சுரப்பும் இயக்கமும் நின்று போகின்றனவா? நமது ஆதீனத்துக்குட்பட்ட கை கால்கள் போன்ற உறுப்புகளின் இயக்கத்தை நிறுத்தும் அளவுக்கு நாம் ஓய்வு பெறலாம். காயம் — வாக் இவைகளின் சேஷ்டையால் அயர்வு தோன்றும் முன் ஓய்வு பெறத் தொடங்க வேண்டும்.




நிமிஷத்துக்கு 72 தரம் துடிக்கும் இருதயமுங்கூட இரண்டு துடிப்புகளுக்கொருதரம் 1/5 செகண்டு காலம் ஓய்வு பெறுகிறது. இதிலிருந்து ஓய்வின் அவசியத்தை இயற்கையே நமக்கு வலியுறுத்திக் காண்பிக்கிறது என்றறியலாமல்லவா? உடலுக்கு ஓய்வு கொடுப்பதிலேயே இவ்வளவு வசதிக் குறைவிருக்க, மனத்துக்கு ஓய்வு கொடுப்பது இன்னும் எவ்வளவு அரிதென்பதைச் சொல்லவும் வேணுமா? சிந்தையை யடக்கியே சும்மா இருக்கும் திறமரிது என்பதுதான் பறைசாற்றப்பட்ட விஷயமாயிற்றே. ஆகவே உடல், மனம் இரண்டுக்குமே ஓய்வு தரக்கூடிய உறக்கம் நமது ஆரோக்கியத்துக்கு மிகவும் முக்கியமானது; அவசியமானது.

சுகம், புஷ்டி, பலம், வீர்யம், அறிவு, ஆற்றல், ஆயுள், ஆரோக்கியம் ஆகியவை போதிய அளவு தூங்குவதால் கிடைக்கும். அவ்விதம் தூங்காததாலோ இவற்றுக்கு மாறான துக்கம் முதலியவை உண்டாகின்றன என்று சாத்திரம் சொல்கிறது.

அகாலத்தில் உறங்குவது, அளவுக்கு மீறி உறங்குவது—தூங்காமலே இருப்பது ஆகியவை காளராத்ரிக் கொப்பவை, அதிபயங்கரமான நாசத்தை விளைவிக்கும் இயல்பு பெற்றவை என்றும் சாத்திரம் சொல்லும்.

இரவில் கண் விழிப்பதால் உடலில் வறட்சி அதிகரித்துவிடும். உடம்பு வலி, தலைபாரம், அடிக்கடி கொட்டாவிவிட்டுக்கொண்டு ஊக்கமில்லாமல் இருத்தல், உடல் தளர்ச்சி, மயக்கம், தலை சுற்றல், அஜீர்ணம் முதலியவை உண்டாவதன்



மேட்டூர் அணை, மெஸர்ஸ் மேட்டூர் கெமிகல் அண்டு இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிமிடெட்டின் என்ஜினியரிங் சூப்பரின்டென்ட். ஸ்ரீ கே. ராஜகோபால் அவர்கள் குமாரி சௌ. லக்ஷ்மிக்கும் மேற்படியூர் ஸ்ரீ கிருஷ்ணமாச்சாரியார் அவர்கள் குமாரன் சிரஞ்சீவி கே. வி. தேசிகன் அவர்களுக்கும் சமீபத்தில் மேட்டூர் அணையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்!

றிப் பல விதமான வாதரோகங்கள் உண்டாவதற்கும் வழிகோலுவதாகும்.

பகலில் உறங்குவதால் கபம், மாமிசம், மேதஸ் ஆகியவை அதிகரிப்பதும் உடல் அதிகம் பருமனாகிப் பற்பல கஷ்டங்களை உண்டாக்குவதும் ஏற்படும். ஆனால் கிரீஷ்மம் என்னும் முதுவேனிற் காலத்தில் எல்லோருக்குமே பகல் உறக்கம் ஹிதமானது.

பேச்சு பிரசங்கங்கள் செய்தல், வழி நடத்தல், வாகனங்களேறிச் சவாரி செய்தல்; மத்யங்களைச் சேவித்தல், அளவு மீறிய விஷயானுபூதி, பளுவெடுத்து நடத்தல் முதலியவற்றால் தளர்ந்தவர், கோபம், சோகம், பயம் முதலியவற்றால் மனம் நலிந்தவர், சுவாசம் (ஆஸ்த்மா) விக்கல் அதிஸாரம் முதலியவற்றால் பீடிக்கப்பட்டவர், சிறுவர், வயோதிகர், பலஹீனர், காயமுற்றவர், வேட்கை, சூலை, அஜீர்ணம் உன்மாதம் முதலிய ரோகங்களால் பீடிக்கப்பட்டவர் — பகலில் சிறிது நேரமாவது தூங்கி எழும் பழக்கமுள்ளவர் ஆகியோரும் முதுவேனிற் காலத்திலன்றி இதர காலங்களிலும் ஓரளவு பகலில் தூங்கலாம்.

உட்கார்ந்தபடியே சிறிது கண்ணை மூடி உடலை ஆட்டும் ஒரு இனத்தவர் உண்டே! அவரைப் பற்றியோ?...

நகைச்சுவைமிக்க நண்பரொருவரைக் காணச் சென்றிருந்தேன். போகும்போது அவர் அறையின் வாசலில் ஒரு 'ஸ்டூ'லின் மேல் உட்கார்ந்திருந்த சேவகன் உட்கார்ந்தபடியே ஆடி விழுந்தவண்ணம் தூங்கிக் கொண்டிருந்தான். ஒருதரம் கனைத்தேன். நண்பரின் அறைக் கதவை விரலால் தட்டினேன். இதற்குள் நண்பர் சேவகனை விளிக்கும் மணியைத் தட்டினார். அவன் விழிக்கவில்லை. கதவைத் திறந்து கொண்டு போய் நண்பரைக் கண்டதும், ''ஆமாம்! இந்தச் சேவகனுக்கு என்ன சம்பளம்?'' என்று கேட்டேன்.

''அதைப் பற்றி ஏன் கவலை? உங்களால் அவன் வேலையைச் செய்ய முடியாது. உங்களுக்கு அந்த உத்தியோகத்தைத் தர மாட்டார்கள்'' என்றார் நண்பர்.

''அதென்ன ஐயா, அவ்வளவு கடினமான வேலையா? சம்பளம் ரொம்ப இருக்குமோ?'' என்று கேட்டேன்.

''இந்த ஸ்டூலின் மேல் உட்கார்ந்தபடியே கீழே விழாமல் ஆடிக் காற்றில் தென்னையைப் போல் ஆடிக் கொண்டே தூங்க வேண்டும். இதைத் தினமும், மாதம் முப்பது நாளும் செய்ய வேண்டும். இந்த 'இருக்கையில் உறக்கம்' ஒரு கலை. இந்தக் கலையில் இவன் ஒரு 'கலைஞன்'. இதற்காக இவனுக்கு ஒரு 'டோகன்' சன்மானம். மாதம் ரூபாய் ஐம்பத்தி எட்டு மாத்திரம்'' என்றார்.

பகலில் இருந்தபடியே உறங்குவது (சிறிதுதான்) கபத்தையும் அதிகரிக்க விடாது. உடலைச் சம நிலையில் நிறுத்தும்.

உடற் பருமன் அதிகமுள்ளவரும், நெய் முதலிய பசையுள்ளவற்றைச் சேவிப்போரும் பகலில் உறங்கக்கூடாது.

விஷங் கொண்டவரும் 'கண்ட ரோகம்' என்னும் தொண்டை நோய்கள் உள்ளவரும் இரவிலுங்கூடத் தூங்கக் கூடாது.

'கடமை வழுவாது நடந்துள்ளேன்' என்ற மனத்தினனாய்க் கவலையற்றிருப்பவனுக்கும், உடலுழைப்பு குறைவில்லாமல் இருப்பவனுக்கும் தூக்கமில்லை என்ற நிலை ஏற்படாது.

அதிக தூக்கமுள்ள முழுச் சோம்பேறிகளுக்கு உபவாசம், வாந்திக்கு மருந்து சாப்பிடல், மனக் கவலையை யுண்டாக்கிடல் ஆகியவை ஹிதமாகும். கண்ணுக்கு அஞ்சனங்கள் தீட்டலும் நல்லது.

அகாலத்தில் உறங்குவதால் சித்தக் குழப்பம், ஜுரம், அசதி, பீனஸம், தலைவலி, உடல் வீக்கம், உடலில் ஒரு கனம் தோன்றல், அமிதமான சோம்பல் ஆகியவை யுண்டாகும்.

ஆகவே அளவோடு, உடல் உழைப்பையும் மனச் சலிப்பையும் ஈடு செய்யும் அளவுக்கு இரவில் கிடந்துறங்க வேண்டும். ஒருகால் இரவில் கண் விழிக்க நேருமானால் அதில் பகுதி நேரம் மறுநாட் காலையில் வெறும் வயிற்றில் கிடந்துறங்கி உடலைத் தேற்றிக் கொள்ளல் வேண்டும். மனமும் திடம் பெறும்.



# வேய்ங்குழல்

சங்கர்

ஊரே அயர்ந்த நித்திரையில் ஆழ்ந்திருக்கும்பொழுது நகர எல்லைக்கு அப்பால் இருந்த அந்தப் பாழ் மண்டபம் மட்டும் விழித்துக் கொண்டிருந்தது....

"ம்...ஊதுங்கள் சுவாமி!" என்று புல்லாங்குழலை நீட்டிய வண்ணம் அழாக்குறையாக இறைஞ்சினாள், துறவுக் கோலத்தில் நின்ற அந்த இளம்பெண். அவள் கழுத்திலும் அளகபாரத்திலும் பொருந்தி நின்ற துளவ மணிகள் நிலா வெளிச்சத்திலே மின்மினிப் பூச்சிகளைப் போல மினுமினுத்தன.

"ஊதுகிறேன்; ஆனால் அந்த லயத்தில் உன்னை நீ மறந்துவிடக் கூடாதே என்றுதான் பயப்படுகிறேன்" என்று சொல்லிய வண்ணம் வானத்தை அண்ணாந்து பார்த்து ஒரு புன்னகை புரிந்தார் துறவி. அவரும் இளம் பிராயம்தான்! மாலைப் பிரார்த்தனையின்போது மனம் எங்கெல்லாமோ தறி கெட்டு அலைந்ததின் விளைவு, இப்படி நட்ட நடுநிசியில் வந்து பயமுறுத்தும் என்று அவர் கண்டாரா, என்ன?

பெண்ணோ ஒரே பிடிவாதம் பிடித்தாள். துறவிக்கு வேறு வழியில்லை. கண நேரம் கண்ணை மூடிக்கொண்டிருந்து விட்டுக் குழலைக் கையிலே வாங்கி உதட்டில் பொருத்தினார். இத்தனை காலமும் செத்துக் கிடந்த புல்லாங்குழலுக்குள் எங்கிருந்தோ ஒரு ஜீவசக்தி ஓடி வந்தது. அந்தச் சக்தி இசை வடிவாக நெளிந்தபொழுது காற்று சிலிர்த்தது. கல் மண்டபத்திலிருந்த அத்தனை தூண்களும் பரவசத்தில் பெருமூச்சு விட்டன!

துறவிப் பெண்கொடி பொங்கிப் பெருகி வரும் இசை மயக்கத்திலே நிலை தடுமாறி விடாமலிருக்கக் கல்தூணைத் தழுவிக் கொண்டாள். கணமுன்னே, குழல் விரித்த பகைப் புலனில் காலக்கனவு ஒன்று எழுந்து வலம் வருவது போலிருந்தது.

★

"ஆனந்தவல்லி! விளையாடுவதற்கு இதுவா நேரம்? இந்நேரம் நாம் நகர எல்லையைத் தாண்டிப் போயிருக்க வேண்டாமா? ம்...புறப்படு சீக்கிரம்!" என்று நந்தவன வாசலில் தயங்கி நின்ற காதலியின் தளிர்க் கரத்தைப் பற்றி அழைத்தான் பிறைசூடி.

ஆனந்தவல்லியோ கண்களில் கண்ணீருடன் காலைத் தேய்த்தாள். கழன்ற சங்கு வளையல்களில் இரண்டு பிறைசூடியின் பிடியிலே சிக்கி நொறுங்கின.

"என்னை மன்னித்துவிடு, பிறைசூடி! இப்போது நான் உன்னுடைய ஆனந்தவல்லி இல்லை. ஏழைத்தாய் ஒருத்தியின் அன்புக்கும் ஆணைக்கும் கட்டுப்பட்ட மகள்! நேற்று சொன்னேன்; இன்று அந்தப் பந்தத்திலிருந்து விடுபட்டு உன்னோடு வருவதற்கு எனக்கு வழி தெரியவில்லை......" என்று சொல்லிவிட்டு முத்து முத்தாகக் கண்ணீரை உகுத்தாள் அவள்.

மேலே வானத்து விடிநிலவை எங்கிருந்தோ ஊர்ந்து வந்த கார்மேகப் பாம்பு திடீரென்று வளைத்துக் கொண்டது. நிலவின் வேதனை இருளாகக் கீழே கவிந்தது. என்ன நினைத்துக் கொண்டானோ பிறைசூடி. இரண்டு எட்டுத் தள்ளி வந்தவன் பயணத்துக்குத் தயாராகக் கொண்டுவந்த துணி மூட்டையை ஆவேசம் வந்தவனைப் போல ஆற்று வெள்ளத்தில் வீசியெறிந்து விட்டு அங்கிருந்து புறப்பட்டான்.

சணப் பொழுதுக்குப் பயங்கரமான அமைதி நிலவியது அங்கே. ஆனந்தவல்லி ஒன்றும் தோன்றாமல் செயலற்று நின்றவள் பொங்கி வந்த துயரத்தை அடக்க முடியாமல் ஒரு தரம் விம்மினாள். அந்தச் சத்தத்தில் தூக்கம் கலைந்த நிலக்குயில் ஒன்று 'குக்கூ' என்று ஒற்றைக்குரலைச் சிந்தி விட்டு மீண்டும் கண்ணயரத் தொடங்கியது.




"அப்படியானால் நம் காதல்?..."

"அதற்கு அழிவில்லை. சாந்தி மயமான உலகத்தில் நிச்சயம் உன்னைச் சந்திப்பேன். கவலைப்படாதே!"

பிறைசூடி கல்லாய்ச் சமைந்து நின்று விட்டான். அவனுடைய மௌனம் ஆனந்தவல்லியைக் கொல்லாமல் கொன்றது. வாய்விட்டு அழ வேண்டும் போலிருந்தது அவளுக்கு. சூழலோ, வீட்டின் சுற்றுப்புற நந்தவனம். எங்கே அன்னை விழித்துக் கொண்டு விடுவாளோ என்ற பயம் வேறு அவளை வாட்டி வதைத்தது. இந்நிலையில் மௌனமாகக் கண்ணீர் வடிப்பதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும்?



"என்ன சார்? பாகவதர் மாவு அரைக்கிறார், சில சமயம் மாடு பிடிப்பது போல் கை போய்க் கொண்டிருக்கிறது. இதெல்லாம் எதற்கு?"

"அவர் சங்கீதம் செவிக்கு ஒரு விருந்து என்றுதான் நான் சொல்லி இருக்கிறேனே!"

ஆனந்தவல்லி பழையகதையை நினைத்தாள்! அவள் மனத்திரையிலே பழைய நிகழ்ச்சிகள் அலை மோதிக்கொண்டு தோன்றின.

"பிறைசூடியின் குழலில் என்ன மாயம் இருக்கிறதோ? உதட்டிலே குழலைப் பொருத்தி விட்டால் இந்த உலகத்தைத் தன் வயப் படுத்திக் கொள்கிறான். கற்பனைக்கும் எட்டாத இசைவடிவங்கள் அவன் குழலிலிருந்து நாத வெள்ளமாகப் பெருகி ஓடி வருகின்றன. எப்படி, யாரிடம் கற்றானோ இந்த அபூர்வ வித்தையை?" என்று நந்தவனவாசல் என்ற அந்த ஊரே ஒருமித்து நின்று வியந்தது!

பிறைசூடிக்குக் கூடத் தன்மேலேயே ஒரு வியப்புத்தான். இளம் பிராயத்தில் மேலை மலைச்சாரலுக்கு ஆநிரைகளை மேய்ச்சலுக்காக ஓட்டிச் சென்றவன், என்றோ ஒரு நாள் விளையாட்டுப்போல் மூங்கில் குழலை வெட்டிக் கொண்டு வந்ததும் அதைப் புல்லாங்குழலாகச் செய்து ஊதியதும் நினைவுக்கு வந்தன! மாடு கன்றுகள் பரவலாகத் திக்குக்கு ஒன்றாக மேயப் போனதும் ஏற்படும் தனிமையைப் பயன்படுத்திக்கொண்டு இந்த இசைப் பயிற்சியை மனோதர்ம வழியில் கற்க ஆரம்பித்தான். அந்த இசையே அவன் வாழ்க்கையை ஆட்கொண்டது என்றால் குற்றமில்லை.

"அட, நம்ம செங்கப்ப ஆயர்கோன் பிள்ளையா? என்ன அற்புதமாக ஊதுகிறான். ஒன்றுக்கும் உதவாதவன் என்று மாடு மேய்க்க அல்லவா அனுப்பினார்கள். கல்லும் கசிந்து போகும்படியான ஒரு வித்தை அவனுக்குக் கைவரும் என்று யார் நினைத்தார்கள்?"— இப்படிப் பிறைசூடியின் காதில் விழும்படியாகச் சிலர் புகழ்ந்தபொழுது ஏனோ அவனுக்கு உடல் சிலுசிலுத்தது. அந்த வேகத்தில் காற்றிலே ஏறி வானவெளியெங்கும் பவனி வந்தது அவனுடைய புல்லாங்குழல் இசைத்த இனிய கீதம்!

மரம், செடி, கொடிகள் எல்லாம் கூட மயங்கி நின்றன. ஒரு நாள்....

வீட்டைச் சுற்றி வளைந்திருந்த நந்த வனத்தில் கோயில் நைவேத்தியத்துக்காக மலர் ஆய்ந்து கொண்டிருந்த ஆனந்தவல்லி ஒருகணம் அப்படியே நின்றுவிட்டாள். இது வரை செவிமடுத்திராத தெய்விக ஒலியொன்று-காற்றிலே தள்ளாடி வரும் மலரின் நுட்பமான மணத்தைப்போல வந்து அவள் நெஞ்சைப் பறித்தது.

"என்ன கண்ணு. பூஜைக்கு நேரமாகவில்லை? பறித்தது போதும், புறப்படு" என்று குழலிசையின் இனிமையிலே தோய்ந்து நின்ற மகளை உசுப்பினாள் புவனேசுவரி—ஆனந்த வல்லியின் தாயார்! ஆண்டவன் பணியில் தன்னையே அர்ப்பணித்துக் கொண்ட அவளுக்கு மகளின் நிலை புரிய வெகு நாட்களாயின. ஆனால் அன்றே தாய்க்கு மகள் பறி போனாள். மகளுக்கோ இதயம் பறி போயிற்று!

பிறைசூடியின் வாழ்விலே இப்போது ஒரே மகிழ்ச்சி. வசந்தருது அவன் உள்ளத்திலே நிலைத்தது. இரவு, பகல், நிலாக்காலம், இருட்டுவெளி என்ற பேதங்கள் எல்லாம் அவனுக்கு மறந்து போயின. ஆனந்தவல்லி என்ற அமுதமயமான அழகைக் கைகோத்துக் கொண்டு இன்பலோகத்தை இந்த மண்ணுக்கு வரவழைத்து விட்டான் அவன். அந்த மாயக் குழல் அவனுக்குத் துணை புரிந்தது.

ஆனாலும் கடைசிநேரத்தில்—கனிந்துவரும் தருணத்தில், தன்னைக் கைவிட்டு விடுவாள் ஆனந்தவல்லி என்று பிறைசூடி கனவுகூடக் காணவில்லையே!

★

பிறைசூடி போயே விட்டான்! விழவி புவனேசுவரி நிம்மதிப் பெருமூச்செறிந்தாள். ஆனால் ஆனந்தவல்லியோ? ஏன் இருளுக்குள் தன்னைப் புதைத்துக் கொள்ள வேண்டும்? அவள் நந்தவனத்தை மிதித்து எத்தனையோ நாட்களாகி விட்டன!

விழவிக்கும் தள்ளாத வயது. பக்தியும் வைராக்கியமும் உடந்து மனத்தைத் தள்ளியதால் இனமும் அவளே கோயில் கைங்கர்யத்தைக் கவனித்து வந்தாள். என்றாலும் மலர்ச் செடிகள் வாடி வதங்கின. அருகிலேதான் ஓடையென்றாலும் நீர் மொண்டு விடுவதற்கு நாதி வேண்டாமா? எங்கே பார்த்தாலும் சருகுக் கூளங்களும் புதரும் மண்ட ஆரம்பித்து விட்டன.

"கண்ணு! மலர்வனமே காய்ந்துபோகிறது. எழுந்து போய்த் தண்ணீர் எடுத்து விடக் கூடாதா? செடி கொடிகள் வாடினால் பாபமல்லவா?" என்று மெள்ளப் பேச்சுக் கொடுத்தாள் புவனேசுவரி.

ஆனந்தவல்லி நெஞ்சிலே வளர்ந்த துக்கத்தை யெல்லாம் மறைத்துக் கொண்டு எழுந்து வந்தாள். மகளின் இந்த அவல நிலையைக் கண்ணுற்றதும் புவனேசுவரியின் தாயுள்ளம் நுட்பமான வேதனையால் துடி துடித்தது. கண்களில் நீர்முட்டச் சொன்னாள்:

"ஆனந்தவல்லி! உன்னுடைய கண்ணீர் என் நெஞ்சிலே சுடுகிறது. பெற்ற பாசத்



## ஏன் இப்படி மூச்சுவிடத்திணற வேண்டும்!

'ஸான்பொரைஸ்ட்' டிரேட் மார்க்குள்ள துணிகள் இப்பொழுது தாராளமாக கிடைப்பதால், உடைகள் சுருங்கிப்போய் மூச்சுவிட முடியாமல் நீங்கள் தவிக்க வேண்டிய அவசியமில்லை. 'ஸான்பொரைஸ்ட்' லேபிளுள்ள உடைகளை எத்தனை தடவை சலவை செய்தாலும் அவைகள் சுருங்காமல் உடம்புக்குப் பொருந்தியபடி இருக்கும்.

### லேபிளில் 'SANFORIZED' REGD TO MK இந்த அடையாளம் இருந்தால்

உங்கள் உடைகள் உடம்புக்குப் பொருந்தாதபடி
ஒருபொழுதும் சுருங்காது!

ரிஜிஸ்டர் செய்யப்பட்ட 'ஸான்பொரைஸ்ட்' டிரேட் மார்க்கின் சொந்தக்காரர்களான க்ளுயட் பீபாடி அண்ட் கோ., இன்கார்ப்பரேட்டட் (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏ. யில் இணைக்கப்பெற்றது) அவர்களால் இந்த விளம்பரம் வெளியிடப்பட்டுள்ளது. இந்த கம்பெனியின் சுருங்காது என்பதற்கான கடும் நிபந்தனைகளுக்குட்பட்டு தயாரிக்கப்படும் துணிகளில் மட்டுமே 'ஸான்பொரைஸ்ட்' டிரேட் மார்க் உபயோகிக்க அனுமதி அளிக்கப்படுகிறது.

விபரங்களுக்கு: 'ஸான்பொரைஸ்ட்' ஸர்வீஸ், 95 மெரின் டிரைவ், பம்பாய் 2

தால் உனக்குப் பெரிய துரோகத்தைச் செய்து விட்டேன். பிறைசூடிய பெருமான் என்னை மன்னிப்பாரா ?''

ஆனந்தவல்லி காதைப் பொத்திக் கொண்டாள்! கண்களில் கண்ணீர் பெருகியது.

'' அம்மா, இதென்ன பேச்சு! வாடிப் போகிற மலர்கள் நிறைந்த இந்த நந்தவனத்திலே என்னை வாடா மலராகச் செய்தவள் நீயல்லவா? பாசபந்தங்களில் உழல நினைந்த என்னைப் பரமனின் திருவடிகளுக்குத் திருப்பி விட்ட நீயல்லவா கருணையுள்ளம் படைத்த அருமைத் தாய்.....''

தாய்க்கு வந்த உணர்ச்சிப் பெருக்கில் மகளை அப்படியே ஆலிங்கனம் செய்து கொண்டாள். கண்ணீர்த் திவலைகள் மாறிக் கலந்தன.

காலமாம் பெருவனத்தில் எத்தனையோ பருவக் காற்றுகள் வீசி மறைந்தன. நம்பீசன் கோயில் புண்ணியத் திருப்பணியிலே தன் வாழ்வைப் புனிதப்படுத்திக் கொண்ட புவனேசுவரியும் ஒரு நாள் கண்ணை மூடினாள். ஆனந்தவல்லி அழவில்லை; அரற்றவில்லை. தாய் காட்டிய வழியிலே துறவுக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டு நந்தவன வாசலை விட்டு வெளியேறினாள். கோயில் நின்ற தலமெல்லாம் அவள் குடியிருப்பாயிற்று. நெஞ்சிலே முன்னம் கொண்ட காதலை நீறாக்கி விட்டு அந்த நிலத்திலே பக்திப் பயிரை வளர்த்துக் கொண்டு திரிந்து வந்தாள்.

ஆனால் ஊழ்வினை தன் இலக்கினைத் தேடித் தொடர்ந்தது என்பது அந்தப் பேதைக்கு எப்படித் தெரிய முடியும்?

ஆனந்தவல்லியே எதிர்பார்க்கவில்லை! அவனுந்தான் எதிர்பார்த்தானா? கிடையவே கிடையாது. மனோலயத்திலே ஒன்றுக்கொன்று பிணிப்புண்ட இரு உள்ளங்களும் நெஞ்சிலே துறவுக்கனலை ஏந்திக் கொண்டு திருப்பாலையூர் பாழ்பட்ட மண்டபத்திலே சந்தித்தன!

அந்த அபூர்வமான சந்திப்பிலே தூர்ந்து போன மண்டபத்தின் சூன்யம் கலைந்தோடியது. பழைய நினைவின் சலனம் கொஞ்சமும் இன்றித் தங்களுக்குள் தனித்தனியே வகுத்துக் கொண்ட நியதி வரம்புக்குள் நின்றுகொண்டு பக்தி வழிபாட்டை நடத்தினர் இருவரும்.

ஆனால்?....அன்று பௌர்ணமி நிலவின் ஒளிக்கதிர்களுக்குள் ஒளிந்துகொண்டு ஊழித் தேவனின் தூதுவர்கள் கீழே இறங்கினார்கள்.

'' சுவாமி! இதைத் தங்களுக்கு ஞாபகம் இருக்கிறதா ?'' என்ற வண்ணம் நிசி நிலவில் கிட்ட வந்தாள் ஆனந்தவல்லி — அந்த யௌவனத் துறவி!

பிறைசூடி ஏறிட்டுப் பார்த்தான். மேனியெங்கும் மின்கதிர்கள் பாய்ந்தன!

''புல்லாங்குழல்!''

★

''பிறைசூடி! குழலைத் தூர எறி. இதோ உன் ஆனந்தவல்லி எதிரில் நிற்கிறேன்!''

இசைமண்டலம் எழுப்பிய இனிய மயக்கத்தில் வசமிழந்த ஆனந்தவல்லி ஒரே ஆவேசத்துடன் பிறைசூடியின் கரங்களைப் போய்ப் பற்றினாள். தெய்விக இசையைப் பொழிந்து கொண்டிருந்த வேய்ங்குழல் அவன் உதட்டிலிருந்து நழுவியது.

அவ்வளவுதான்!

இதென்ன பிரளயம் வந்து விட்டதா? ஊழிக்காற்று ஓவென்று உறுமியது. மின்னல்கள் வெட்டிப் பிளந்தன. ''டம டம... டம...'' என்று கல் மண்டபம் சரியும் பேரொலி விண்ணைப் பிளந்தது. இசையின் ஒலி முறிந்ததைப் போலக் கல் தூண்கள் பல நாற்புறமும் சிதறின! தூசிப்படலமோ நிலவினைக் கலக்கி மண்டியாக்கியது.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் ஏதோ பயங்கரமான சத்தம் கேட்ட திருப்பாலையூர் மக்களில் சிலர் நகர எல்லைக்குப் பரபரப்புடன் ஓடி வந்தார்கள். காலம் காலமாக நின்று கால்கடுத்துப் போன கருங்கல் மண்டபம் மண்ணிலே படுத்து இளைப்பாறிக் கொண்டிருந்தது. அதைப் பார்த்ததும் வந்தவர்களுக்குக் கண்கள் கலங்கின.

'' வாருங்கள், போகலாம்'' என்றான் ஒருவன் நெடிய பெருமூச்சோடு.

'' என்னமோ புல்லாங்குழல் ஊதுகிறதைப் போலக் கேட்கவில்லை?'' என்று கூறியவண்ணம் வியப்போடு காதருகே கையைக் குவித்தவாறே ஏதோ ஒரு ஒலியைப் பிடிக்க முயன்றான் மற்றொருவன்.

''அதெல்லாம் ஒன்றுமில்லை. கூதல் காற்று இரைகிறது; அவ்வளவுதான்!''

வந்தவர்கள் எல்லோரும் புரியாத 'புதிரோடு திரும்பினார்கள்!

# நடுத்தெருவில் நாற்பது நிமிஷம்

நா. பார்த்தசாரதி

அது ஒரு முச்சந்தி. இரண்டு ஹைரோடுகளும் ஒரு தெருவும் சந்திக்கிற இடம். அந்த இடத்தில் ஒன்று கூடுகின்ற சந்துகளையும், முடுக்குகளையும் சொல்லி முடியாது. ஜனக்கும்பலும், காரும், வண்டியும், ஜட்காவும், ரிக்‌ஷாவும் சதா புழங்குகிற இடம்.

இவற்றுக்கெல்லாம் முத்திரை வைப்பது போல அந்த முச்சந்தியின் நான்கு திசைகளிலும் நான்கு வேறு அம்சங்கள் சிறப்பாக அமைந்திருந்தன. கலகலப்புக்கும் ஆரவாரத்துக்கும் இவைகளையும் முக்கியமான காரணங்கள் என்று சொல்லலாம்.

வடக்குப் பக்கத்தில் நகரத்தின் ஜெனரல் போஸ்டாபீஸ். மாடியோடு கூடிய பிரும்மாண்டமான கல் கட்டடம்; கட்டடத்தின் முகப்பை எடுத்துக் காட்டும் அழகாகக் கத்திரித்து விடப்பட்ட சவுக்கு மரவேலி.

தென்புறத்தில் நகரத்திலேயே பிரபலமான 'பாங்கு' ஒன்றின் பெரிய கட்டடம். வெள்ளை வெளேரென்று கம்பீரமாகக் காட்சியளிக்கும் நான்கு மாடிக் கட்டடம். வாசலில் முறுக்கி விட்ட கிருதாவும் கத்தியு



மாக விறைத்தது விறைத்தபடியே ஒரு கூர்க் காப்பாராக்காரன் நின்றுகொண்டிருக்கிறான். முன் புறம் முழுவதும் அழகான பல குரோட்டன்ஸ் செடிகள். கண்ணைக் கவரும் வண்ண மலர் குலுங்கும் பூந்தொட்டிகள். அதற்கு இப்பால் இரும்புக் கிராதியோடு கூடிய வாயில்—'கேட்'.

கீழ்ப்புறம் பெண்கள் படிக்கிற கான்வென்ட் ஹைஸ்கூல். அதன் கட்டடம் மஞ்சள் காவி பூசிக்கொண்டு மங்களகரமாகத் தோற்றமளித்தது. பெண்கள் புத்தகமும் கையுமாக உள்ளே போய்க் கொண்டும் வெளியே வந்து கொண்டும் இருக்கிறார்கள்.

மேல்புறம் ரயில்வே 'குட்ஸ்' ஷெட்டிலிருந்து சாமான்களையும், பார்சல்களையும் விலாசதார்கள் வாங்கிக் கொண்டு வருகிற வழியின் பிரதானமான வாசல். கை வண்டிகளும், மேலே மூடப்பெறாத திறந்த லாரிகளும், வேறு வாகனங்களுமாகக் கூட்ஸ் ஷெட்டின் வாசல் 'ஜே ஜே' என்றிருக்கிறது.

இந்த வியூகத்தின் நடுவே தென்புறமுள்ள 'பாங்கு' கட்டடத்தை ஒட்டி நகர பஸ் நிற்குமிடம் வேறு இருந்தது.

ஐப்பசி மாதத்து அடை மழையில் ஒருநாள் காலை அவசரமாகத் தபாலாபீஸுக்குப் போக வேண்டியிருந்தது. மழை, குடைக்கு அடங்குகிற இனுசாக இல்லை. வெளுத்து வாங்கிக் கொண்டிருந்தது. எப்படியோ ஒரு டாக்ஸியை வாடகைக்குப் பிடித்துக்கொண்டு வந்து விட்டேன்.

தபாலாபீஸில் என் காரியம் முடிந்தபோது மழை குறைந்து தூறலாக மாறியிருந்தது. வரும்போது குடை கொண்டு வரவில்லை. நகர பஸ்ஸில் ஏறிப் போய் விடலாம் என்று எண்ணிக் கொண்டு எதிர்ப்புறம் பாங்குக் கட்டடத்தின் ஓரமாக மழைத் துளிகள் மேலே விழாமல் ஒண்டிக் கொண்டு நின்றேன். கைக்கடிகாரத்தில் ஒன்பதரை மணி ஆகியிருந்தது. தெருவில் ஜன நடமாட்டம் மழையின் காரணமாகக் குறைந்திருந்தது. கார், பஸ் முதலியன வழக்கம்போல் போய்க் கொண்டுதான் இருந்தன. தெருவில் கணுக்கால் அளவு தண்ணீர் தேங்கியிருந்தது.

குட்ஸ் ஷெட்டும், தபாலாபீஸும் ஏட்டரை மணிக்கே திறக்கப் பெற்று வேலையை நடத்திக் கொண்டிருந்தன. பள்ளிக்கூடத்துப் பெண்கள் காரிலும், வண்டியிலும் நடந்து குடை பிடித்துக் கொண்டும், கூட்டம் கூட்டமாகவும் தனியாகவும் வந்து கொண்டிருந்தார்கள். பாங்கு வேலை நேரம் பத்து மணி ஆகையால் அப்போதுதான் கதவுகளையெல்லாம் ஒவ்வொன்றாகத் திறந்து கொண்டிருந்தார்கள்.

எனக்குப் பஸ் வரவில்லை! நான் இன்னும் அங்கேதான் நின்று கொண்டிருந்தேன். தெருவிலே தண்ணீரும், என் மணிக்கட்டிலே கடிகாரமும் ஓடிக்கொண்டிருந்தன. மழையில் நனையாமல் ஒண்டி நின்றவாறே அந்த நட்டநடுத் தெருவில் முச்சந்தியின் கலப்பில் வாழ்க்கை எந்த விதமாகப் பெருகியும், குன்றியும், வடிந்தும், தேங்கியும் ஓடுகிறது என்பதை ரசித்து நோக்கினேன். கண்களில் ஆவலும் மனத்தில் சிந்தனையும் கொண்டவனுக்கு இது ரஸமான பொழுது போக்கு அல்லவா?

சல்லடையில் மைதா மாவைக்



கொட்டி உயரத் தூக்கிப் பிடித்தால் 'புரு புரு'வென்று மாவு விழுமே, அந்த மாதிரி மெல்லிய சாரல் விழுந்து கொண்டிருந்தது. பாழாய்ப் போன நகர பஸ் இன்னும் வந்து சேரவில்லை. தெருவையும், கைக் கடிகாரத்தையும், பஸ் வருகிற வழியையும் திரும்பத் திரும்பப் பார்த்துக் கொண்டிருப்பதைத் தவிர வேறு வழி இல்லை.

தெருவைப் பார்ப்பது, சலித்துப் போனால், பஸ் வருகிற வழியையும், அதுவும் சலித்துப் போனால் கைக் கடிகாரத்தையும் பார்த்துக் கொண்டே இருந்ததில் நேரம் கழிந்து கொண்டிருந்தது.

மணி பத்தும் ஆகி அதற்கு மேலும் ஐந்து நிமிஷம் ஆகிவிட்டது. 'பாங்கு' திறந்து வேலை தொடங்கி விட்டது. பாங்கு வாசலில் ஒரு ஆட்டோ ரிக்ஷா வந்து நின்றது. சூட்டும் கோட்டும், டையுமாகக் கண்கள் தெரியாமல் கறுப்புக் கண்ணாடி அணிந்த ஒரு பெரிய மனிதர் அதிலிருந்து கம்பீரமாக இறங்கினார். புத்தம் புதிய தோல் பை ஒன்று அவருடைய கையில் இருந்தது. 'டக் டக்' என்று பூட்ஸ் ஒலிக்க அவர் பாங்கு வாசற்படியில் ஏறிய போது அங்கே நின்ற கூர்க்கா ஒரு வணக்கம் செலுத்தி விட்டு ஒதுங்கி நின்று கொண்டான்.

இவர் இந்த பாங்கின் காரியதரிசியாகவோ, மானேஜராகவோ அல்லது டைரக்டருள் ஒருவராகவோதான் இருக்க வேண்டும் என்று நானாக எனக்குள் ஒரு குருட்டு அனுமானம் செய்து கொண்டேன். அனுமானம் என்பதே அறிவின் குருட்டுத் தனம்தானே?

மணி பத்தும் பத்து நிமிஷமும் ஆகிவிட்டது. குதிகால் உயர்ந்த பூட்ஸும் ஜப்பான் பட்டுக் குடையும் 'பாப்' செய்த தலையுமாக ஒரு ஆங்கிலோ இந்திய யுவதி, உதட்டில் சாயம் பளபளக்க ஒய்யாரமாக நடந்து கான்வென்ட் பள்ளிக்கூடத்துக்குள் நுழைந்தாள்.

'விர்'ரென்று வாயு வேகத்திலே ஒரு சிவப்பு வர்ண சைக்கிள் தபாலாபீஸுக்குள் போயிற்று. அதன் மேல் உட்கார்ந்திருந்த தந்திப் பியூனுக்கு ஏன்தான் அவ்வளவு தலை போகிற அவசரமோ? ஏதோ குதிரைப் பந்தயத்தில் குதிரையை ஓட்டிக்கொண்டு போகிற 'ஜாக்கி'யைப் போல அசாத்திய வேகத்தில் ஓட்டிக் கொண்டு போகின்றான்.

மேற்கே 'கூட்ஸ் ஷெட்' வாசல் பார்சலில் வந்த சாமானை ஏற்றிக் கொண்டு புறப்பட்டு வருவதற்குத் தயாராக நின்றது ஒரு கை வண்டி. அதன் பக்கத்தில் மூன்று பேர்கள் நின்று கொண்டிருந்தார்கள். ஒருவர் பார்சலின் சொந்தக்காரர். தூரத்திலிருந்துபார்த்த என் பார்வைக்கு அசைப்பில் அவர் நான் அடிக்கடி மருந்து வாங்கச் செல்லும் ஒரு மருந்துக் கடையின் சொந்தக்காரர் போல் தோன்றினார். 'கடைக்கு ஏதாவது மருந்துச் சாமான்கள் பார்சலில் வந்திருக்கும், எடுத்துக் கொண்டு போவதற்காக வந்திருப்பார்' என்று எனக்குள் எண்ணிக் கொண்டேன். மற்றும் இரண்டுபேரில் ஒருவன் கைவண்டியை முன்புறமிருந்து இழுப்பவன். இன்னொருவன் பின்புறமிருந்து தள்ளுபவன்.

பத்து மணி பன்னிரண்டு நிமிஷம், மூன்றரை செகண்டு ஆகியிருந்தது! 'கூட்ஸ்' ஷெட்டிலிருந்து கைவண்டி கிழக்கு நோக்கிப் புறப்பட்டது. அதே சமயத்தில் தபாலாபீஸில் இருந்து அந்தத் தந்திப் பியூன் தன் சைக்கிளை அசுர வேகத்தில் மேற்கு நோக்கிச் செலுத்தினான். 'பாங்கு வாசற்படியிலிருந்து 'டக் டக்' என்று ஆள் இறங்கி வருவதற்கு அறிகுறியான பூட்ஸ் ஒலி கேட்டது. திரும்பிப் பார்த்தேன். கறுப்புக் கண்ணாடிக்காரர் தோல் பையும் கையுமாக வந்து கொண்டிருந்தார். அவர் ஏறிக் கொண்டதும் ஆட்டோ ரிக்ஷா கிழக்கு நோக்கிக் கிளம்பியது.

கிழக்கே பள்ளிக்கூடத்து வாசலிலிருந்து அந்த லிப்ஸ்டிக் அழகி கையில் ஒரு கத்தை பைல்களுடன் குடையை ஒயிலாகப் பிடித்துக் கொண்டு தெருவில் வடக்கு நோக்கி இறங்கினாள். கிழக்கே இருந்து ஒரு போலீஸ் லாரி வந்து கொண்டிருந்தது.

திடீரென்று மழை பெரிதாகப் பெய்யத் தொடங்கி விட்டது. 'சட சட' வென்று மழை ஓசை. கடிகாரத்தை மீண்டும் பார்த்தேன். மணி சரியாகப் பத்தே கால்!

'படார்!' என்ற பேரிடி போன்ற ஓர் ஓசை. அதை அடுத்து 'ஐயோ' என்ற அலறல் ஒலிகள். திடுக்கிட்டுப் போய்த் தலை நிமிர்ந்து பார்த்தேன்!

பார்சல் சாமான்கள் வந்த கைவண்டியும், இவை இரண்டுக்கும் இடையே பாங்கிலிருந்து போன கறுப்புக் கண்ணாடிக்காரரின் ஆட்டோ ரிக்ஷாவும் சிக்கிக் கொண்டிருந்தன. இந்தப் பயங்கரமான மோதுதலில் சிவப்புச் சைக்கிள் தந்திப் பியூனோடு வடபுறம் தூக்கி எறியப்பட்டிருந்தது. கையிலிருந்த பைல்கள் தண்ணீரில் சிதறி மிதக்க உடம்பெல்லாம் சேறாகி அலங்கோலமான நிலையில் தெருவில் நின்றாள் ஆங்கிலோ இந்திய அழகி.

கறுப்புக் கண்ணாடிக்காரரின் தோல் பை திறந்து அதிலிருந்து கத்தை கத்தையாய்ப் புத்தம் புதிய ரூபாய் நோட்டுகள் சிதறின. மருந்துக் கடைப் பார்சலில் சாதிக்காய்ப் பெட்டி உடைந்து விட்டதனால் உள்ளே இருந்த பாட்டில்களின் நுனி வெளியே தலை நீட்டின. தந்திப் பியூனின் பையிலிருந்து தந்திகளும், தந்தி மணியார்டர் பாரங்களும் ரூபாய் நோட்டுகளும், முழு ரூபாய் நாணயங்களும் சில்லறைகளுமாக நாலாபக்கமும் சிதறி விழுந்திருந்தன.

எதுவும் சிதறாமலும், சிந்தாமலும் சேதமின்றிப் பிழைத்தது போலீஸ் லாரி ஒன்றுதான். லாரியிலிருந்து மடமடவென்று மழையில் நனைந்து கொண்டே போலீஸ்காரர்கள் இறங்குவதைக் கவனித்தேன்.

விநோதமான இந்த விபத்தை, மழையில் நனைந்து கொண்டாவது மேலும் பார்க்க வேண்டும் என்றுதான் எனக்கு ஆசை. ஆனால் என் ஆசை அந்த பஸ்ஸுக்குத் தெரியாததனாலோ, என்னவோ, அது வந்து விட்டது.

"சரி! எங்கே போய்விடப் போகிறது? நாளைக்குப் பத்திரிகையில் விபத்தைப் பற்றித் தெரிந்து கொண்டால் போயிற்று" என்று நினைத்துக் கொண்டு பஸ்ஸில் ஏறி வீட்டுக்கு வந்து விட்டேன். நாற்பது நிமிஷம் நடுத் தெருவில் மழைக்கு ஒண்டிக் கொண்டு நின்றதே அதிகம். அதற்கு மேலும் நின்றால் என் நேரம் பாழாய்ப் போய் விடுமே என்ற

# 'அனாஸின்'

## மிகச்சிறந்தது, அதில் நான்கு மருந்துகள் சேர்ந்துள்ளன

1. க்வினாயின் சல்பேட் 2. காப்பின்
3. பினாஸிடின் 4. ஆஸிடில்ஸாலிஸிலிக் ஆஸிட்

வலிகளுக்கு நிவாரணமளிப்பதில் புகழ் பெற்ற 'அனாஸின்' விஞ்ஞான முறையில் சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். இவைகள் நரம்புகளின் கேந்திர ஸ்தானங்களில் கூட்டாக வேலை செய்து, தலைவலி, ஜலதோஷம் ஜுரம், பல்வலி, மற்றும் தசைவலிகளுக்குத் துரிதமாயும் அபாயமின்றியும் நிச்சயமாயும் நிவாரணம் அளிக்கிறது. வலிகளுக்குத் துரிதநிவாரணமளிப்பதில் அனாஸினுக்கு இணையொன்றில்லை... அனாஸினைப் போல் தீங்கு விளைவிக்காத வில்லை வேறொன்றில்லை. ஆகவே ஞாபகமிருக்கட்டும் 'அனாஸின்' ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். அது ஹிருதயத்திற்குத் தீங்கு விளைவிக்கவோ அல்லது வயிற்றுக் கோளாறுகள் உண்டு பண்ணவோ செய்யாது. 'அனாஸின்' லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கிறது. 'அனாஸின்' விலை ஒவ்வொருவர் சக்திக்கும் ஏற்றது. ஒரு பாக்கெட்டின் விலை அணா 2 மட்டுமே

**நான்கு**
மருந்துகளின்
சேர்க்கையான
**'அனாஸின்'**
வேண்டுமென்றே
கேளுங்கள்





பையன்:— ஐயா! இந்தப் புத்தகத்தைக் கொஞ்சம் சொல்லிக் கொடுங்க!

கடைக்காரர்:— சொல்லித்தர யாராவது வாத்தியாரைப் போய்ப் பாரு, தம்பி!

---

கவலையும் ஒருபுறம். எழுத்தாளனுக்கு நேரம் தான் வியாபார முதல்! அதை விரயம் செய்தால் தொழில் என்ன ஆவது?

மறுநாள் பொழுது விடிகிற வரையில் அந்த விபத்து என் மனத்தைவிட்டு அகலவே இல்லை. தற்செயலாக நிகழ்ந்த ஒரு சங்கமம் போல, இயற்கையின் முறைதவறிய நாடகம் போலத் தோன்றியது.

ஐந்து பேர்களை அவர்கள் போகும் திசைக்குப் போக விடாமல், செய்யும் செயலைச் செய்ய விடாமல் நடுத் தெருவில் தடுத்து உருட்டிய அந்த விபத்து வேண்டுமென்றே இயற்கை செய்து முடித்த சதியா? அழகான யுவதி, கம்பீரமான சீமான் ஒருவர், வேகமாகச் சைக்கிள் ஓட்டும் தந்திப் பியூன்; நரம்புகள் வலிக்க வண்டி இழுக்கும் கூலி, எங்கோ போய்க் கொண்டிருந்த போலீஸ் லாரி;—ஆக மொத்தம் ஐந்து பேர்களை ஐந்து வழிகளை, ஐந்து இலட்சியங்களை, ஒரே இடத்தில் ஒரு சமயத்தில் சிதறிப் போகச் செய்த விதியை எப்படித் தூற்றுவது? அல்லது பாராட்டுவது?

பொழுது விடிந்தது! பத்திரிகையும் வந்தது! அதில் விபத்தைப் பற்றிய செய்தியும் வந்திருந்தது.

**இயற்கையின் விநோதமான சந்திப்பு!**
**போலீஸுக்கு உதவிய விபத்து!!**
**ஜெனரல் போஸ்டாபீஸ் அருகே அதிசயமான சம்பவம்!!!**

கதைகளில்கூட நடந்திருக்க முடியாதென்று சொல்லத் தக்க ஒரு அதியற்புதமான சம்பவம் நேற்றுக் காலை பத்தே கால் மணி சுமாருக்கு ஜெனரல் போஸ்டாபீஸ் அருகே நடந்தது. நகர் முழுவதும் அகஸ்மாத்தாக நடந்த இந்த அதிசயத்தைப் பற்றியே பேச்சாக இருக்கிறது.

"மேற்கே குட்ஸ் ஷெட்டிலிருந்து வந்து கொண்டிருந்த மருந்துக்கடைப் பார்ஸல் அடங்கிய கைவண்டி ஒன்றும், கிழக்கேயிருந்து வந்து கொண்டிருந்த போலீஸ் லாரி ஒன்றும், தெற்கே பாங்கிலிருந்து வந்து கொண்டிருந்த ஆட்டோ ரிக்ஷாவும், வடக்கே தபாலாபீஸிலிருந்து வந்து கொண்டிருந்த தந்திப் பியூனின் சைக்கிளும், நேற்று காலை பத்தேகால் மணி சுமாருக்கு ஒரே சமயத்தில் மோதிக் கொண்டன. இந்த மோதலின் நடுவே கான்வென்ட் ஸ்கூலிலிருந்து வந்து கொண்டிருந்த ஆங்கிலோ இந்திய யுவதி ஒருவரும் அகப்பட்டுக் கொண்டார். விபத்து நடந்த போது மழை பலமாகப் பெய்து கொண்டிருந்தது. பாங்கியிலிருந்து வந்த கறுப்புக் கண்ணாடிக்காரர், தபாலாபீஸிலிருந்து வந்த தந்தி பியூன், கைவண்டி இழுத்து வந்த கூலி, கான்வென்ட் ஸ்கூலிலிருந்து வந்த யுவதி ஆகிய நால்வருக்கும் சிறு சிறு காயங்கள் பட்டிருப்பதனால் அவர்கள் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப் பட்டிருக்கிறார்கள்.

ஆஸ்பத்திரியில் அவர்களுக்குச் சிகிச்சை முடிந்ததும் போலீஸார் அவர்களைப் புலன் விசாரித்ததில் விபத்தின் காரணமாக அற்புதமான சில உண்மைகள் வெளிப்பட்டன.

விசாரணை நடந்து கொண்டிருக்கும் போதே முறையே பாங்கு, போஸ்டாபீஸ், கான்வென்ட் ஸ்கூல், ரயில்வே குட்ஸ் ஷெட் ஆகிய நான்கு இடங்களிலிருந்தும் நான்கு ரிப்போர்டுகள் போலீஸுக்கு வந்து சேர்ந்தன. எல்லா ரிப்போர்டுகளிலுமே நேரம் பத்தே கால் மணி என்று குறித்திருந்தது.

கறுப்புக் கண்ணாடி அணிந்த ஒருவர் பத்தாயிரம் ரூபாய்க்குக் கள்ள நோட்டுக்களைக் கொடுத்து விட்டு நல்ல நோட்டுக்களை மாற்றிக்கொண்டு போய்விட்டதாகப் பாங்கியிலிருந்தும், ஒரு கேடி தந்திப் பியூனின் உடையில் வந்து மணியார்டர் பாரங்களையும், பணத்தையும் திருடிக் கொண்டு தப்பி விட்டதாகத் தபாலாபீஸிலிருந்தும், ஒரு ஆங்கிலோ இந்தியப் பெண்மணி போல வந்து ஜில்லா கல்வி அதிகாரியின் அந்தரங்கக் காரியதரிசி என்று சொல்லிப் பள்ளிக்கூடத்துப் 'பைல்களை'க் கடத்திக் கொண்டு போய் விட்டதாகக் கான்வென்ட் ஸ்கூலிலிருந்தும், மருந்துக் கடைக்காக வந்த பார்ஸலில் சாராயப் புட்டிகள் இருக்கலாமென்று சந்தேகிப்பதாக ரயில்வே குட்ஸ் ஷெட்டிலிருந்தும், — ரிப்போர்ட்டுகள் வந்திருந்தன. போலீஸார் நான்கு பேர்களையும் கைது செய்தனர். இந்த அதிசய விபத்தில் உயிர்ச்சேதமே இல்லை என்பது குறிப்பிடத் தக்கது."

பத்திரிகை படிப்பதாகத் தெரியவில்லை. சுவாரஸ்யமாகக் கனவு காண்பது போலிருந்தது. அன்று அந்த நட்ட நடுத் தெருவில் நாற்பது நிமிஷத்துக்குள் லாரியும், வண்டியும், சைக்கிளும், ஆட்டோ ரிக்ஷாவும் மட்டுமா மோதிக்கொண்டன? நான்கு திருடர்களின் அதிர்ஷ்டமும் மோதிச் சிதறித் தான் தூளாகிவிட்டது. நான்கு நேர்மையற்ற எண்ணங்கள் பாழ்பட்டு விட்டன.

அதிசயமான நிகழ்ச்சிகளெல்லாம் கதையில் தான் வரவேண்டுமா? கற்பனையில்தான் நிகழ வேண்டுமா? வாழ்க்கையில் வரக் கூடாதா, என்ன?

Printed and Published by T. Sadasivam at the Kalki Press Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon



ஊங்கள் மனதிற் குகந்த பவுடர்
வசீகர நறுமணங் கமழ்வதான...
# பியர்ஸ் டால்கம்






கொள்ளைகொள்ளும் நறுமணம், சருமத்தோடு குலவும் இன்பம், பியர்ஸ் மென்மை — இவ்வளவையும் உங்களுக்கு அளித்திடுவது **பியர்ஸ் டால்கம்!** உன்னதமாக நறுமணமூட்டப் பெற்ற இந்தப் பவுடரை உபயோகித்தால் கோடையின் உச்சநிலையிலும் நீங்கள் மாறாத புது மலர்ச்சியுடன் நாள் முழுவதும் மிளிர முடியும். இள மஞ்சள் நிறமும் பச்சை நிறமும் எடுப்பாக அமையப்பெற்ற டின்களில் வரும் **பியர்ஸ் டால்கம்** பவுடரை வாங்குங்கள்.




மேனியின் பராமரிப்புக்கு, க்ளி ஸரின் அடங்கிய **பியர்ஸ் சோப்** உபயோகியுங்கள். தூய்மையே உருவான சிறந்த சோப் பியர்ஸ் தான் என்பது உங்களுக்கே புலப்படும்!